M. V. G. Publications,

Bhagavatha Series No. 1.

# Kuchelar.



A DRAMA IN FIVE ACTS.





M. V. Govindaraja Ayyangar.

ஸ்ரீ:

மோ, வெ, கோ. பிரசுரங்கள்,

பாகவதத் தொகுதி: பகுதி 1.

# குசேலர்.

ஐந்தங்க முள்ள அருந்தமிழ் நாடகம்.

இது

காரைக்குடி

ஸ்ரீ கம்பராமாயண ப்ரசாரகர்

மோ. வெ. கோவிந்தராஜ ஐயங்காரால்

இயற்றப்பெற்றது.

---

வித்யாபாநு பத்ராதிபர்

வித்வான் எஸ். சாமிநாதையர் அவர்கள்

எழுதிய

இங்கிலீஷ் முன்னுரையுடன்

கூடியது.

முதற்பதிப்பு: 1000 பிரதிகள்.

லோகமித்ரன் ஆபீஸ்

நாகநாதபுரம்

காரைக்குடி.

## தமிழ்த் தெய்வ வணக்கம்.

---

" பொருப்பிலே பிறந்து தென்னன்
புகழிலே கிடந்து சங்கத்
இருப்பிலே யிருந்து, வைகை
யேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர்
நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை
மருங்கிலே வளருகின்றாள். "

## தமிழாசிரியர் வணக்கம்.

---

குருமணியை யினகுலத்தி
னல்வேதக் குணமணியைக்
குறிக்குங் கம்பர்க்

குருமணியை யமுதொழுகு
மொழிதந்த முனிமணியை
யுவக்கு மேதைக்

குருமணியைப் புதமணியை
யிருமறைதே ரருண்மணியை
யுயர்கோ பாலக்

குருமணியைச் சிரமணிவை
கதிமணியைக் குறுகிடவே
கூர்ந்து நெஞ்சே.

*Sri,*

# INTRODUCTION.

---

The Character of Kuchela is the emboidment of the highest virtues among the Hindu Puranas. The story of Kuchela is so well known that it neads no narration. There is already a poetical work in Tamil known as *Kuchelopakyanam* widly read in the tamil country.

The Story of Kuchela is narrated by Bhagavatas at all times and in all places. However, it is a pity, that such a popular story, has not been dramatized by any author in the tamil language; and this defect has been rectified by my friend *Mr. M. V. Govinda Raja Ayyangar,* of *Kambaramayana fame,* who has prepared a drama in tamil, in simple chaste and popular style for the use of the tamil country.

The work consists of V Acts and each act is divided into III Scenes. My friend asked me to write an introduction simply ont of my love and admiration for the character of Kuchela. It would have been much better had the work been entrusted to better hands.

The work bristles with apt quotations from the classical works of the Alwars and Kamban and is original in its plot etc. though based on Srimat Bhgaavatha

and is clothed in homley and popular expressions inculcating pure bhakti and very chaste and noble ideas. The conversational style adopted throughout will, I am sure, entertain every young reader both male and female.

The author carefully introduces his characters who have been given suitable names of his own coinage and gives the picture of the national life without spoiling the *Nava Rasa* characteristic of the drama.

The poverty has been depicted in its true colour but the picture has not been overdrawn. The contentment and Iswara Bhakti, the highest happiness for a poor man in this world of turmoils, has been maintained throughout the work by the author. The work ought to be in the hands of every boy and girl and is in every way fit to be introduced as s text book in all the boys' and girls' at least as a nondetailed one in every Secondary and Primary Schools.

The work, I am sure, will revolutionize the conduct of modern school boys and girls, many of whom being ignorant of how to behave towards elders. Any ordinary reader cannot but, be struck with the beautiful conversation and behaviour of Susheela and Padmavati in the first two Acts. It is fit to be dramatized in every girl School.

The author gives a true picture of a poor brahmin household, leading a pure and noble life. Bhakti predominates throughout the work. And as such, it is

hoped that the work will be read in every Hindu household with much profit and the simple and pure life depicted in the work will be followed by a very good householder in the Tamil land.

The author has admirably brought out some of the patent vices of the society of modern days. The work does not make a show of learning and every Hindu virtue is nobly drawn up in homly and simple style.

I believe, well wishers of our world renowned simple homelife of the Hindus, will patronise the author that he may be encouraged in writing many more works of this stamp, popularising the grand truths contained in our sacred works. The reader will understand the other beauties, which cannot be detailed in brief indroduction like this.

Though written as a drama it has the sweetness of a novel too. And the reader, I am sure, when he begins to read it once, will not lay down the book without finishing it. It has needless for me to add more, as I am afraid I will be trespassing into the readers' own judgement of the work. And I leave the rest to the readers themselves.

The athour is not unknown in the land. He was editing an instructive and well written Tamil journal known as "*Lokamitran*" for some years, and is already known to tamil scholars and to intelligent public as good

lecturer in Kambaramayana. In these days of novels containing sometimes objectionable matters of vitiated taste, the appearance of this noble work at this time, should be welcomed by all who are intersted in Tamil literature especially, the books written for the youngsters and school children.

Though mainly written for the young, it is worthy of being read even by elders, cosidering the chaste noble ideas contained in the work. One notewrothy feature of the whole work is that it avoids flowery and ornate style throughout.

The author has carfully used nothing but homely and everyday expressions even in picturing the scenery introduced by him. The rules of Sanathana Dharma have never be neglected or vitiated even in a single place. The Hindu virtues have been brought out with a cautious eye throughout. The ideas are wholly Hindu; western thoughts have been carefully kept out by the author.

In conculsion, I would earnestly request every School manager and pioneers of education in the Tamil land to see this noble work introduced in schools under their influence. I hope to see that the scene III of the Act I and the scene II of the Act IV are put on the stage on important occasions, in every important town of our land, at least in the girls' schools.

KONAPET, January. 1917.

**S. Swaminatha Ayyar,**
*Editor "Vidyabhanu."*

# பதிப்புரை.

---

உலகில் மக்களுக் குறுதி பயக்கும் ஸாதனங்களான நால்வகைப் பயன்களுள், முதன் மூன்றும், பற்றொழித்துப் போதும் என்றெண்ணிய மனமுடை யுயிர்க்கே பொன்செய்யும் மருந்தெனநின்று, ஸாத்ய ரூபமான ஸுகப்ராப்திக்குப் பரமஸாதனமான வீட்டுப்பயனை வலியுறுத்தா நிற்கின்றன. அத்தகைய மனமும், அம்மூன்றனுள் நடுவணதான பொருளின்வழித் திருப்தியைப் பெற்றவிடின், ஏனைய முன்பின்னாய இரண்டினையும் அடைவே பெற்று, ஒப்புரவழித்தாக நிற்கும்.

இந்த உயர்ந்த பழக்கத்தையே மக்கள் பெற்றுய்ப வேண்டுமென நினைந்து நம்பெரியோர் தங்கூரியசீரிய தீஞ்சொற்களில்இலக்கியப் பகுதிகளை இயற்றி, அதனுள் அரியபெரிய உரியநீதிகளை உரைப்பாராகிப் பலபெரியாரது உத்தமசரிதைகளைச் செவ்வனே தந்து நமக்கு ஊக்கத்தை மூட்டியிருக்கின்றார்கள்.

அத்தகைய சரிதங்கள் பலவற்றுள்ளும் நாம் எடுத்துக்கொண்ட குசேலர் சரிதையோ, ‘‘வறுமையிற் செம்மை’’ என்னும் வண்மையினையும், ‘‘கடவுளை நம்பினோர் கைவிடப் படார்’’ என்னும் கட்டுரையினையும், ‘‘பொறுத்திருந்தார் பூபதியாவார்’’ என்னும் புத்தியினையும், ஆங்காங்கு வற்புறுத்திப் படிப்போர்மனத்துள் பசுமரத்தாணியெனப் பதியவைப்பதொன்றாகும்.

இச்சரிதத்தினை ஒருநாடக நூலாகச் செய்துதல் வேண்டுமென்று எனது நண்பரும், திருச்சி ஸெண்ட் ஜோஸப் கலாசாலையின் போதகாசிரியருள் ஒருவருமாகிய மகா-ள-ள-ஸ்ரீ எஸ். ஏ. சுப்ரமணிய அய்யர் பி. ஏ. அவர்கள் சொன்னதன் நிமித்தம், உடன்படலாயிற்று. எற்ப, நானும் அவ்வமயம் அந்தக்கலாசாலையிலேயே தமிழாசிரியனாக இருந்தமையால் அவகாசமும் கிடைத்திருந்தது. ஆகலின்

உடனே ஆரம்பித்து, அதற்கு ஸுதாமன் என்ற நாமம் கொடுத்து, அவர்கள் அப்போது பதிப்பித்துக் கொண்டிருந்த ஸுபோத பாரிஜாதம் என்னும் மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகையின் 1908—1909 வருஷங்களின் பிரசுரங்களாக எழுதிவந்தேன்.

பின்னர், அதனைத் திருக்கண் சாத்திய எனது நண்பரும், ஸ்ரீ கம்பராமாயண உபந்யாஸ பாரங்கதருமான ஸ்ரீமத் பால ஸரஸ்வதி பி. ஆர். கிருஷ்ணமாசாரியார் அவர்கள் அதனை விரைவில் ஒரு புஸ்தக ரூபமாக வெளியிட முயன்றார்கள். யானும் அதற்குடன்பட்டு, அச்சரிதை "ஸுதாமன்" என்ற பெயருடன் உயர்ந்த நடையில் எழுதப் பட்டிருந்ததால், எளியநடைகொண்டு யாவர்க்கும் பயன்படுமாறு செய்விக்க வேண்டுமென்ற அன்னாரது வேண்டுகோட்கு இணங்கி, எளியநடையாக்கி அதன்நாமத்தையும் "குசேலர்" என மாற்றித் தந்தனன்.

உடனே அவர்கள், தமது அருமைநண்பராகி, ஸ்ரீரங்கம் கீழைச் சித்திர வீதியில் வாழும் ஸ்ரீமான் ஜே. கிருஷ்ணய்யங்கார் அவர்களது பொருளுதவியால், திருச்சி வெட்நஸ்டே ரெவ்யூ அச்சியந்திர சாலையில் பதிப்பித்தார்கள்.

அப்போது நான் சிறிது காலம் அங்கிருந்துவிட்டுப் பிறகு, எனது உறவினர் ஒருவரது வாசஸ்தலமாகிய விருத்தாசலம் தாலூகா திட்டகுடி க்ராமத்துக்குப்போய், அங்கேயே ஸ்ரீகம்பராமாயண உபந்யாஸத் தொழிலில் அமர்ந்து விட்டேன்.

1910 ௵த்தில் எனக்கு ஸ்ரீமான் ஜே. கிருஷ்ணய்யங்கார் அவர்களிடமிருந்து, "குசேலருக்கு முகவுரை" வேண்டுமென்ற. வேண்டுகோட்கடிதமொன்று வந்தது. அதற்கு மறுமொழியாக நான் அந்தப் புஸ்தகம் வெளிவருமுன், அதற்கும் எனக்கும் உள்ள சம்பந்தத்தைப் பற்றியும், எழுதிக்கொடுத்தவன் கைம்மாறான நிபந்தனையைப் பற்றியும் எழுதியிருந்தேன்.

பிறகு, எந்த அசௌகரியத்தினாலோ அவர்கள் எனக்குக்கடிதம் எழுதாதுபோகக் கடிதப்போக்கு வரவே இல்லாமற் போய் விட்டது. 1912 ௵த்தில் என்னுடைய ராமாயண உபந்யாஸத்தை முடித்துக் கொண்டு ஸ்ரீரங்கம் சென்றிருந்தபோது, 'குசேலர்' என்னும் புஸ்தகம், முகவுரை முதலிய யாதுமின்றி என் அநுமதியில்லாமலே, இயற்றினார் பெயர் என்பெயராகக்கொண்டு வெளிவந்திருந்ததைப் பார்த்தேன். பின்னர், ஸ்ரீமான் ஜே. கிருஷ்ணய்யங்கார் அவர்களைக் கேட்டதில், அவர்கள் ஸ்ரீமத் பி. ஆர். கிருஷ்ணமாசாரியார் அவர்கள் 500 புஸ்தகங்கள் எடுத்துக் கொண்டு போயிருக்கிறார்கள் என்றும், அவர்கள் வந்தால் ஏதாகிலும் ஏற்பாடு செய்து கொள்ளலாமென்றும் சொன்னார்கள். அப்போது ஸ்ரீமத் கிருஷ்ணமாசாரியார் அவர்கள் இருந்தவிடம் தெரியவில்லை. ஆகையால் அதனுடன் அந்த நடவடிக்கை நின்றுபோய் விட்டது.

பிறகு புஸ்தகங்களும் விசேஷமாக வெளியில் உலாவாமல் ஸ்ரீமான் ஜே. கிருஷ்ணய்யங்கார் வீட்டுப்பீரோவிலேயே தூங்கிக் கொண்டிருப்பதாகவும் தெரிய வந்தது. பலமுறை கேட்டனுப்பியும் பயன்பெறாததனால், இவ்வரிய நாடகம் வெளிவர வேண்டும் என்ற ஆசையுடன், என்னண்பர் ஒருவர் கையில் இருந்த புஸ்தகத்தைக் கொண்டு சிலதிருத்தங்களுடன் இதனை வெளியிட ஆரம்பித்தேன்.

நான், இப்போது காரைக்குடியில் குடியிருந்துகொண்டே கோனாபட்டு அச்சாபீஸில் இதனை அச்சடிக்கும்படி நேரிட்டபடியால்; எனது அவசரத்தினாலும் அச்சாபீஸினாலும் ஏற்பட்டிருக்கும் சில பிழைகளைப் பின்புறத்தில் தொகுக்கப்பட்டுள்ள பிழைதிருத்த அட்டவணையில் வெளிப்படுத்தியிருக்கிறேன்.

அவ்வப்போது, இதனுள் தோன்றிய பிழைகளை எனக்கு எடுத்துக்காண்பித்து உதவிய எனது நண்பர்கட்கு நான்பெரிதும் கடமைப் பாடு உள்ளவனாக இருக்கிறேன்.

இவ்வரியநூல் வெளிவந்து நிலவுவதன்பொருட்டு அவ்வப்போது எனக்குப் பொருள் தந்துதவிய, காரைக்குடி ஸ்ரீமான் அ. சித. அ. சிதம்பரஞ்செட்டியார் அவர்கள் முதலிய எனது நண்பர்களாகிய தனவைசிய மணிகட்கும் மிகவும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன்.

தவிர, தமது தேஹச்ரமத்தையும் கவனியாது இந்நூலுக்கு இங்க்லீஷில் ஒருமுன்னுரையை எழுதித்தந்து, புஸ்தகமும் விரைவில் வெளிவருவதற்கு வேண்டிய முயற்சிகளும் செய்துதவிய, வித்தியா பாருபத்ராதிபர் வித்வான் ஸ்ரீமத் எஸ். சாமிநாதையர் அவர்களுக்கும், இதனைத் தாமதமில்லாமல் வெளிப்படுத்தித் தரும்படி உத்தரவு செய்து முடித்துக் கொடுத்துதவியவரும் கோனுபட்டு தனவைசியன் பிரஸ் பாத்யஸ்தர்களில் ஒருவரும் என் நண்பருமான ஸ்ரீமான் சு. முரு. ஷண்முகஞ்செட்டியார் அவர்கட்கும் என் நன்றிமறவாத கடமையைச் செலுத்துகிறேன்.

இதனை முதன்முதல் புஸ்தகரூபமாக வெளிப்படுத்தவேண்டுமென்று என்னைத் தூண்டிய நண்பர் ஸ்ரீமத் பாலஸரஸ்வதி பண்டித டி. ஆர். கிருஷ்ணமாசார்யார் அவர்கட்கும், முதலில் "ஸுதாமன்" என்னும் பெயருடன் இந்த நாடகத்தைத் தமது பத்திரிகையாகிய "ஸுபோத பாரிஜாத"த்தில் வெளிப்படுத்துதவிய நண்பர் மஹா-ள-ள-ஸ்ரீ. எஸ். எ. சுப்பிரமணிய ஐயர் அவர்கட்கும் எனது கடமையைச் செலுத்துகிறேன்.

இதனை மறுபதிப்பில் வெளிப்படுத்தவும் தமிழுலகில் நிலவிவரவும் கருணைசெய்யும் வள்ளலாகி, யாவரது இருதயகுகையிலும் நின்றொளிரும் அருட்பெருஞ் ஜோதிக்கு அநவரதமும் அடிமையாவதை மறவாதிருக்கிறேன்.

மோ. வெ. கோ.

# சிறப்புப்பாயிரம்.

மகிபாலன்பட்டி வித்வான் மகா-ா-ா-ஸ்ரீ
மு. கதிரேசச்செட்டியார் அவர்கள்,
இயற்றியது.

நேரிசையாசிரியப்பா.

பொன்றிகழ் மருமத் தோன்றிய திருமால்
பத்தியிற் சிறந்த வுத்தமர்க் கருள்வான்
மேற்கொள்பஃ றேற்றத் தேற்கு மிறுதிப்
பிறப்புடை ஞானத் திறப்படு கண்ணன்
கருணையு நட்பும் ஒருவழிக் கொண்ட
மாதவக் குசேல மறையவன் சரிதம்
மேதக வுடையார் ஓதினர் புராணத்
தாங்கது கற்போர்க் கோங்குறும் பயனுணர்ந்
தாரிய வாங்கிலச் சீரியன் முறையில்
நாடக வொழுங்கிற் பீடுற வியற்றினன்
அன்னவனி யாரெனிற் றுன்னுபல் வளனு
நன்னர் நிறைவுறு நாமக் கல்லெனு
நகரிடை யிருந்து காட்டுக் கோட்டை
நகர வைசியர் நலம்பெறு காரைப்
பதிவயிற் போந்து விதிமுறை மாணவர்
பலருந் தமிழியல் புலமுறத் தருநற்
றொழிலுடைப் புலவன் கழிவில்பல் குணங்கள்
உடையா னன்பிற் றடையாதி யாருஞ்
சோதா ரென்னும் போதமும் பொறுமையுங்
கற்றுங் கொழுகுங் குற்றமில் சீலமு

மிக்கோ னவைக்கட் டக்கோர் பலர்முன்
கம்பர் கவிப்பொரு ளின்பம் பயப்பக்
கூறுந் திறனுடை மாறில் காட்சியன்
குலமறை வைணவக் கோவிந்த ராஜன்
என்னும் பெயரினன் என்ப விவனவில்
இந்நூ லகத்தே யிரப்பி னிகழ்ச்சியும்
வறுமையிற் செம்மையும் பொறையின் மாட்சியும்
தெய்வங் கொள்கையே யுய்தி யுதவு
மென்னு மூன்மையும் இன்ன பலவாம்
அறப்பா லனகன் குறக்காண் டலினிக்
காடக மெவர்க்கு நீடுறு பயனீனப்
பலித்தெஞ் ஞான்றும் பண்பொடு
கிலைத்து நிலவுக நிலமிசை யானே.



# மதிப்புரை.

---

நண்பர் மகா-ள-ள-ஸ்ரீ வித்துவான் மோ. வெ. கோவிந்தராஜ ஐயங்காரவர்கள் இயற்றிய "குசேலர்" என்னும் நாடகத் தமிழ் நூலை முற்றிலும் படித்துப் பார்த்தேன். முன்னாளில் வழங்கிய நாடகத் தமிழ் நூல்கள் இந்நாளில் மறைந்து போய்விட்டதனால், அக் குறையை நீக்கச்சிலர் முன்வந்து ஆங்கில நாடகமுறை யையும் ஸம்ஸ்கிருத நாடக முறையையும் பின்பற்றி நூல்கள் இயற்றிவருகின்றனர். அந்நூல்களிற் சில இத்தேசத்து நாகரிகத்துக்குப் பொருந்தாதனவாயும், பொருந்தியுள்ளன சில செவ்விய தமிழ்நடையில் இய லாதனவாயுங்காணப்படுதலால், அவ்விருகுற்றமும் நீங்கி யுள்ள சிலநாடகங்களே தமிழ்மாணவர்கட்கு உபயோக முள்ளவையாகும். இக் 'குசேலர்' என்னும் நாடகமோ பாகவதத்திலிருந்தெடுத்து வல்லூர்த் தேவராஜபிள்ளை யவர்களாற் காவியரூபமாகப் பாடப்பெற்ற 'குசேலோ பாக்கியானம்' என்னும் நூலை ஆதாரமாகக் கொண்டு செவ்விய தமிழ்நடையில் உலகவியல், நட்பின்பெருமை, ஈசுவரபக்தி, ஞானிகளுக்கும் அஞ்ஞானிகளுக்குமுள்ள வித்தியாசம், ஞானிகள் உயிர்களிடத்துக் காட்டுங் கருணை, ஈசுவரன் ஞானிகளை அனுக்கிரகிக்கும் முறை

முதலிய பலவும் விளங்க இயற்றப் பெற்றிருக்கின்றது. எனவே, இந்நூல் தமிழ்மக்களனைவரும் படிக்கத்தக்க தும் மாணவர்களுக்கு இன்றியமையாததுமாகும். ஆதலால் இந்நூலைத் தமிழரனைவரும் வாங்கிப்படித்தின்புறுவார்களாக.

கோனுபட்டு, 25—12—1916

அ. கோபாலையன்,
தலைமையாசிரியர்,
கற்பகவிநாயக கலாசாலை.

நிலைமண்டிலவாசிரியப்பா.

---

மலர்தலை மாநில மன்பதைக் கெல்லாம்
ஒழுக்கமே யுயரிய விழுப்பந் தரலால்
இல்லற வாழ்க்கையி னியல்பைமேற் கொண்ட
மனைவியி னற்குண மாண்பும் பெறலரும்
புதல்வர் புதல்வியர் புகழுக் கேற்ற
விதமுறு நடக்கையு மெவ்வாற் றானு
ஒருவயிற் றுதித்தோ ருடனுறை வாழ்க்கையும்
மருவிய பிறர்பழி தூற்றா மாண்பும்
வற்றிமற் றூற்றப் பசிப்பினு முறையில
பற்றிவா ளுளைப் பாழ்படுத் தாமையும்
பழையகண் பினர்பாற் பற்றக லாமையும்
எங்கணு நிறைவுறு மங்கள ரூபியாஞ்
செங்கண் மாலைச் சிந்தையி னிறுவனு

யின்ஞே ரன்னவாய் மன்னிய வினைத்து
நன்றென வுணர்த்த நன்மொழி புணர்த்தி
விசேட நலந்திகழ் குசேல ரெனுமிவ்
வரும்பெரு நூலை யாவரு முணர
அன்பொடு மியற்றி யின்புறத் தந்தனன்
ஆரியந் தென்கலை யாங்கில மிவற்றிற்
சீரிய புலவன் றிகழ்வுறு கம்ப
நாடன் பாக்களி னற்பொரு ளுரைப்போன்
நான்முறை மருவு நான்மறை யாளன்
மாவிக் திரைசேர் மாதவற் போற்றுங்
கோவிந்த ராஜக் குரிசி லுனே.

இங்ஙனம்,

சோகலிங்கம்புத்தூர், 18—12—1916 } ரெ. இராமமூர்த்தி ஐயர். தமிழ்ப்பண்டிதர்.

வெண்பா.

---

நீடகத்தார்க் கின்பநெறி நீட்டுகுசே லன்சரிதை
நாடகத்தி ளுடகமா நாட்டினர்—கூடகத்திற்
பத்திமணி கோத்துப் பரவொளிசே ரத்தெரித்
வித்தகனுங் கோவிந்த வேள். [தான்

நடராஜபுரம் வீர. சோமசுந்தரச் செட்டியார்,
ஞானப்பிரகாச சபா காரியதரிசி,
புதுவயல்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உயர்வற உயர்ந்த வொருதிரு நாதன்
ஒப்பில்சீர்க் கற்பகத் தருவின்
மயர்வறப் பழுத்து வளர்சுகங் கோதி
வைத்தபா கவதமாங் கனிப்பால்
அயர்வறப் பெருகுங் குசேலன்சீர்த் தேனை
அந்தமிழ் காவலின் சுவையாத்
துயாறக் கொடுத்தான் கோவிந்த ராஜ
சுகுண வைணவ னறிந்தோனே.

நெடுவை. திரு. இராமஸ்வாமி ஐயங்கார்,

செந்தமிழ் வித்தியாசாலை, வலயபுரி. } (இயலிசையாளர்.) தலைமையாசிரியர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இம்பரா ரவைகளின்கண் வன்மீகி
முதலோ லினெடுத்துக் காட்டாற்
கம்பரா மாயணத்தின் பகுதிகளா
கியவோரேழ் காண்டங் கட்குங்
கும்பரா னந்தமுறப் பொருள்கூறுங்
கோவிந்த ராஜ னென்பா
னெம்பரா வணையானை யணைந்தகுசே
லன்சரித மினைத்து மாய்ந்து.

பத்தியினலேயன்றிப் பசிதாக
முதலடக்கிப் பண்ணும் யோக
சித்தியினலேமோக்ஷம் பெறலரிதென்
றனுதினமுஞ் சிந்தை செய்த
புத்தியினலேதமிழி லிங்தங்க
நாடகமாப் புனைந்தான் சித்த
சுத்தியினலேபடிப்போ ரெங்காளுங்
குறைவின்றிச் சுகித்து வாழ்வார்.

சுப்பராம ஐயர்,
தலைமையாசிரியர்,
விவேகவிளக்க வித்தியாசாலை, ஆத்தங்குடி.

சீர்வளருஞ் செய்யவறஞ் சேர்ந்துமிக வேவளரும்
பார்வளரு மாந்தர் பயன்வளரும்—பேர்வளருந்
தோமில் 'குசேலரென'த் தோன்று முயர்நெறியால்
நாமினிது வாழ்வா நனி.

இந்தப் பூமியிலே வாழும் மனிதர்கள் திவ்யமான பொருள்களை மாண்புடையதாக வெறுப்பின்றிக்கொள்ளுதல் பிரத்யக்ஷமாகும். இவ்வித உணர்ச்சியானது மனிதர்களிடத்தில் அறிவின் கிளர்ச்சியாலே அமைந்ததாகும். அறிவு இயற்கையாகவேபிராணிகளிடத்திலே உள்ளது: அது மாக்களிடத்திலும் மக்களிடத்திலே விசேஷமாக விளக்கம் பெறும். அறிவின் மிகுதியினலே அரியபேரின்பத்தை மனிதர்கள் அடைவார்கள்.

மானுஷ்ய ஜன்மமும் அறிவின் மேம்பாடும் புண்ய முதிழ்ப்புடைய ஆத்மாக்களிடத்து அமைந்துள்ளன. காலத்திற்கேற்ப மனிதர்கள் தங்கள் தங்கள் உடை நடை பாவனை முதலியவைகளை மாற்றி நல்வழியே நடப்பது வெளிப்படையாகும். இத்தன்மையுடைய மனிதர்கள் அறிவு விருத்திக்கும் மனநிலைமைக்கும் உரிய நூல்களைப் படிப்பது முக்கிய கடமையாகும். இங்ஙனமே பண்டைக்காலத்துப் பெரியோர்கள் ஒழுகினார்கள். இவ்வுண்மை சரிதவாராய்ச்சி யுடையவர்கள் நன்கு அறிவார்கள்.

நாங்கள் படிக்கும் எல்லா நூல்களும் அறிவை மேனிலைப் படுத்தவும், ஆத்மலாபத்தைத் தேடவும் கற்பிக்கின்றன ஆண் பெண் என்ற இருபாலாருமே அறிவை வளர்க்கவேண்டும் தமிழிலே பற்பல நூல்கள் இலக்கண வரம்பு கடவாது இயற்றப் பெற்றுள்ளன. இக்''குசேலர்'' என்னும் வசன நூலை நமது தமிழகத்துப் பெண்கள் படித்தால் அடக்கம் கற்பொழுக்கம் முதலியன வரும். செய்யுட்களைப் படித்துப் பொருள் தெரிந்து கொள்வதினும் வசனரூபமான நூல்களைப் படித்து விளங்குவது மிகுந்த சுலபமாகும். வாக்கியத்தொடர்புடைய நூல்கள் தொன்றுதொட்டுச்செயப்பெற்ற அரிய நீதிகளையே எடுத்துப் புகட்டுமாயின், ''பாலுடன் தேன்கலந்த'' பான்மைத்தெனக் கோடல் சாலும். இன்னவாறே இனிமை சேர்க்க இல்லறம் பேணிய மஹாத்துமாவாகிய''குசேலர்'' என்னும் தபசிலர் ஒரு

வர் சரிதத்தை "குசேலோபாக்கியாக" வழித்தாய் இயற்றி வெளிப்படுத்தியிருப்பது மிகவும் பாராட்டத் தக்கதாகும். என்னை? குசேலர் "அழுக்கா றவா வெகுளி யின்னாச்சொனான்கு. 'மிழுக்கா வியன்ற தறம்" என்னும் பொய்யாமொழி நினைந்து அன்புநீர்ப்பாய்ச் சிய இல்லற நெறியினராகலினென்க.

இக்"குசேலர்" என்னும் வாக்கிய நூலானது ஆழ்ந்த சிந்தனையோடு படிக்கப் படிக்கத் தெவிட் டாத சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியதாகும் சமம் தமம் முதலிய நன்னெறிக்கு இந்நூல் துணையாக வுள்ளது. அன்பு ஒற்றுமை நேர்மை முதலியவைகளை யும் போதிக்கின்றது. கல்வி, கேள்வி, ஆசாரம் என் பவற்றால் மேன்மைபெற இக்"குசேலர்" துணையாக வுள்ளது. இக்குசேலர் சரித்திரத்தை நாடகரூபமாகப் பல சுவைகள் பொருந்த இயற்றி, முன்னாளிலே புலவர் கள் பொருட்டு ஸ்ரீமந்நாராயண மூர்த்தியானவர் ஆர மிர்தம் ஈந்தது போல, புலவர்களவையில் இந்நாளிலே ஸ்ரீமத் கம்பராமாயணப் பயோததியிலே செம்பொரு ளாகிய இன்பச் சுவையமிழ்தைச் செவ்விது எடுத்துக் காட்டும் விற்பன்னரும், தண்டமிழ் ஆரிய பாஷா சாதுர் யரும், எனது ஆப்த நண்பருமான பிர்ம்மஸ்ரீ மோ. வெ. கோவிந்தராஜ ஐயங்காரவர்கள் பிரகடனம் செய்தார் கள்.

இவ்வரிய பெரிய நூலை வெளிப்படுத்துமுன் "லோகமித்திரன்" என்னும் மாதாந்தப்பத்திரிகையை

வெளிப்படுத்தி உலகமித்திரசிகாமணியாக விளங்கிய ஐயங்காரவர்களுக்குத் தமிழகத்தார் கடமை பூண்டவர்களே! இந்நன்னூலை மிக்க இலகுவான தமிழ் வாக்கியங்கள் பொருளைச் செய்து அச்சு வாகனத்தேற்றி உலாவரச்செய்த நன்றியைப் பாராட்டுகின்றதோடு, இன்னும் அரிய நூல்களை இவ்வித்துவான் வழியானே வெளிவரச் செய்வதும் நம்மவர் கடமையாகும். அன்றி இந்தக் "குசேலர்" என்னும் நாடகத்தை உயர்தரக் கல்லூரியில் பாடமாகவும் ஏற்படுத்தவேண்டும் என்று நான் விரும்புகின்றேன். இதற்கு எனது சகோதர வித்வ சிரோமணிகளும் துணை புரிவார்களென்பது எனது பூரணமான கருத்து. சுபமஸ்து.

வ. மு இரத்திநேசுவரையன்,

யாழ்ப்பாணத்து உடுவில், அக்ஷய-ஞூ கார்த்திகை-மீ ௨௰௨

தமிழ்ப்பண்டிதன், "இந்துபாடசாலை" மாத்தளை.



## மதிப்புரை (தொடர்ச்சி.)

அமிழ்தினிமை யமர்ந்துநய மார்ந்துபெருந்
        தெய்வகுண மமைந்த தாகும்
தமிழ்மொழியிற் றென்னூல்கள் பலவாய்ந்த
        சதிருடையான் தனிச்சீ ரேய்ந்த
இமிழ்திரைசூழ் பரவையுடைப் பாரகத்தோ
        ரேத்தினிய விராம காதை
கமழ்புலவர் போற்றிதஞ்சேர் கம்பவிரா
        மாயணத்தைக் களிக்கச் சொல்வோன். (௧)

அந்தணர்க்குத் திலகமனான் கோவிந்த
        ராசனெனு மையங் கார்தான்
செந்திருவாழ் கண்ணனருள் பெற்றகுசே
        லன்சரிதை சிறந்த நூல்கள்
சந்தமுறக் கல்லாரு மெச்சவொரு
        நாடகமாச் சமைத்தான் பேரார்
இந்தவுப காரத்தைத் தமிழகத்தோர்
        பாராட்ட லியைந்த தன்றோ. (௨)

பு க. ஸ்ரீனிவாஸாசாரியார்,
தமிழ்ப்பண்டிதர்,
ஊர்ஹீஸ் காலேஜ். வேலூர்.

உலக மூவப்ப வொப்புர வாற்றுதல்
இலங்கிய தன்றுயிர்க் கின்றுணை யாமென
வான்றவிக் தடங்கிய வறிவுடைப் பெரியருட்
சான்றோ ரெனக்கொளுந் தகையுடைப் பெரியராஞ்
சுசீலம் வாய்ந்த சுகுணநற் றவமுடைக்
குசேல முனிவரின் குலவிய சரிதையைக்
கற்றவ ரன்றிக் கல்லா தவரும்
பெற்றுவந் தறிதரப் பிறங்கு நாடகமாப்
பாத்திரங் காலமும் பகுப்புடன் றொகுத்துச்
சாத்திர முறையிற் றந்தன னியாரெனின்
திருவுறை மார்பத் தொருதனி முதல்வன்
மருவலர் மரையடி மனத்தகத் துன்னிக்
கைம்மா றுகவாக் கடப்பா டாற்றுஞ்
செம்மைசே ரறிவிற் செழுமறை முதல்வ
னிம்பர்கா டுகேப்பக் கம்பனாற் கவிதனைச்
செம்பொருள் காட்டிச் செவிக்குண வளிப்போன்
மாவிந்தை யாருண் மன்னும்
கோவிந்த ராஜனுங் குலவை ணவனே.

வீ. குமாரவீரையர்,

தலைமைத் தமிழ்ப்பண்டிதர்,

சித்திவிநாயக வித்யாசாலை. பலவான்குடி

ஸ்ரீ:

# உரிமையுரை.

---

இந்தச் சிறுநூல்,

எனக்குத் தமிழ்ப் பாலூட்டிக்
கம்பராமாயணத் தாலாட்டித்
தமிழாசிரியத் தொழிலிலிருத்தி நாகரிக நடையிற்
செலுத்திய
எனது ஞானத்தாயும்
நாற்கவிப் பெருமானும் இயலிசையாளரும்
ஸ்ரீ கம்பராமாயண ஸ்வாபதேச உத்போதகரும்
சென்னை, கிறிஸ்தவ காலேஜில்
தமிழ்த் தலைமைப் புலமை நடத்தியவரும்
உபய வேதாந்தப்ரவர்த்தக ஸ்வாமியுமான
ஸ்ரீமத் கா. ஸ்ரீ. கோபாலாச்சாரிய ஸ்வாமி
ஸந்நிதியில்
எனக்குத் தமிழிலக்கிய விலக்கண மூலமாக
நல்லறிவூட்டிய
நன்றியறிதலுக்கோர் சூசகமாக
ஸமர்ப்பிக்கப்பட்டது.

மோ. வே. கோவிந்தராஜன்.

ஸ்ரீ:

# நாடகபாத்திரங்கள்.

குசேலர்— கதாநாயகர்.

சுசீலை— கதாநாயகி

குணசீலன் முதலிய இருபத்தொருவர்— } குசேலரது ஆண்மக்கள்.

பத்மவதி முதலிய ஆறுபேர்—அவரது பெண்மக்கள்.

வாமனன்— குசேலரது தோழர் (கானகவழியில் துணை சென்றவர்.)

சுதேவன், சுவேதன்— குசேலரைத் துவாரகைக்கு அழைத்துப் போனவர்.

துன்முகன் துர்சீலன்— துவாரகையரண்மனை வாயிற்காவலர்.

ஜயவிஜயர்— ஸ்ரீகண்ணபிரானது அரண்மனையின் உட்புறக்காவலர்.

ருக்மிணி முதலிய எண்மர்—கண்ணன் மனைவியர்.

சித்திரலேகைமுதலியவர்—ஸத்யபாமையின்தோழியர்.

கமலம் முதலியவரும் ஒருபெரியவரும் சமயோசிதமாகத் தோன்றுபவர்.

கதைநிகழ்விடம்:—அவந்தி, அவந்திக் கானகம் துவாரகை.

ஸ்ரீ:

# முன்னுரை.

(ஸூத்ரதாரரும் விதூஷகனும் பிரவேசிக்கிறார்கள்.)

ஸூத்ரதாரர்.—(கடவுள் வாழ்த்து.)

பூமேவு நான்முகத்தோன் போற்றித் துதிப்பதுவுந்
தேமேவு பைந்துளவஞ் சோக் கமழ்வதுவு
மாமேவு மாமறைகள் வாழ்த்தப் பொலிவதுவுந்
தாமேவு வஞ்சச் சகட முதைத்ததுவுந்
தீமேவு மாரணியஞ் சென்று திரிந்ததுவும்
தூமேவு மன்பருளந் தோன்றப் பயில்வதுவும்
பாமேக வண்ணன் பதம்.

விதூஷகன்.— (கடவுள் வாழ்த்து)

மாதர்களின் வருந்தாமே, போதமுறப் புரிந்திடுவீர்
சீதமலர்த் திருமார்பன், கோதறுசீர் குறிப்பீரே.
மங்கையரின் வருந்தாமே, பொங்குமுறப் புரிந்திடுவீர்
செங்கமலத் திருமார்பன், கொங்கலர்சீர் குறிப்பீரே.
வனிதையரின் வருந்தாமே, புனிதமுறப் புரிந்திடுவீர்
கனிமொழிச்செந் திருமார்பன், இனியசீர் குறிப்பீரே.

ஸூத்ரதாரர்.—வருக நண்பீர்! இன்று நாம் ஆரம்பித்துள்ள நாடகத்தினுக்குத் தமது உதவி மிகுதியும் வேண்டற்பாலது. தாம் நகைச்சுவை தந்து அவையோரை நகுவிக்கும் ஆற்றல் உடையீரன்றோ?

விதூஷகன்.—நண்பரே! எச்சுவை யிருப்பினும் கற்றுணர்ந் துயர்ந்த பெரியோர் கூடிய இவ்வவை யின்கண் நாம் நமது சிறுமதி கொண்டு புக்கதே நகையன்றோ?

சூத்ரதாரர்.—ஐய! அங்ஙனம் கவலற்க.

கலைஞர் நிரம்பிய கற்பகச் சோலைக்
கலைவது மெவனோ வரிய நண்பரே
கருணை மலர்த்தேனைக் காத்த லவர்கடன்.

விதூஷகன்.—ஆமாம். கருமுகிலைப் பார்த்து வேண்டுவார் இல்லாதபோதும், அது தன் கடமையைச் செலுத்துவ தியற்கை தானே!

சூத்ரதாரர்.—ஆயின், நமது நாடகத்தைத் தொடங்கலா மன்றோ?

விதூஷகன்.—நிற்க, இன்று நாம் ஆரம்பித்திருக்கும் நாடகம் எத்தனை அங்கத்தில் முடிவதாகும்?

சூத்ரதாரர்.—அஃதென்னை அங்ஙனம் வினவுகிறீர்கள்? நாடகமென்பது,

ஐந்திற் குறையா வங்க முடைத்தா
யொன்பான் சுவையு மொருங்குடைத் தாயினு
மின்ப மாதல் பெருமித மாதல்
செவ்விதிற் றெரிக்குஞ் சிறிற் றாகி
வியப்புச் சுவையி னிறுவது வன்றோ?

விதூஷகன்.—ஓஹோ! சரி!! சரி!! வியப்புச்சுவையாவது யாது?

சூத்ரதாரர்.—

புதுமை பெருமை சிறுமையாக்க
மென்ற வின்னன காரண மாக
வெதிர்பா ராச்செய லெய்திய போது
முயற்சி யின்றி முன்னிய தன்னெறியின்
முற்றிய போதும் விரும்பு மதற்குமேன்
மிகவுமெய் தழியுங் கருவிக ளுறுவான்
முயலுழிப்பயனே முடிந்திடு போது
நிகழுஞ் சுவையினை நீள்வியப் பென்ப.

விதூஷகன்.—ஆயின் இந்நாடகத்து இந்த வியப்புச் சுவை யொன்றுதானுளதோ? ஒன்பது சுவையு முடையது நாடக மென்றீர்களே!

சூத்ரதாரர்.—அன்று.

ஒன்பான் சுவையு முடைய தயர்வே
சிலகுறைந் தியலினுஞ் சீர் நன்றுவே.

விதூஷகன்.—ஆயின் எவ்வெச்சுவை இந்நாடகத் துளவோ?

சூத்ரதாரர்—அந்த வியப்புடன் உவகை, பெருமிதம், நகை, இழிப்பு இவையும் கலந்திருக்கின்றன.

விதூஷகன்—இச்சுவைகள் நாடகத்துள் எங்கெங்கே கலந்திருக்கின்றனவோ?

சூத்ரதாரர்.—கதாநாயகனும் நாயகியும் தத்தமது புல னொழுக்கிலே கலப்பட்டின்புறுதலானே உவகை

யும், நாயகற்குக் கல்வியானும் இசையானும் எஞ்சாவுரானும் அஞ்சாமூானும் விஞ்சாரிற்றலரல் பெருமிதமும், நாயகரை, அவரது எளிமையைக் கொண்டு, துவாரகையின் வாயிற்காவலர் இழித்துக் கூறிச் சிரிப்பினை விளைத்தலால் நகையும், நாயகரது குணப் பெருமையான் ஸ்ரீ கண்ணபிரான் அருளியவழி அவர்கள் எதிர்பாராச் செயலாகச் செல்வம் எய்தியவாற்றான் வியப்பும், அவ்விருவோரது குடும்பவருத்தத்தினை யடியாக்கொண்டு கனகமென்பாளொருமாது அவ்விருவர்களையும் பற்றி வெறுப்பினை விளைக்கும் வீண் செயன்மொழிகளைக் கூறியவாற்றான் இழிப்பும் ஆங்காங்கு காணப்படும்.

விதூஷகன்.—நாடக பாத்திரருள் தலைவனும் தலைவியும் எவ்வகையினராவரோ?

சூத்ரதாரர்.—

நிலனிகர் பொறைபு னின்மல குணனு
னனியமை நற்றவன் றீர சாந்தன்.

ஆகலின் ஸுதாமர் தீரசாந்தராவார்.

விதூஷகன்.—ஸுதாமர் என்னும் பெயர் குசேலருக்கு இயற்கைப் பெயரோ?

சூத்ரதாரர்.—ஆம். குசேலரென்பது அவரது காரணப் பெயராகும்.

விதூஷகன்.—நாயகி எவ்வகையினளோ?

சூத்ரதாரர்.—

> பொறுமை சான்ற பூவையோ ரெந்தையைத்
> திறத்தினுந் தீர சாந்தனை நிகர்ப்பாள்,

இப்பொறுமையானே இவட்கு க்ஷாத்க்ஷாமா என்னும் பெயரும் காரணமாகப் பொருந்தி யுள்ளது.

விதூஷகன்—கதையின் முடிவு எவ்வகைத்து?

சூத்ரதாரர்.—கற்பொருளிறுதியே கதாந்தமாயிற்றென்று முன் வியப்புச் சுவையை எடுத்தோதியபோதே சொல்லிமுடித்தேனே.

விதூஷகன்.—ஆயின் இக்கதை மெய்யுரையோ பொய் யுரையோ?

சூத்ரதாரர்.—

> உண்மையா யுலகி னிகழ்ந்து யாவர்க்கும்
> தெரிந்த காதை தெளிப்பது மெய்யுரை.

யாகலின் இஃது உண்மைக் கதையேயாகும். ஆயினும் நாடக விலக்கணந்தோன்றச் சில புனைந் துரையுமுள.

விதூஷகன்.—ஆக, இந்நாடகத்தின்பயன்யாதாகுமோ?

சூத்ரதாரர்.—

> நல்லொழுக் கத்தை நனிவிரித் துரைத்தலு
> நல்லொழுக் கமுளார் நன்மை யெய்தலும்,

ஆநந்தமேயாகலின் இக்கதை நுதலும் பயன் அதுவேயாகும்.

விதூஷகன்.—இந்நாடகத்தின் அங்க முறைப்படி கதையைச் சொல்லிடக் காலமிடந்தருமோ?

சூத்ரதாரர்.—சுருங்கச் சொல்லி விளங்கவைப்பேன்.

முதலங்கம், தலைவன் தலைவியாகிய ஸுதாமரும் சுசீலையும் தமது பெருமைக்கேற்ப அருட்பெருஞ்சோதியின் அநந்த கல்யாண குணங்களைப் பற்றி ஸம்பாஷித்தலும், அவரது புதல்வராகிய இருபத்தொருவரும் தமது ஏழ்மை தோன்ற ஸம்பாஷித்தலும், அவரது புதல்வியர் அறுவருள் மூத்தபத்மவதி யென்பாள் சீதாதேவியைத் துதித்து நின்றபோது, வீட்டுக்குவந்துள்ள ஒரு பெரியவருடன் ஸம்பாஷித்து, அந்த ஸம்பாஷணையால் தமது பிதாவை ஸ்ரீகண்ணபிரானிடம் அனுப்ப வேண்டுமென்று தான்கொண்ட அபிப்பிராயத்தைத் தாய் வந்தபிறகு சொல்லலும் ஆகிய மூன்று காட்சியாலும்,

இரண்டாமங்கம், குசேலர் உண்டு இளைப்பாறி இருக்கும்போது, சுசீலையும் பத்மவதியும் தாங்கள் நிர்மானித்திருந்தபடி அவரை ஸ்ரீ கண்ணபிரானிடம் செல்லும்படி வேண்ட அவர் வெகுநேரம் வாதித்துப் பிறகு உடன்படலும், ஒருபெரியவர் வந்து குசேலரைக் கண்ணனிடம் சென்று வரும்படித் தூண்ட அவர்

உடன் படலும், கமலம் என்னும் ஒரு மாதின் வீட்டில் கூடிய தங்கம் கனகம் என்னும் இருவர் ஸம்பாஷணை யின் முடிவில் குசேலர் துவாரகைக்குப் புறப்பட்ட செய்தி புணர்த்தலும் ஆகிய மூன்று காட்சியாலும்,

மூன்றனங்கம், குசேலர் வழியில் அவந்திக் கான கத்தில் சந்தித்த வாமனன் என்பார் ஒருவரோடு கூடி வழிநடந்து ஒரு கிராமத்தை நண்ணலும், கானகத்தில் கடுவெயிலில் குசேலர் படுத்துறங்க அவரைக் காண வென்றே துவாரகையிலிருந்து புறப்பட்ட சுவேதன் சுதேவன் என்னும் இருவர் கண்டு வணங்கி அவரையும் அழைத்துக் கொண்டு கானகத்தைக் கடத்தலும், பிறகு அம்மூவரும் துவாரகைக்கு எதிர்க்கரையில் உள்ளதொரு சிற்றூரையடைந்து கடலைக் கடத்தலும் ஆகிய மூன்று காட்சியாலும்,

நான்கனங்கம், சுதேவன் சுவேதன் என்னும் இரு வரும் குசேலரை அழைத்துத் துவாரகைக்குள் சென்று அரண்மனை வாயிலில் விட்டு விடை பெற்றுச் செல்ல லும், குசேலர் அரண்மனைக்குள் நுழைய முடியாமல் வாயிற்காவலரால் இழித்துக் கூறப்பட்டு வருந்திநின்ற போது ஜயவிஜயர்கள்வந்து அவரைத் தேற்றியுபசரித் திருத்தித்தாம் கண்ணனிடம் செய்தி தெரிவிக்கச் செல்லலும், ஸ்ரீகண்ணபிரான் தமது அந்தப்புரத்தில் தமது மனைவியருடன் கேளிக்கையில் இருந்தபோது ஜயவிஜயர் சென்று குசேலர் செய்தி சொல்லலும் ஆகிய மூன்று காட்சியாலும்.

ஐர்தனங்கம், கண்ணபிரான் துவாரபாலகருடன் வரும் குசேலப் பெருமானை நல்வரவேற்று உபசரித்துத் தமது மனைவியரால் அவர்க்கு ஷோடசோபசாரம் செய்வித்துப் பிறகு அவருடன் குடும்பயோகக்ஷேமங்களைப் பேசிவிட்டு நித்திரைக்குப்பின் காலையில் ஊருக்கனுப்பவும், குசேலருக்கு யாதும் உதவாமல் கண்ணபிரான் அனுப்பினதைப் பற்றி ஸத்யபாமையின் தோழிகள் நகையாடிக் கொண்டிருக்க, அஃதறிந்த ஸத்யபாமை அப்பெண்கட்குக் கண்ணன் அவலுண்டதும் ருக்மிணி தடுத்ததும் அதன் உள்ளுறை பொருளும் உரைத்தவும், பிறகு குசேலர் தமது விடடைந்து கண்ணனது அருள்பெற்ற மன்னர் பலரால் நன்குபசரிக்கப்பட்டு அதனால் இந்திரச்செல்வம் பெற்றுப் புத்திரருக்கு விவாக உத்ஸவங்கள் நடத்தித் தாமும் தமது அநுஷ்டானுதிகளைத் தவறாது நடத்திவருதலுமாகிய மூன்று காட்சியானும் முடிகின்றன.

விதூஷகன்.—இவ்வளவு தான் போதும். இப்போது கதை ஆரம்பமோ? இங்கு யார் வரவிருக்கிறார்கள்?

சூத்ரதாரர்.—குசேலரும் சுசீலையும் வருவர். நான் சென்று பாத்திரங்களை ஆயத்தப் படுத்தவேண்டும். செல்கிறேன். தாங்களும் இங்கிருந்தே ஸமயம் நேர்ந்தபோது ஸபையைக் களிக்கச் செய்துகொண்டிருக்கவேண்டும். (செல்கிறார்கள்)



ஸ்ரீ:

# குசேலர்.

## முதலங்கம்—முதற்காட்சி.

---

காலம்—காலை. இடம்—குசேலர் மனை.

[குசேலரும் சுசீலையும்.]

குசேலர்:—சுசிலாய்! இத்தானியத்தை வாங்கிக்கொள்.

சுசீலை:—நாத! அப்படியே. இன்று என் நேரமாயிற்று.

குசேலர்:—பெண்ணே! இன்று தானியம் எடுக்குமிடத்தில் ஓர் ஆச்சரியத்தைக் கண்டேன்.

சுசீலை:—அதென்ன? நான் அறியலாகுமோ?

குசேலர்:—நங்காய்! கற்புடைய மனைவியருக்குத் தெரிவிக்காச்செய்தியும் உண்டோ?

சுசீலை:—ஆனல், அதனை எனக்கு அறிவிக்கவேண்டும் நாதா!

குசேலர்:—இற்றைநாள் நான் கண்டது பரம்பொருளின் அருட்பெருங்காட்சியே.

சுசீலை:—அண்ணலே! பகவான் தேவரீரைப்போன்ற பக்தருக்கல்லாமல் மற்றவர்க்குத் தமது பெருமையைக் காண்பிக்காதது என்ன காரணமோ? இது வஞ்சனையல்லவா? இதனல் அவரது அனந்த கல்யாண குணங்கட்கு குறை நேராதோ?

குசேலர்:—இல்லறத்துணையே! இதேது இப்படிச்சொல் கிருய்? "என்னறப் படிப்பினும் பெண்புத்தி பேதமை" என்ற பழமொழி ஏற்பட்டது உனது இயற்கையைப் பார்த்துத் தானே என்று எண் ணுகிறேன்.

சுசீலை:—நாதா! இப்பேதமையும் என்போன்ற பெண் கட்கு இயற்கைக் குணமாகும். அஃதிருக்கட்டும் தேவரீர்சொன்ன பேதமை என்னும் சொல்லுக்கு நான் இடமானதெப்படி?

குசேலர்:—பேதாய்! மாதவபிரான் ஜீவர்களிடம் பொது வான பிரீதியுள்ளவனென்று மறைநூல்கள் முறை யிட்டுக் கொண்டிருக்கின்றனவாகப் பலதடவை உனக்கு நான் சொல்லியிருந்தும் இப்பொழுது 'அவர்க்கு வஞ்சனையல்லவா?' என்று சொன்ன தனுல்; இது அறியாமையல்லவா?

சுசீலை:—அப்படியானுல், மற்றவர்கள் அப்பெருமானு டைய பெருமையனைத்தும் கவனியாதிருக்கிருர் கள் என்று செல்கிறீர்களோ?

குசேலர்:—ஆம் உலகில் யாவரும் பார்த்து ஆனந்திக் கிற விந்தைகளைப் பாராதவர் கண்ணில்லாதவர்க ளல்லவா? அதுபோல அவரது மகிமையறியாதவர் ஞானக்கண்ணில்லாதவரே பகவானது வஞ்சனை யன்று.

சுசீலை:—சரி, இன்று தாங்கள்கண்ட அதிசயமெதுவோ?

குசேலர்:—நான் இன்று வயல் வெளியில்சென்றும் தானி

யம் அகப்படாமல் வருந்தி நின்றேன். அப்பொழுது... ... ...

சுசீலை:—அப்படியானல் இன்றைக்குத் தானியம் மிகுதியாக இருக்கக் காணமேனம்மா?

குசேலர்:—அதுதான், கேள், சொல்லுகிறேன். நான் வருந்தி, 'இன்று அதிதி பூஜைக்கு ஒன்றுமில்லையே, என்னசெய்வேன் கண்ணா!' என்று அவரை நினைத்தேன்.

சுசீலை:—அப்படியா! பின்னர் என்ன நடந்தது? அவர் தீனதயாளராயிற்றே!

குசேலர்:—ஆமாம். அதனால்தான் அவர் எனக்குத் தம் காட்சியைத் தந்தார். இதுதான் இன்று நான் கண்ட அதிசயம்.

சுசீலை:—அந்தக்காட்சி எப்படியிருந்தது?

குசேலர்:—அவருடைய நிஜரூபமாயிருந்தது.

சுசீலை:—அஃதாவது... ... ...

குசேலர்:—அவருடைய ஜோதியுருவந்தான் அதுதானே எங்கும் நிறைந்தது!

சுசீலை:—இருக்கட்டும். அந்தச் சுடருருவந் தோன்றினதற்கும் தானியங்கட்கும் உண்டான சம்பந்தம் என்ன?

குசேலர்:—அவ்வுருவம் தோன்றவே பெரிய காற்று வீசிற்று; வீசவே தானியங்கள் தினம்போல் உதிர்ந்தன.

சுசீலை:—ஆ! என்ன அதிசயம்!! என்ன அன்பு பக்தரிடத்தில்!!! இதுவன்றோ நிராக்ஷகத்துவம் என்பது!

குசேலர்:—அதில் தடையென்ன? அவரை நம்பியிருந்தவரில் யார்தாம் கைவிடப்பட்டார்?

சுசீலை:—நாதா! ஆனல் அதுதானே அப்பரம்பொருளுக்கு உண்மை வடிவம்?

குசேலர்:—ஆமாம் எனெனில், மற்றைக்காட்சியுருவங்கள் எல்லாம் ஒவ்வொரு அளவுள்ளனவாகையால் அவைகள் எங்கும் நிறைந்து ஒளிதரமுடியாதனவாகும் பரம்பொருளோ எங்கும் நிறைந்த பொருளாதலால் அவ்வுருவமே உண்மையானது என்பர் பெரியோர்.

சுசீலை:—ஆனல் புண்ணியரென்றும் பாபியரென்றும் வேறுபாடில்லாமல் எல்லாரிடத்தும் அவர் நிறைந்திருக்கவேண்டுமே?

குசேலர்:—கேள். அவர் ஜீவர்களிடத்தில் நிறைந்துள்ளவராயினும் மனத் தூய்மையுள்ளாரிடத்திலேயே களித்திருந்து அவர்கள் விரும்பியவற்றைத் தந்தருளுவர்.

சுசீலை:—அதென்ன அப்படி மாறுபடுகிறது? மற்றவரும் அவருடைய சங்கற்பத்தால் உண்டானவர்கள் தாமே-

குசேலர்:—அவராலேயே தோன்றினர்களாயினும் மனநிலக்குத் தக்கபடிதான் பிரியம். ஒரு தகப்பன்

தனது பல பிள்ளைகளில் அன்புள்ளவர்களிடத்தில் மாத்திரம் பிரீதி வைப்பது போலாகும்.

சுசீலை:—அப்படியானல் தீயோர் நன்ருய் வாழ்ந்திருத்தலும், நல்லவர் அப்படியில்லாதிருத்தலும் ஏன்?

குசேலர்:—ஏனெனில், இப்பிறப்பில் அனுபவிப்பனவெல்லாம் முற்பிறப்பின் பயனேயாகும்.

சுசீலை:—முன்செய்த வினைப்பயன்கள் அனுபவித்தேயொழிய வேண்டுமென்ருல், வேதம் சாந்திகருமங்களை ஏன் விதிக்கிறது?

குசேலர்:—அப்பிராயச்சித்த கர்மங்கள் செய்யப்பட்டபோது மனம் சமாதானப்படும்; அச்சமாதானத்தால் அநுபவம் கடுமையாகவிராது. அதல்லாமலும் வேதத்தில் விலக்கப்பட்ட தீவினைகளைச் செய்ய மனம் பயமடையும்.

சுசீலை:—நாதா! அப்பிராயச்சித்தங்கள் செய்தும் முன்வினைப்பயனுக்கு உழைத்தே தீரவேண்டுமென்ருல், கடவுட்கு உண்டாகும் பெருமை என்ன? இதனல் கடவுளின் கருணைக்குக் குறைவு தோன்றுமே.

குசேலர்:—சுசிலாய்! பொது நோக்கமுள்ள அரசன் குற்றவாளியின் ...லத்தையும் நிலையையும் கவனியாது குற்றத்திற்குத் தக்கபடி தண்டனை விதிப்பதே ஒழுங்காகும். கற்றறிந்தவர் இதில் குறைகூருர். இதைப்போலவேதான் கடவுள் கிருபையும் ஆகும்.

சுசீலை:—அண்ணலே! அப்படியானல் சிற்றறிவினர்க்

கும் முற்றறிவினர்க்கும் உள்ள பேதம் என்ன?

குசேலர்:—நங்காய்! அப்படியன்று; பகவான் எல்லார் மன நிலையையும் ஆராய்வார். அரசர்க்கு அது பெரும்பான்மை முடியாததாகும். அதனால் சட்டப் படியே விதிக்கவேண்டியிருக்கின்றது கடவுளோ மனத்தை நன்கு ஆராய்ந்து ஒருவன் முதிர்ந்த பக்தியுடையனாயின், அவனது இதர ஒழுக்கங் களைப் பாராமல் அவனுக்கு முடிவில் வீட்டையளிப் பார் இதற்கு 'க்ஷத்ரபந்து' என்னும் அரசனே சாட்சியாவான்.

சுசீலை:—நாதா! முதிர்ந்த பக்தியுடையாருக்கு முத்திப் பேறல்லாமல் வேறு ஒன்றும் உதவமாட்டாரோ?

குசேலர்:—அவர் எல்லாவற்றையும் கொடுக்க வல்லவர் தாம்! என்றாலும் மற்றைப்பேறெல்லாம் நிலையற் றவைாதலால் கற்றுணர்ந்த பெரியோர் அவற்றை விரும்பார்.

சுசீலை:—ஏன் அப்படி?

குசேலர்:—அவை தீவினைக்கு வித்தாகும் ஆதலால்.

சுசீலை:—மனம் தூய்மையாய் இருந்தால் அவை எப்படி தீவினைக்கு வித்தாகும்?

குசேலர்:—அறநிரம்பிய அருளுடை அருந்தவரானாலும் பெறலரும் செல்வம் பெற்றால் அவர்க்குச் சித்தம் வேறுபடும்.

சுசீலை:—அப்படிக் கெடாதவர் இல்லையா?

குசேலர்:—உண்டு; எங்கோ சிலர்.

சுசீலை:—இருக்கட்டும் செல்வத்தினுல் மனத்தூய்மை அழியக்காரணமென்ன?

குசேலர்:—சுசிலாய்? செல்வத்தில் நினைவுண்டான பொழுது காமம் வலியுறுகிறது. அது வலியுற்ருல் பிறப்புக்குக் காரணம் ஜனிக்கிறது பிறவி உண்டானுல் முத்திப்பேறு தடைபடும்.

சுசீலை:—இப்படியும் மனத்தூய்மையை யழிப்பது பரமான்மாவின் சங்கற்பந்தானே?

குசேலர்:—இல்லை, இல்லை. ஜீவர்கள் செய்யுந்தீவினையால் அறிவின்மை தோன்றுகிறது. அந்த அஞ்ஞானத் தோற்றமே மாயையெனப்படும். இதுதானவரை நமக்குத் தெரியவிடாது மறைக்கின்றது.

சுசீலை:—நாதா! இது என்ன? தீவினைக்குக் காரணம் அறிவின்மையல்லவா? தாங்கள் தீவினைதான் முதல் என்கிறீர்களே? இங்குக் காரணகாரிய நிகழ்ச்சியின் முறை தோன்றவில்லையே.

குசேலர்:—குணவதி! இதனுள் காரணகாரியம் தோன்றுவது அருமையாகும். இதனையே உண்மையறிந்தவர் "பீஜாங்குரம்" என்ற நியாயமெனச் சொல்லுவர்.

சுசீலை:—பேரறிவுடையீர்! எப்படியாகுனும் ஆன்மாக்கட்குத் தீவினையில் அறிவைச் செலுத்துவது பகவானுக்கு அழியாத நிந்தையையேகொடுக்குமென்பதில் சந்தேகமில்லை.

குசேலர்:—அப்படிக்கொள்ளாதே. ஓர் தோப்பில் பல

கனிமரங்கள் இருக்கச்செய்தேயும், அங்குள்ள தீங்கனிகளை விடுத்துத் தீக்கனியைப் பறித்துண்டு பாடு படுகிறவன் குற்றமுடையவனே யல்லாமல் தோப்புடையான் குற்றவாளியாகான்.

சுசீலை:—காதா! இதனால் இப்போதைய அனுபவம் முன்வினைப்பயனென்றும், அஃது அனுபவித்தே தீரவேண்டுமென்றும், பகவானை மனத்தூய்மை யுடன் வணங்கினால் பெரும்பேறும் பெறலாமென்றும், இதற்கு விடாமுயற்சியோடு செய்யும் பக்தியே காரணமென்றும் அறிந்தேன். தங்கட்கு காழிகையாயிற்றே!

குசேலர்:—ஆமாம், நிஷ்டைக்கு நேரமாயிற்று. காலந் தாழ்ப்பது தக்கதன்று.

(மறைதல்)



## முதலங்கம்—இரண்டாங்காட்சி.

---

காலம்—மாலை. இடம்—தெருத்திண்ணை.

[குசேலரின் புதல்வர்கள்.]

குணசீலன்:—ஏட, சுமதி! நமது சகோதரர்கள் எங்கு இருக்கிறார்கள்? அறிந்துவா. அயலகத்துப் பிள்ளையோடு விளையாடவேண்டாமெனப் பன்முறை வற்புறுத்தியும், இளைஞருக்கு அதுதோன்றாமல் தமது படிப்பினையுங் கெடுத்துக்கொண்டு தற்புகழ்ச்சியும் பேராசையும் இயல்பாயுடைய அவரொடு கூடி வீணேகெடுகின்றனர். அந்தோ! என்னசெய்வேன்!! பிதாவோ அத்தியயனகாலந்தவிர மற்றைக்காலங்களில் சிறுவரைக்கவனியாது நிஷ்டையிலிருந்து விடுகின்றனர். சமயம் நேர்ந்தபோது கேட்டால் 'விதிச்செயல்' 'விதிச்செயல்' என்று உதறிவிடுகிறார். தாய் மக்கட்கு அறிவுறுத்தியும் அச்சுறுத்தியும் யாதும் பயனிலது. அந்தோ! தெய்வமே!! வளர்க்க வகையிலா ஏழைகட்கு அளவற்ற புத்திரரைத்தந்து அப்பிள்ளைகட்கு நீங்காத மடமையையுந் தந்து, பெற்றோர்க்கு அழியாத் துன்பத்தையும் அளிக்கின்றீர். இஃதுவோ தமது திருவிளையாட்டு? செல்வர்பலர் பிள்ளைப்பேறற்றுத் தவிக்கின்றனரே. அவர்க்கு அருள்செய்தால் தகாதோ?

சுமதி:—அண்ணா! அவர்கள் விளையாட்டிலேயே முழு நோக்குடையாராயிருப்பதால் என்சொல்லில் கவ

னம் செலுத்தாமலும், செலுத்தினும் அதை மறுத்தும் விடுகின்றனர். ஆகலின், நீவிரே சென்றிடின் அழைத்துவரலாகும்.

குணசீலன்:—ஆயின், குணாகரனும் அங்குளனே?

சுமதி—இல்லை, அண்ணா! அவனும் பிரதாபனும் தருமனும் சுசீலனுந்தவிர மற்றைய பதினைவருந் தாம் விளையாடுகின்றனர்.

[குணாகரன் வருகை]

குணசீலன்—குணாகரா! இதுகாறும் எங்குற்றனை? மற்றை நம்மவர் எங்குளர்?

குணாகரன்:—அண்ணா! நாங்கள் சாந்தீபினி குமாரரிடஞ் சென்றிருந்தனம். எமது பாடங்களைக் கவனித்திருந்தோம்.

குணசீலன்:—ஆயின், தங்கையர் அறுவரும் எங்குறைகின்றனர்?

குணாகரன்:—அன்னையிடத்திலேயே.

சுமதி:—அண்ணா! அதோ வருகின்றனர் பிரதாபன் முதலானோர்.

குணாகரன்:—பாதன் முதலியவர் வரவில்லையே.

சுமதி:—அவர்களேன் வருவர் இப்போது? போஜன வேளைக்குத் தவறார்.

குணசீலன்:—குணாகரா! கூடவா. போயவரையழைத்து வருவோம்.

குணாகரன்:—சரி! அப்படியே.

[செல்கிறார்கள்]

பிரதாபன்:—இஃதென்ன அண்ணு! இப்பேதை யர் எக்காலும் விளையாட்டிலேயே திரிகின்றனர்.

குணசீலன்:—நற்காலம் தோன்றினுல் அதனையொழிப்பர்.

சுசீலன்:—அஃதேது! இளமைமுதல் பயிலாவிடின் திருந்துவது கட்டையில்தான்.

தருமன்:—அப்படியன்று. நாம்தாம் திருத்தவேண்டும்.

குணசீலன்:—யாம் போவோம் வாருங்கள்.

[செல்கிறூர்கள்]

குணகரன்:—எட, தம்பி பாதா! இப்படி விளையாடிக் கொண்டிருப்பது அழகோ?

பரதன்:—இல்லையண்ணு! சிறிதுகாலம்.....பொழுது...

குணசீலன்:—என்ன? பொழுது போக்குகிறீர்களா? வேறு வேலையினுல் கழியாதோ அந்தப்பொழுது? எட குமார்க்கா! நீதான் இதற்கு மூலம் போலும்.

குமார்க்கன்:—என்ன அண்ணு! யானல்லன் குபோஜனந் தான் முதலில் அழைத்தது.

தருமன்:—அவனழைத்தால் நீங்கள் அவனைத் தடுப்ப தற்கென்ன?

குபோஜனன்:—ஆமாம், நீ மகாபுத்திமான்தான். நீ ஒருவன் போதாதோ உலகினுக்கு?

குணசீலன்:—என்ன? வார்த்தையில் மேலிடுகிருய். கிறுத்து, இது நற்பழக்கமில்லை.

குபோஜனன்:—இல்லை, அண்ணு... ...

குணசீலன்:—வாருங்கள் மனைக்குப் போவோம்.

வசிஷ்டன்:—அண்ணா! அதோ நிற்கிறானே அந்தப் பையன் கையில் அணிந்திருப்பதென்ன? பளபள வென்றிருக்கிறதே?

குமார்க்கன்:—இதுதான் நீ பார்த்தது. அந்த விமலன் என்ற பையன் காதிலும் காலிலும் கையிலும் என்னவென்னவோ மஞ்சள் நிறமாகவும் சிவந்த வர்ணமாகவும் அணிந்திருக்கிறான். ஆஹா! அவை என்ன ஒளி வீசுகின்றன! அவற்றால் அவன் தேக காந்தி ஜொலிக்கின்றதே!

பாதன்:—அவையெல்லாம் ஆபரணங்கள். பிதாவினிடத்தில் பிரதாபன் பாடம் படித்துக் கொண்டிருந்தபொழுது கவனித்திருக்கிறேன். இந்தப் பிள்ளைகள் அணிந்திருப்பது போலத்தான் ஆபரணங்கள் வர்ணிக்கப் பட்டிருந்தன.

குணசீலன்:—இளைஞர்களே! அவைதாம் பிறவிக்கு விலங்கு, ஆசைக்குச் செவிலி, படிப்பினுக்குப் பகை, விரோதத்தினுக்கு வித்து, கர்வத்துக்குத் தாய், குரோதத்திற்குப் பிதா; இவற்றால் அலக்ஷியமும் அசூயையும் மனிதர் அடைந்து இகத்தில் குமார்க்கத்தில் புகுந்து வருந்தி பின் நரகத்தை அடைகின்றனர் என்பர் பெரியோர். அதனால் அவற்றில் வைத்த ஆசையை ஒழித்துவிடுங்கள்.

தருமன்:—அது மாத்திரமா அண்ணா! இந்நகைகட்கு ஆசைப்பட்டுத் திருடர்கள் இக்குழந்தைகளைக் கொலையும் செய்து விடுகின்றனர். ஆசையினால் ஆபரணமிட்ட பெற்றோர்கள் தமக்கு வந்த துய

ரத்தை மாற்ற வகையற்று வருத்தத்தாலும் கோபத்தாலும் உலகைப் பகைத்து மாள்கின்றனர்.

குபோஜனன்:—ஆமாம், தருமன் எல்லாவற்றிற்கும் சமாதானம் சொல்லிவருகிறுன். அவர்கள் செல்வர் புத்திரர்கள். அப்படித்தான் ஆபரணங்களணிவர். ஏழையாகிய நமக்கு, அது முடியாது. இதுமாத்திரமா? அவர்கள் அருந்தும் சிற்றுண்டிகளும் பேருண்டிகளும் எண்ணிமுடியாது; ஏட்டிலடங்காது.

பிரதாபன்:—குபோஜனு! உண்மைதான். அப்படிச்செல்வத்துடன் வாழ்ந்திருக்க நாம் புண்ணியம் செய்துவைத்தோமில்லை. இதனுல் வருத்தப்படுவதி பயன் ஒன்றுமில்லை.

வசிஷ்டன்:—அவர்கள் ஆடையோ நமதுபோல மரப்பட்டையாலானதா? இல்லை. என்னவோ 'பட்டு' என்கிறுர்கள், அதனுல் செய்யப்பட்டதாம். என்ன வழவழப்பாயிருக்கிறது! இதுவும் பூஜாபலந்தான். அதுவுமன்றி, அவர் பெற்றோர் அக்குழந்தைகளை அத்தனை ஆதரவோடு வளர்க்கின்றனர். நம்மைப் பெற்றவர் நம்மை அப்படி வளர்க்கிறதில்லை. பிதாவுக்கு நிஷ்டையும், மாதாவுக்கு அதிதிபூஜையுமே இவ்வுலகவின்பங்கள்.

சுசீலன்:—அவர்கட்குப் பிறந்திருப்பதுபோல ஒன்றுயிருப்பின் நம் பெற்றேரும் ஆதரிப்பர். இப்போது என்னசெய்வார் பாவம்! சரிவர ஆகாரங் கிடைப்பதே போதுமானது அன்றே?

குபோஜனன்:—ஆஹா! மகா ஆகாரங்கிடைக்கின்றதே யப்பா! நீதான் மெச்சிக்கொள்ளல் வேண்டும்! கூழைச் சட்டியில் வார்த்துக் குடிக்கிறோமே, இது தானே? ஒருகால் மாதவன் வீட்டுக்குப் போயிருந் தேன். அடடா! என்ன போஜனம்! என்ன இலை!! என்ன பரிமளம்!!! அவன் சாப்பிடும்போது என் நாவில் நீருறிற்று. அந்த உணவையும் அந்தப் பையன் சரியாய்க் கொள்ளாமல் நன்றாயில்லை யென்று வெளியில் எறிந்துவிட்டான். நான்கு நாள் கழித்தும் அந்த உலர்ந்த இலையில் மணம் போகவில்லை. அஃதன்றோ உணவென்பது! அந்த உணவு எனக்குக் கிடைத்திருந்தால் நான்குநாள் பசியாதபடி நன்றாய் விலாப்புடைக்கத் தின்றி ருப்பேன்.

தருமன்:—உனக்கு உணவளிக்க எத்தனித்தவரது குடியும் நமது குடிபோலாய்விடும். வயிறு வண் ணான்தாழியோ அப்பா! உண்ட நமக்கு பசியடங் கியும் இவனுக்குப் பசியடங்கிய பாட்டைக் காணோம்.

விகடன்:—அண்ணா! வேண்டாம், வேண்டாம். நல்லுண வும் வேண்டாம், நாய்ச்சண்டையும் வேண்டாம். அப்பா! ஒவ்வொரு செல்வர் வீட்டிலும் சுவானங் கள் கூடிக்குரைத்து அவ்விடத்தை அசுத்தம் செய்கின்றனவே! அஃதில்லாமலிருப்பதே நமக்கு இன்பமும், உணவும் ஆகும்.

குணாகரன்:—எட, தம்பிகாள்! பாடம் படித்தீர்களா? விளையாடப்போனீர்களே!

பரதன்:—அதற்குத்தான் விளையாட்டை நிறுத்திவந்தோம்.

குணசீலன்:—குழந்தைகாள்! நமக்குச் செல்வம் படிப்புத்தான். இதனால் நிரம்பாதபொருள் ஒன்றுமில்லை. இதனை நன்கு கவனிப்பீர்களாக.

பிரதாபன்:—படித்திருப்பதால்தான் சாந்தீபினி குமாரரைஅரசரும் உபசரித்து வேண்டுவன உதவுகின்றனர்.

தருமன்:—அண்ணா! பிதா சமிதாதானம் செய்ய அழைக்கிறார். விரைவில் போவோம்.

குணசீலன்:—யாவரும் வாருங்கள் போவோம். சிற்றாற்றில் சந்தியாவந்தனத்தைச் செய்துவிட்டுப் போவோம்.

(மறைதல்)



## முதலங்கம்—மூன்றாங்காட்சி.

---

காலம்—காலை. இடம்—துசேலர் மனை.

[சுசீலையும், புக்திரிகளும்.]

பத்மவதி:—தங்காய், சுமதிகா! இங்கேவா, அங்கே என்ன செய்துகொண்டிருக்கிறாய்?

[சுமதிகை வருகை]

சுமதிகை:—அக்கா! ஏன் அழைத்தாய்;

பத்மவதி:—தங்காய்! பிதாவின் நிஷ்டையறையை நன்றாய்ச் சுத்தஞ்செய்திருக்கிறாயா?

சுமதிகை:—சுந்தரமுகி சுத்தஞ்செய்கிறாள்.

பத்மவதி:—ஆனால், இதுவரையில் நீ என்ன செய்துகொண்டிருந்தாய்?

சுமதிகை:—வாயிலில் கோலம் இட்டுக் கொண்டிருந்தேன்.

[சுந்தரமுகி வருகை]

பத்மவதி:—ஏனடி, சுந்தரமுகி! அறையைச் சுத்தஞ் செய்தாயா?

சுந்தரமுகி:—ஆமாம். செய்தாய்விட்டது. இன்னும் ஏதேனும் வேலையுண்டானால் செய்கின்றேன்.

பத்மவதி:—சுந்தரமுகி! சுமதிகையையும் அழைத்துக் கொண்டு ஆற்றுக்குப்போ. நான் இங்கேயே ஸ்நா

னம் செய்துவிட்டுத் தாய்க்குவேண்டிய உதவி களைச்செய்கிறேன். அம்மாள்வரும் நேரமாயிற்று.

சுந்தரமுகி:—நல்லது, அப்படியே; வாடி சுமதிகா.

[இருவரும்போதல்]

பத்மவதி:—[ஸ்நானஞ்செய்து, வேறுசேலையுடுத்து, திலகமணிந்து, பூஜையறைக்குள் சென்று வணங்கித்] (தனக்குள்) தாயே, சீதாய்! நீ எங்களைக் கடைக்கணிக்கக்கூடாதா? உன்னை நம்பியிருந்தார்க்குக் குறையில்லையென்பார்களே. அஃது எங்கள் பக்கத்தில் பொய்த்துப் போயிற்றோ? அசோகவனத்தில் உனக்குத் தீங்கு செய்துகொண்டிருந்த அரக்கியரைக் கொலைசெய்ய உத்தரங்கேட்ட சிறிய திருவடிக்கும் (ஹநுமானுக்கும்) புத்தி சொல்லி அரக்கியர்பால் இரக்கம்பாராட்டினையே. உனக்கு அபராதம் செய்த ஜயந்தனையும் அல்லவா கடைக்கணித்தாய்! நல்லபக்தராகிய என் பெற்றோரைக் காக்கக்கூடாதா? நீ அறியாயோ இவர்களின் பக்தியை? நீ புருஷகாரஞ்செய்பவளல்லளோ? அருட்பெருஞ் சோதிக்கு எங்களைப்பற்றிச் சொல்லக் கூடாதா? உன் அருள்நோக்கம் இருந்தால் ஆகாதது முண்டோ? தாயே அருள் செய்க. எனது தாயின் சுதுணத்தாலும் உனக்கு இரக்கமுண்டாகவில்லையா? மேன்மேலும் துன்பத்தை நீங்கள் தந்தும் உங்கள்மேல் அற்பமேனும் குறை கூறுவளா? மற்றவரையாவது நோவளா? என் பிதாவையாவது வெறுப்பளா? நற்காலம் வரும் வரும்

என்றல்லவோ சொல்லிக் கொண்டிருக்கிருள். அந்தோ! அவள் செய்கையையும் இருப்பையும் காணவும் நினைக்கவும் எனக்குப் பயமும் வருத்த முமுண்டாகின்றனவே. என் பிதாவோ நல்ல பக்தர். உலகு விரும்பும் குணமுடையார். நிஷ்டையில் உங்கள் பாதமன்றி மற்று ஒன்றையும் விரும்பாதவர். இந்தக் குடும்பத்தின் வருத்தத்தை விதிச்செயல் என்று தள்ளிவிடுகிருர். பரமதயாளர்களாகிய நீங்கள் கடைக்கணித்தால் விதி என்னசெய்யும்? பூர்வ கர்மங்கள்தாம் என்ன செய்யும்? தாயே தயைபுரிவாய். [வாயிலில் சத்தம் கேட்கிறது.] (வெளியில்) யாரது; இதோ வந்துவிட்டேன்.

(ஒரு பெரியவர் தோன்றுதல்)

பெரியவர்:—குழந்தாய்! நீ குசேலர் புத்திரிதானே

பத்மவதி:—ஆம். அவர் புத்திரிகளில் ஒருத்திதான்.

பெரியவர்:—செல்வமே! உன் முகத்தில் விவேகக்குறி தோன்றினுலும் சிறிது துயரக்குறி வெளிப்படுகிறதே, காரணமென்ன?

பத்மவதி.—சுவாமி! யாருக்கும் உள்ளதுதானே? தாங்கள் யாரோ தெரியவில்லை. பெரியவர்களாயிருக்கிறீர்கள். வரவேண்டும். வீற்றிருக்கவேண்டும். என் பெற்றேர் இப்பொழுது இங்கில்லை. நான் தான் இங்கு உபசரிக்கவேண்டியவள். ஏதேனும் குறை இருந்தாலும் பாராட்டாமல் கிருபை செய்ய வேண்டும்.

பெரியவர்:—பக்திக்கனியே! நான் பிறரிடம் உபசாரத்தை விரும்பேன். மனத்தூய்மையையே விரும்புவேன்.

பத்மவதி:—மாதவ! எவ்வளவுதான் தூயராயினும் வெளிவேடம் இல்லாதாரை உலகம் கவனிப்பதில்லை. பகவானும் அப்படியே பக்ஷபாதம் செய்கிறார்.

பெரியவர்:—சுகுணமே! அதேன் அப்படித் தோஷாஹிதர்க்கும், தோஷம் கற்பிக்கிறாய்? அப்படி என்னாதே.

பத்மவதி:—அப்படி மனத்தூய்மையைக் கவனிப்பாரானால் பிதாவின் மனநிலையும், அவர் குணமும், குடும்பமும், அது படும் வருத்தமும் கடவுள் அறியாதவையோ; இந்த ஒருசாக்ஷியே போதாதோ பகவான் பக்ஷபாதமான அருளுடையார் என்பதற்கு?

பெரியவர்:—குழந்தாய்! பிராரப்தம் அநுபவித்துத் தானே தீரவேண்டும். அன்றெழுதினதை அழித்தெழுத அயனாலும் முடியுமா?

பத்மவதி:—பெருமானே! என்ன? யாவும் தெரிந்தும் தெரியாதவர்போல் பேசுகிறீர்கள். பிராரப்தம் அநுபவித்தே தீரவேண்டுமானால் கடவுளுக்குண்டாகும் பெருமையென்ன? அல்லது அப்படியே அநுபவிக்கப் படுகிறதா? பலர் அநுபவிக்கிறார்கள். சிலர் இல்லை. சாவித்திரி தனது உறுதி

யான பக்தியால் தன் கணவன் சத்தியவானுக்கு விதித்திருந்ததை மாற்றிக் கொள்ளவில்லையா? மார்க்கண்டேயனுக்கு விதித்திருந்தபடியே நடந்ததோ?

பெரியவர்.—என் அருமையே! பகவானால் ஆகாதது ஒன்றுமில்லை. விதித்துள்ளதையும் விலக்கச் சக்தியுண்டு. ஆனால் அவர்கள் விரும்பினபடிதானே செய்யப்படும். உன் பிதாவோ கடவுள் திருவடி ஒன்றனையே விரும்பியிருப்பதால் அதனைத்தான் கொடுத்தருள்வர். இவ்வுலகத்தில் முன்வினைப் பயன் எல்லாம் அநுபவித்தொழிந்தால் அவருக்கு முக்தி நிச்சயந்தான். இனிப்பிறப்பில்லை. உன் தாய்க்கு இவ்வுலக இன்பத்திலும் பற்றுண்டு. பதிவிரதையாதலின் அதனைத்தானே செய்துகொள்ள வகையில்லை. கணவனைக்கொண்டே யாவும் செய்துகொள்ளல்வேண்டும். அதனால் உன் தகப்பனருக்கு ஆஸக்தியும் ஆவசியகமும் தோன்றும்படி நீங்கள் செய்விக்க, அவரும் அதைக்குறித்து மனத்திலேயாவது உறுதியாய் நினைந்தால் அப்படியே நடக்கும். தடையில்லை. தவிரவும் பரம்பொருளோ வேண்டுவார் வேண்டியபடி உதவும் பொருட்டுத் தன் ஸௌலப்ய குணந்தோன்றக் கண்ணனாயவதரித்திருக்கிறார். அக்கண்ணனும் உன் பிதாவுடன் சாந்தீபினி முனிவரிடம் படித்தவரென்று சொல்கிறார்கள். இவ்வளவும் ஒத்திருக்கவும் உன் பிதாவுக்கு விருப்பமில்லாததே குறை

வாகவிருக்கிறது. அதுவும் ஒத்து நேர்ந்தால் அனைத்தும் ஆகலாம். பின்னர் இவ்வுலகில் உங்களுக்கு ஒப்பாவார் எவ்விதத்திலும் யாருமில்லை.

பத்மவதி:—மாதவ! இவர்க்கு இவ்வுலகவின்பத்தில் பற்றுத் தோன்றும்படி செய்வதும், அப்பரமனலாவது அவரொத்த தம்மாலாவது முடியுமேயன்றி எம்மால் முடியுமோ?

பெரியவர்:—அதற்கும் முயற்சி வேண்டும். அஃது இருந்தால் உன் பிதாவுக்கும் இவ்வுலகவின்பத்தில் பற்றுண்டாங்கும்படி செய்யப்படும். இவ்வுலகத்திலும் உங்களுக்கு நல்ல இன்பம் உண்டு. "முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" "முயற்சி திருவினையாக்கும்." நேரமாயிற்று யான் போய் வருகிறேன்.

பத்மவதி:—நமஸ்காரம்! போய்வரவேண்டும்.

[பெரியவர் செல்லுகிறர்]

(இவள் சமையலுக்கு வேண்டியவற்றை சேகரித்துக் கொண்டிருக்கிறள்:)

[குசேலர் வருதல்]

குசேலர்:—குழந்தாய் பத்மவதி!

பத்மவதி:—இதோ வந்தேன். (ஓடிவந்து) பிதா! நமஸ்கரிக்கிறேன். (வணங்குகிறள்.)

குசேலர்:—இதனை எடுத்துவை. உன் தாயார் எங்கே அம்மா?

பத்மவதி:—அப்பா! அம்மாள் ஆற்றுக்குப் போயிருக்கிறள். திரும்பிவருஞ் சமயந்தான்.

குசேலர்:—குமுந்தாய்! குணசிலன் எங்கே?

பத்மவதி:—பூஜைக்கு மலர் எடுக்கப் போயிருக்கிறான் சகோதரருடன்.

குசேலர்:—பூஜையறை சுத்தஞ் செய்யப் பட்டிருக்கிறதா?

பத்மவதி:—பிதா! வழக்கம்போல் சுந்தரமுகியும் குமுதமும் சுத்தி செய்தார்கள்.

குசேலர்:—சரி:

(போகிறார்)

[குணசீலன் தம்பியருடன் வருதல்]

பத்மவதி:—அண்ணா! அப்பா வந்துவிட்டார். புஷ்பம் வேண்டுமென்று கேட்டார்.

குணசீலன்:—இதோ கொண்டுபோகிறேன்.

(கொண்டுபோதல்)

பத்மவதி:—அடி, அம்புஜம்! நெல் குற்றுவோம் வருகிறாயா?

அம்புஜம்:—குற்றுவோம். இதோ வந்துவிட்டேன்.

பத்மவதி:—ஆனால், இதைக்கொண்டுபோய் வெயிலில் காயவை; இதோ வருகிறேன்.

[தருமன் வருகை]

தருமன்:—அண்ணா, குணசிலா! இன்று தானியந்தான் அகப்பட்டது கறிக்கு; இது புத்தியை வளர்க்குமாமே? அதனால் இவ்வளவு கொண்டுவந்தோம்.

(கொண்டுவந்ததைக் கீழே வைக்கிறான்)

குணசீலன்:—நல்ல குறிதான். இதனால் செல்வமும் வளருமென்று பெரியோர்கள் சொல்கிறார்கள். நீளாதேவி! இதனைக்கொண்டுபோய் உள்ளே அக்காளிடம் கொடு அம்மா. (கொண்டுபோதல்)

[தாய் வருகை]

சுசீலை:—(தீர்த்தக்குடத்தைக் கீழிறக்கி, வேறு வஸ்திரம் உடுத்து, நெற்றிக்குத் திலதமணிந்து, கணவனை வணங்கி, பூஜையறைக்குச்சென்று வணங்குதல்.) அடி பத்மா!

பத்மவதி:—அம்மா! நமஸ்கரிக்கிறேன். நீ எதற்காக என்னை அழைத்தாய்?

சுசீலை:—குழந்தாய்! செய்யவேண்டிய காரியமெல்லாம் செய்திருக்கிறாயா? நெல் குற்றியாய்விட்டதா?

பத்மவதி:—அம்மா! ஆய்விட்டது.

சுசீலை:—குழந்தாய்! இன்று என்ன உன்முகம் முன்னிலும் சந்தோஷமாயிருக்கிறது.

(முத்தங்கொடுக்கிறாள்.)

பத்மவதி:—தாயே! இன்று இங்கு ஒரு பெரியவர் வந்திருந்தார். அவருக்கும் எனக்கும் சிறிதுசம்பாஷணை நடந்தது. அதன் முடிவில் அவர் தமது அபிப்பிராயமாகச் சொன்னதாவது:— "உங்களுக்கு இவ்வுலகத்திலும் நல்ல இன்பமுண்டு. இது முயற்சியால் ஆகவேண்டும்: அதாவது, இவ்வுலக இன்

பத்தில் ஆசையில்லாத உன் பிதாவுக்கு அதில் ஆஸக்தி பிறந்து, அவர் கண்ணனை இவ்வெண்ணத்துடன் கண்டாலும் உங்கள் குறை தீரும்'' என்பதே.

சுசீலை:—கண்மணி! அவர் யார்? பெரியவரானால் தக்க படி உபசாரஞ் செய்யவேண்டுமே? செய்தாயோ அம்மா!

பத்மவதி:—அம்மா! என்னவோ தெரிந்தவரையில் உபசரித்தேன். அவரும் திருப்தியுடன் அங்கீகரித்தார், அம்மா! அவர் தோன்றினதும் ஒரு வியப்பாகத்தான் இருந்தது.

சுசீலை:—(வேலை செய்துகொண்டே) குழந்தாய்! அஃது என்ன ஆச்சரியம்?

பத்மவதி:—நான் வழக்கப்படி பூஜையறையில் வணங்கி நின்று சீதாதேவியைத் தியானித்து நமது குறையனைத்தும் சொல்லி முறையிட்டேன்; உடனே வாயிலில் அவர் தோன்றினார்.

சுசீலை:—குழந்தாய்! என்னவோ அவர் சொல்லிவிட்டுப் போனாரென்றாலும், உன் பிதாவின் குணத்தையறிந்தநாம் அவரிடம் எவ்விதம் இவ்விஷயத்தைச் சொல்லலாம், அம்மா?

பத்மவதி:— ஏன்? சொன்னாலென்ன? மற்றவரைப்போல் நாம் ஆகாவிடினும், சிறிதாவது மனிதவகுப்பில் சேர்ந்த நாகரிகம் பெறவேண்டாமா? இச்செய்தி கேட்டுப் பிதா கோபமடையமாட்டார்.

சுசீலை:—ஆமாம். நாகரிகம் அடைய வேண்டியதுதான், என்றாலும் அவரிடம் சொல்ல என்மனம் துணிய வில்லையே.

பத்மவதி:—அம்மா! நீ பதிவிரதையாதலால், அஞ்ச வேண்டுவது கடமையே. அதனால் அவருக்கு இஷ்டமில்லா விஷயத்தைச் சொல்லவு மாட்டாய். நமக்கோ அது சொல்லித்தான் ஆகவேண்டும். ஆதலால் ஒரு காரியம் செய்யலாமே.

சுசீலை:—அதென்னகாரியம்? செய்யத் தகுவதானால் செய்வோம். அதற்கும் தெய்வசம்மதம் இருக்க வேண்டும்.

பத்மவதி:—இன்றைக்குப் பிதா உண்டு இளைப்பாறி யிருக்கும்பொழுது நான் மெதுவாக இவ்விஷ யத்தை ஆரம்பஞ்செய்கிறேன். வேண்டுமிடங்க ளில் நீயும் உன் அபிப்பிராயத்தை வெளியிடு. இரு வராகச் சொன்னால் பிதாவும் அதனை ஏற்றுக் கொள்வர்.

சுசீலை:—என்னவோ! அச்சமயம் நேர்ந்தால் செய்து கொள்வோம். இன்று அழைக்கப்பட்ட அதிதி வந்துவிடுவார். நீ போய்க் குழந்தைகளைப் பார்த்து அழைத்துவா. பிதா வந்து நேரமாய்விட்டது. மாத்தியான்னிககாலமும் வந்துவிட்டது. அபசா ரத்துக்கு ஆளாய்விடுவேன். சீக்கிரம் சமையல் முடியவேண்டும். (இருவரும் போகின்றனர்)



## இரண்டாமங்கம்—மூன்றாங்காட்சி.

---

காலம்—பகல்　　இடம்—குசேலர்மனை.

[குசேலர் சாப்பிட்டு இளைப்பாறியிருக்கிறார்]

குசேலர்:—(பத்மவதி சமீபத்திலிருக்க) பத்மவதி! என்ன இன்று ஏதோ ஒரு மாதிரியாக இருக்கின்றாய்?

பத்மவதி:—பிதா! அப்படி ஒன்றுமில்லையே.

குசேலர்:—குழந்தாய்! இல்லை, இல்லை. உன் முகவேறுபாட்டால் நோக்கம் வேறென்று தெரிகிறது.

பத்மவதி:—பிதா! என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? யாருக்கும் எப்பொழுதும் ஏதாகிலும் ஒரு நோக்கம் இருந்துகொண்டுதானே இருக்கும்.

குசேலர்:—ஆமாம், புத்திசாலிக்கு எவ்விஷயத்திலாவது கவலை சென்றுகொண்டுதானிருக்கும்.

பத்மவதி:—ஆனால் முட்டாளுக்கு அப்படியிராதோ?

குசேலர்:—அவர்க்கு இருந்தாலும் ஒரே விஷயத்தில் நிலைத்திராததலால், அவர் முகத்தில் இப்படிப்பட்ட குறிப்புத் தோன்றாது.

பத்மவதி:—ஆனால் ஒரே கவலையுடையாருக்கு மனதின் அநுபவத்தை முகம் நன்றாய் விளக்கும் போலிருக்கிறது.

குசேலர்:—ஆமாம். உன் முகம் இப்பொழுது இருக்கின்றதே அதைப்போலத்தான் இருக்கும். "அடுத்தது காட்டும் பளிங்கு போனெஞ்சம், கடுத்தது காட்டு முகம்." என்னும் பெரியோர் வார்த்தையை மறந்தாயோ?

பத்மவதி:—ஆனால், எனக்குள்ள கவலை என்னவென்று ஊஹிக்கின்றீர்கள்?

குசேலர்:—உள்ள குறையை எப்படி நீக்கிக்கொள்வோமென்பதேதான்.

பத்மவதி:—இதென்ன பிதா? சோதிடம் பார்த்தீர்கள் போலிருக்கிறது! கவலை என்பது குறை நீக்கிக் கொள்ளவேணுமென்ற நினைவுதானே! இன்ன விதமான குறை என்ற விவரம் இல்லையா?

குசேலர்:—குறை நீங்கக் கவலையென்றால், இப்பொழுது இருக்கும் நிலைக்குச் சிறிதாகிலும் உயரவேண்டும் என்ற நினைவுதான்.

பத்மவதி:—அஃதாவது... ... ... ...

குசேலர்:—உன் தாய்தான் சொல்லவேண்டும்.

பத்மவதி.—அம்மா! அஃது என்னகுறையாகவிருக்கும்?

சுசீலை:—எனக்கென்ன தெரியுமம்மா? ஆனால், மிக்க தரித்திரமுடையார் மிக்க உயர்ந்த நிலையை விரும்பமாட்டார். தாழ்ந்த மனிதரைப் போலாவது நாகரிகத்தோடு இருக்கவேண்டுமென்றேதான் ஆசைப்படுவார். இதுதான் எனக்குத் தெரிந்ததம்மா.

குசேலர்:—நாம் இப்பொழுது இருக்கும் நிலை உங்களுக்கு ஒரு குறையாகத்தான் தோற்றும். பகவத் சங்கற்பத்தை உள்ளபடி நீங்கள் அறியீர்கள். "தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை, அம்மா பெரிதென்று அகமகிழ" வேண்டும்.

பத்மவதி:—ஆனால், பிதா! பகவத் சங்கற்பம் நாம் நீங்காத வறுமையோடிருக்க வேண்டுமென்பது தானே.

குசேலர்:—ஆம். கடவுள் நினைவும் நமது வினையையனுசரித்துத்தானே நிகழும்.

பத்மவதி:—ஆனால், நமது வறுமையை நமது முயற்சியால் போக்கிக்கொள்ள முடியாதோ?

குசேலர்:—குழந்தாய்! ஊழ்வினையையும் கடவுளையும் தருமத்தையும் முக்தியையும் நம்பாமல், முயற்சியாலேயே பொருள் சம்பாதித்து அதனால் இன்பமடையலாம் என்று சொல்பவர் "லோகாயதம்" என்ற மதக்கொள்கையை யுடையவர் அல்லவோ? நீ அந்த வகுப்பைச் சேர்ந்தவளல்லவே?

பத்மவதி:—அப்படி நான் நாஸ்திகமதக் கொள்கையைக் கொள்ளவில்லை. கடவுளுண்மையை முற்றும் ஒப்புக்கொண்டவள்தான். அதிலும் "அவனன்றி யோரணுவும் அசையாது" என்ற நம்பிக்கையில் மிகவும் ஆழ்ந்தவள்.

குசேலர்:—அப்படியிருக்க, நாம் கவலைப்படுவது ஏன்? பகுத்தறிவில்லாப் பறவை விலங்கெல்லாம் காட்

டில் வாழ்கின்றனவே, அவற்றிற்கு ஏதேனும் பொருள்வைப்புண்டோ? வருவாயுண்டோ? யாவரிடத்தேனும் போய் யாசிப்பதுண்டோ? நாளைக்கு வேண்டுமென்ற கவலைதான் உண்டோ? அவற்றுள் உணவின்றி யிறந்தது உண்டோ? "கல்லினுட் சிறு தேரைக்கும் கருப்பை யண்டத்துயிர்க்கும் புல்லுணவளித்துக் காப்பான் புனத்துழாய் கண்ணியண்ணல்", ஆதலால் நீ கவலையுறுதே.

பத்மவதி:—பிதா! அந்த மிருகங்களும் பறவைகளும் பகுத்தறிவில்லாதவை யாதலால், அவைகளின் முயற்சியைப் பகவான் எதிர்பார்த்திரார். "மக்கள் தாமே ஆறறிவுயிரே" என்றபடி 'விவேகம்' என்னும் ஆறாவது அறிவு நாம் உடைத்தாயிருத்தலால், நமது முயற்சியை அவசியம் அவர் விரும்புவர் என்பது பெரியவர் அபிப்பிராயமல்லவா?

சுசீலை:—குழந்தாய்! அவைகளுங்கூடத் தினந்தோறும் விடாமுயற்சியைச் செய்தே தமது உணவைத் தேடிக்கொள்கின்றனவே யல்லாமல் அவைகள் இருந்தவிடத்தில் இருக்கின்றனவா? இல்லையே. பகவான் யாருக்குத்தான் முயற்சியை எதிர்பாராமல் அருள் செய்கிறார்? சீதையென்னும் மாதாவைச் காப்பதற்கு அவருடைய பிரேமையையும் விபிஷணனைக் காப்பதற்கு அவனுடைய பிரார்த்தனையையும் அல்லவா ஆதாரமாகக் கொண்டார். இராவணனை ரக்ஷிப்பதில் தமக்கு விரைவு இருந்தும் அவன் தம்மைச் சரணம் புகாததாலல்லவா

வதைத்தனர்! இவ்விரண்டு செயலும் இராம பிரானிடம் தெளிவாய் விளங்குகின்றனவல்லவா?

குசேலர்:—அது போலத்தான் முயற்சியால் நமக்கும் நடக்கிறது. நானும் வெளிச்சென்றுதானே உண வுக்கு ஏற்பாடு செய்கிறேன்; நமக்கு ஆகாரம் கிடைக்கவில்லையா? ஆனால், கிடைத்தமட்டில் தானே திருப்தி யடையவேண்டும்! "திருப்தியில் லாத அந்தணன் குறைவடைவான்" என்பது நீதி வாக்கியமல்லவா?

பத்மவதி.—அப்பா! தாங்கள் கொண்டுவருவது நமது குடும்பத்துக்குப் போதாராது. அதனால்தான் இந்த முயற்சியும் பலன் அடையவேண்டும் என்று நாங் கள் முயற்சி செய்கிறோம். குழந்தைகளினுடைய வயிற்றுப்பசி ஒருபொழுதும் அடங்கினபாடே இல்லை. தாயோ ஆகாரத்தின் சுவையையும் இது வரையில் அறிந்தாளில்லை. இந்த விஷயம் தங்க ளுக்குத் தெரியாதது. தாங்கள் வெளியிலிருந்து வருகிறீர்கள். கொண்டுவந்ததைத் தருகிறீர்கள். பூஜையைப் புரிகிறீர்கள். இன்பம் உறுகிறீர் கள். அவள் குறைவையும் சுகுணத்தையும் கூடவே யிருந்து அநுபவிக்கும் நாங்கள் அறிவோம். பகவானும் அறிவார். தமக்குத் தெரியவேண்டு மாயின் நாங்கள் சொல்லித்தான் ஆகவேண்டும். அவளோ தங்களிடம் தன் குறையின் குறிப்பை யும் காண்பிப்பதில்லை. உத்தமியாதலின் தங்களு டைய திருப்தியிலேயே நோக்கமுடையவளாயிருக்

கிருள். பலமுறையும் இந்தக் குறையைச் சொல்லும்படி நான் தூண்டியும் பயப்பட்டாளாதலால், இப்பொழுது நான் துணிந்தேன்; வீட்டிலுள்ள குறையைப் பெண்கள் சொல்லாவிட்டால் புருஷர்களுக்கு எப்படித்தெரியும்? தாங்களோ உலகப் பற்றை முற்றுமொழித்துப் பகவான் திருவடியொன்றையே பற்றியிருக்கிறீர்கள் லௌகிக விஷயத்தில் தாங்கள் கவனம் செலுத்துகிற அந்தச் சிறிது நேரத்திலாயினும் சொன்னால்தானே தெரியும்!

சுசீலை:—குழந்தாய்! நான் எப்படியம்மா தெரிவிப்பேன்? அவர்கள் தியானத்திலிருக்கும்போது முடியுமா? கிரந்தகாலக்ஷேபம் செய்துகொண்டிருக்கும்போது தான் கூடுமா? மனம் லௌகிக விஷயத்திலிருந்து ஒழிந்திருக்கும்போது அந்த மனத்தை வேறொன்றில் கவனிக்கும்படிச் செய்தால், அதைவிடக்கொடியபாவம் உண்டோ? இதனால்தான் எனக்கு மனம் துணியவில்லையம்மா.

பத்மவதி:—அவருக்கு ஒழிந்தநேரம் இல்லாதபடியினால் உன் மனம் துணியவில்லை என்கிறாய்; அது சரியன்று. உன் மனம் துணிந்திருந்தால் சமயமும்நேரும். நான் துணிந்திருக்கும் இந்தச்சமயம் அவருக்கு ஒழிந்த நேரமாயிற்றல்லவா? இந்தக் காலமே புருஷருக்கு ஒழிவும் களிப்புமுள்ள காலம். இந்தநேரந்தான் பெண்கள் கணவரிடம் தங்கள் வீட்டுக் குறையைச் சொல்லுங்காலம்.

சுசீலை:—கண்மணி! இன்றுதான் உங்கள் தகப்பனர் சாப்பிட்டபிறகு சிறுநாழிகையாவது உட்கார்ந்திருந்து லௌகிகவிருத்தாந்தத்தில் சம்பாஷணை செய்கிறர். இதனல், பகவான் நமது குறைகளை நீக்க நினைத்திருக்கும் காலமும் வந்துவிட்டது என்றே எண்ணுகிறேன்.

பத்மவதி:—தாயே! அப்படியே நல்லகாலம் உதித்துவிட்டது என்று எண்ணிக்கொள். அது எனக்குக் காலையிலேயே தெரிந்துவிட்டது. ஆனல், பிதாதான் அந்த விஷயத்தில் சிறிதாகிலும் முயற்சி செய்யவேண்டும்.

சுசீலை:—ஆமாம். இவர் முயற்சி செய்யவேண்டுமே. இவருக்கு இது அவசியம்தான் என்று தோன்றினபிறகுதானே முயற்சியில் செல்லுவார். அப்படி முயற்சியை யுண்டுபண்ணுவது ஆசையல்லவா? இவருக்கு ஒன்றிலுமே ஆசையில்லையே.

குசேலர்:—பத்மா! முயற்சி செய்யும்படி எனக்குச் சொல்லுகிறய்: நான் இப்போது செய்துகொண்டிருப்பதைக் காட்டிலும் முயற்சி வேறே ஒன்று உண்டானல் சொல்; தக்கதானல் செய்கிறேன். இவ்வளவு காலம் லௌகிகத்தில் மனத்தைச் செலுத்த எனக்கு இஷ்டமேயில்லை. பிறப்பை எடுத்தவர் தக்கதைச் செய்யவேண்டியதுதான். ஆனல் பற்றில்லாமல் செய்யவேண்டும்.

பத்மவதி:—பிதா! தமது குழந்தைகளின் பசியைப் போக்க நினைப்பது. தக்க காரியம் அல்லவா?

அதற்கு வேண்டிய முயற்சி, பொருள் சம்பாதிப்பதுதான். தமக்கு உதவி செய்யச்செல்வரொருவர் காத்துக் கொண்டிருக்கிறார். இனிமேல் ஆலோசனையென்ன?

குசேலர்.—செல்வரைப் போய்க் கேட்பதா? என்றாய்ச் சொன்னாய். குழந்தாய்! இது இழிவான தொழிலல்லவா? செல்வத்தில் மூத்த குடியைத் தாழ்ந்த குடி போய் யாசிப்பது இடித்து உண்ணல் அல்லவா? இந்த ஆலோசனை தக்கதன்று.

1. பல்லெலாந் தெரியக் காட்டிப் பருவால் முகத்திற் கூட்டிச்
செல்லெலாஞ் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி
மல்லெலா மகல வோட்டி மானமென் பதனை வீட்டி
இல்லெலா மிரத்த லந்தோ இழிவிழி வெந்த ஞான்றும்.

2. நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினு மீதலே நன்று.

3. சினக்கதிர்வேற் கண்மடவாய் செல்வர்பாற் சென்றீ
எனக்கென்னு மிம்மாற்றங் கண்டாய்—தனக்குரிய
தானந் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானந் துடைப்பதோர் வாள்.

சுசீலை.—குழந்தாய்! தம்மை வீடுவீடாய் நுழைந்து பிச்சையெடுத்து வரும்படி சொன்னதாக உன் தகப்பனார் எண்ணிக் கொண்டார். செல்வரிடம் போய்த்தமது குறையைச் சொல்லி யாசித்து மரியாதைகெடாமல் சுகித்திருக்கச்சொன்னேயென்று கொள்ளவில்லை.

குசேலர்.—இவள் மகா புத்திசாலினி! செல்வரிடத்தில் செல்வதாம்! பணப்பிச்சை எடுப்பதாம்! வீடு விடாய்ப் போய்ப் பிச்சையெடுப்பதிலும் இதுமரி யாதையுள்ளது என்று எண்ணிக் கொண்டாய் போலும்? உன் ஆசை உன்னை அப்படி நினைக் கச் செய்தது. ஏழைகளை ஏழைகள்தாம் மதித்து உபசரிப்பார்கள். செல்வர் சிறிதும் மதிக்கமாட் டார்கள். அதுவும் அல்லாமல் அவமரியாதையும் செய்வார்கள்; யாசிக்கப் போனவர் மானமுள்ள வராயிருந்தால் உடனே உயிரை விடுவர். உலகத் தில் ஏழைகளைத் தாய் தந்தையர்களும் வெறுக்கி ருர்களென்ருல், விவரித்துச் சொல்லவும் வேண் டுமா? யாதொரு விருப்பமும் இல்லாமலே பணக் காரரிடத்தில் ஒருவர் போனுல், எதையோ உத் தேசித்துத் தங்களிடம் வந்திருப்பதாக அவர்கள் எண்ணிக்கொண்டு, ஏழைகள் மனம் புண்ணும் படிப் பலவிதமான குறிப்புச் சொற்களைச் சொல் லி ஏளனம் செய்வார்கள். ஒரு வஸ்துவை விரும் பிச் சென்றுவிட்டால், சென்றவன்பாடு அம்பலக் தான். அல்லாமலும் செல்வம் வேண்டுமென்கி ருய். செல்வத்தை யாசித்து ஒருவரிடம் செல்ப வர், இந்தப் பிறப்பில் துன்பம் அடைவதுமன்றி மறுபிறப்பையும் எடுத்து மிகுந்த துன்பத்தை அடைவார்கள். தானியம் யாசிப்பவர்களோ வெகுசிக்கிரத்தில் உபசரிக்கப்படுகிருர்கள். இவர்

களுக்கு மறுபிறப்புக்குக் காரணம் உண்டாகாது. பாழான செல்வம் பெற்றவுடனே கர்வம் தோன்றி வாயுள்ளவர் ஊமைகளாகவும், கண்ணுள்ளவர் குருடராகவும், காதுள்ளவர் செவிடராகவும் ஆகிவிடுகிறார்கள். செல்வத்தின் செயல்களோ அளவிடமுடியா. பலவிதமான ஆசைகளையும் உண்டுபண்ணும். தெய்வபக்தியை முற்றிலும் ஒழிக்கும். நல்லவரையும் பகைவராக எண்ணச் செய்யும். மாதர்களின் கற்பையழிக்கச் செய்யும். இன்னும் இவைபோன்ற பலதுன்பங்களையும் செய்யும்.

4. சிறியரோ மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கான் மூடி வாயுள்ளார் மூக ராவர்
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவர்
குறிபெறு கண்ணு ளாருங் குருடராய் முடிவ ரன்றே.

5. ஒல்லொழுக் கினரைத் தீயவொழுக்கிஜோன் றாக்கச்செய்யும்
புல்லொழுக்கினரைத் தூயபுலத்தரென் றாக்கச் செய்யும்
நல்லகற் புடையமாதர் நலத்தையஞ் சாமைசெய்யும்
பல்வகைத் துயருஞ்செய்யும் பாழ்ம்பொருள் பெற்றுளார்
[க்கே

6. பொருவறு பந்தமெல்லாம் புணர்த்திடும் தெய்வ சிந்தை
யொருவமே லிட்டு நிற்கும் உறக்கமு மிறக்கச் செய்யுங்
கருவினுட் புகுத்தும் இன்ன கரிசுகண் டதனு லன்றோ
இருநிலத் திடைவெ றுக்கை யென்மனுர் புலமை சான்றோர்.

பத்மவதி.—பிதா! மிகுந்த செல்வமிருந்து, அதைத் தகுந்த வழியில் செலவு செய்யாதவருக்கல்லவா தாங்கள் சொன்னவெல்லாம் உண்டாகும்? செம்மையில் அறஞ்செய்யாதார் செல்வம் சிதறவேண்டித்தான் கடவுள் விலைமகளிரையும் கள்ளையும் சூதையும் படைத்திருக்கின்றார். தங்களைப் போன்ற ஸாதுக்களுக்கு அப்படி ஒருகாலும் உண்டாவதற்கு இடமில்லை.

சுசீலை.—பத்மா சாதாரண பணக்காரரிடத்தில் போய் யாசிக்கவேண்டிய விஷயத்தையே நீ சொல்லிவந்ததாக உன் தகப்பனார் இன்னும் எண்ணிக் கொண்டிருக்கிறார். அப்படிப்போக நாம் சம்மதிப்போமா? ஆனால், நாம் யாரிடத்தில் இவரைப் போகும்படி வேண்டுகிறோம்; தமக்கு எப்போதும் எதிலும் குறைவே ஏற்படாத ஒருவரிடத்தில் அல்லவா? அவரிடம் போய் யாசிக்காதவர் யார்? இந்திரன் முதலிய தேவர்களும், நாரதர் முதலிய ரிஷிகளும், தருமன் முதலிய அரசர்களும் அவரைச் சரண்புகுந்துதானே சந்தோஷத்தோடிருக்கிறார்கள். அந்தக் கண்ணபிரானிடத்தில்தான் உன் பிதாவும் போகவேண்டும். அவரே சாந்திபினி முனிவரிடம் பாடம் படித்துக்கொண்டிருந்தபோது உன் தகப்பனாருக்கு நல்ல சிநேகிதராக இருந்தவர். இப்போதும் அதற்குக்

குறைவில்லாமல் இருக்கப் பெற்றவர். இவர் போய் அவரைக்கண்டால் நன்றாய் மனத்திருப்தி யோடு உதவி செய்வர். அழாத குழந்தைதானே பால் குடிக்கிறது?

பத்மவதி.—என் பிதா! பரம்பொருளினிடத்தில் நமது குறைவுகளைச் சொல்வதில் என்ன குறைவு உண் டாகும்?

குசேலர்.—என் செல்வமே! குறையை யாரும் அவரிடத் தில்தான் சொல்லி முறையிட வேண்டும். ஆனால், பாற்கடலைச் சேர்ந்தடைந்தமீன் அந்தப் பாலை விரும்பாமல் மற்றொன்றை விரும்பி வருந்துவது போல, அழியாப் பேரின்பச் செல்வக் கடலாகிய அந்தவமுதனைக்கண்டும் நிலையாச்சிற்றின்பச்செல் வத்தையா விரும்பி வருந்துவது? இந்த எண்ணத் தை அவரிடம் வெளியிட நான் சம்மதப்படேன்.

பத்மவதி —பிதா! அந்தச் செல்வரிடம் இந்தச் செல்வத் தினுக்காகச் செல்ல விரும்பாவிட்டாலும், தமது செல்வர் செல்வியர்க் காகவாகிலும் செல்ல வேண்டாமோ? தங்கள்குழந்தைகளாகிய எங்களுக் குத் தங்களையல்லாமல் யார் நாதர்? அல்லாமலும் கற்புடைய பெண்களுக்குக் கணவனையல்லாமல் வேறொரு துணையுமுண்டோ? இவர்கள் தங்கள் குறைகளைத் தங்களது நாதரிடத்தில் தானே சொல்லியாற்றிக் கொள்வர். ஆதலால், தாங்கள்

எங்களைக் காப்பதே தருமமாகும். இதற்காகத் தாம்அத்தக்கண்ணனையே நாடிப்போகவேண்டும். ஏனெனில், அவர்தாம் தமது நாதன். தாங்கள் அவரிடம் போய் நமது குறையை வாய்கொண்டு சொல்லவும் வேண்டாம். இந்த நினைவோடு அவரைக் கண்டாலும் போதும். அவருக்குப் பக்தராகிய தம்மைப்பற்றிய நினைவு இருந்து கொண்டே இருக்கும். அவர்தமது அபிப்பிராயத் தையே எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

சுசீலை.—குழந்தாய்! கடவுளுக்கு நம்மீது கிருபை யிருந்தாலும், நமது முயற்சியில்லாமல் போனால் அருள் செய்யமாட்டார். ஜயந்தனும் இராவண னும் ஒரேவகையான அபராதத்தைச் செய்தவரா யிருந்தாலும், தன்னைச் சரண்புகுந்த ஜயந்தன் ஒருவனையே ஸ்ரீராமன் ரக்ஷித்தார் என்று சொல் லக் கேட்டிருக்கிறேன். இலையில் இருப்பது பால் சாதமானாலும் எடுத்துச் சாப்பிடாத வரையில் அது பசியை ஒழிக்குமோ? ஆதலால், நல்லமுயற் சியே செய்யவேண்டியது.

குசேலர்.—பத்மா! இவ்வளவு நாழிகையாக நீங்களிரு வரும் சொல்லி வந்தவற்றால் என்மனம் கலக்கத் தையடையாதானாலும், குழந்தைகளாகிய உங் களைக் காப்பது என் கடைமையாதலால், விதிப் படி முயற்சி செய்யவே துணிந்துவிட்டேன்.

கண்ணபிரானிடம் போகவேண்டியது அவசியம் என்றே தோன்றுகிறது. போகிறேன்; பெரியவர் அரசர் குழந்தைகள் கடவுள் இவரிடம் போகும்போது வெறுங்கையோடு போகக் கூடாது என்று சொல்வார்களே என்ன செய்யலாம்? ஆனால், உள்ளன்போடு ஏதாவது சிறிது உபகாரம் கொண்டுபோனாலும் போதும்.

சுசீலை.—சரி. ஏதாகிலும் கொண்டுபோவோமே. நாம் கொண்டுபோவதெல்லாம் நமது மனம் சமாதானப் படவேதான். அவர் விருப்பமுடையவரல்லர். ஒரு துளசித் தளத்திற்கு வசப்பட்டுவிடுவார்.

குசேலர்.—ஆனால், தக்கபடி செய். போய்வருகிறேன். குழந்தாய்! நான் போய் வரட்டுமோ அம்மா!

(செல்கிறார்கள்)



## இரண்டாமங்கம்—இரண்டாங்காட்சி.

---

காலம்—காலை; இடம்—நுசேலர் மனை.

(ஒரு பெரியவர் பிரவேசித்தல்.)

பத்மவதி.—வரவேண்டும், நமஸ்காரம். (வணங்குதல்.)

பெரியவர்.—நலம்பெருகுக. உன் பிதா இருக்கிறாரா?

பத்மவதி.—ஆம். பூஜை செய்து கொண்டிருக்கிறார்கள். வருவார்கள். தாங்கள் இங்கேயே இன்று அமுது செய்யவேண்டும்.

பெரியவர்.—என் செல்வமே! அப்படியே யாகட்டும் (சுசீலை வந்து வணங்குதல்.) தீர்க்கசுமங்கலியாக விரைவில் நன்மை பெறுக.

பத்மவதி.—பெருமானே! என் பிதாவை அழைத்துவருகிறேனிதோ. தாங்கள் இங்கேயே இருக்கவேண்டும்.

பெரியவர்.—குழந்தாய்! அப்படிச் செய்யாதே. அவர் பூஜையை முடித்துக்கொண்டு வரலாமே. என் அவசரம்? நான் இவ்விடத்திலேயே இருக்கிறேனம்மா.

சுசீலை.—அம்மா, பத்மா! நீ இம்மகானிடத்தில் சம்பா

ஷித்துக்கொண்டிரு. பிதாவும் பூஜையை முடித்திருப்பர். விரைவில் வரச்சொல்லுகிறேன்.

(போதல்)

பத்மவதி.—சுவாமி! பெரியவர்கள் தரிசனத்தைக்காட்டிலும் தேவாராதனை உயர்ந்ததாக நான் மதிக்கவில்லை. தவத்தால்தான் பகவானைக் காணலாம். அத்தவமே உருக்கொண்டிருக்கும் பிராமணர்க்கு மேல் வேறொரு பொருளுமுண்டோ? அதனால் தான் பிதாவை அழைத்துவர உத்தேசித்தேன். இதிற்பிழையுண்டோ?

பெரியவர்.—என் அருமையே! பிழையாதொன்றுமில்லை. ஆராதனம் நித்தியகர்மமாதலால் அது தடையின்றி நடக்கவேண்டியதே கடன்.

[குபோஜனன் முதலியவர் வருதல்,]

பரதன்.—அக்கா! பாரடி, நான் அலைந்து திரிந்து ஒரு கம்பங்கதிர் கொண்டுவந்து தின்றுகொண்டிருக்க குபோஜனன் அதனைப் பிடுங்கிக்கொண்டான்.

பெரியவர்.—அடா, குபோஜனா! அப்படிச் செய்யலாமோ?

குபோஜனன்.—என்பசி எனக்குத்தான் தெரியும். இவர்கள் இடும் கூழுக்குக் காத்திருக்க முடிகிறதா? கிடைத்தவரையில் கொள்ளவேண்டியதுதானே.

விகடன்.—எப்பொழுதாகிலும் உன்பசி ஆறினதுண்டா? கடலில்விழும் நதிகள் அநேகமானாலும் அது நிரம்புவதுண்டோ?

கௌசிகன்.—நம்மையன் சம்பாதிப்பது இப்பையன் அரைநாளுக்கும் போதாது.

விகடன்,—போடா! பெருவயிறன் இருக்கும் வீடு, திரு வெறுக்கும் காடுதானே.

பெரியவர்.—குழந்தைகளே! உங்கள் ஸகோதரனை யிப்படி நீங்கள் பரிஹஸிப்பது அழகன்றே.

வசிஷ்டன்—ஐயா பெரியவரே! நீங்கள் தாம் சொல்லுங்கள். சகோதரரா யிருப்பவர் ஒருவர் அடைந்ததை மற்றவரும் பகிர்ந்துகொள்வார் அல்லவா? இப்பாவிக்கு அச்செயலில்லையே. அப்படியிருக்க இவனிடம் யாருக்குத்தான் பிரியமிருக்கும்?

பெரியவர்.—அவன் வயிறு பெரியதா யிருந்தால் அவன் சம்பாதித்துக் கொள்ளுகிறான். அதில் உங்களுக்கென்ன வருத்தம்.

மெய்யன்.—அப்படி யிருந்தால்தான் பெரிதாயிற்றே? இங்கு யாருமே அப்படிச் சம்பாதிப்பவரில்லை. நாங்கள் பூரிக்காசுக்காகிலும் போய்வருவோம். இந்தப்பாவி யதற்கும் வாராமல் நாங்கள் கொண்டு வந்ததையும் அழுது வாங்கிக் கொள்ளுகிறான். சிலரிடம் அபகரித்தலும் செய்கிறான்.

போய்யன்.—நான் இன்று கொணர்ந்த மாம்பழத்தை நான் சாப்பிடாதிருக்கும்படி எச்சில் செய்து விட்டான். அப்பா! பேராசைக்காரனல்லவா இவன்!

பெரியவர்.—எப்படி யிருந்தாலும் அடக்கிப் பெருமைப் படுத்திக் கொண்டு போகவேண்டியது புத்திசாலிகளாகிய உங்கள் செயலல்லவோ? குணசீலா! நீ ஏன் கவனிக்கக் கூடாதிதனை?

குணசீலன்.—நல்லறிவு தலைப்பட்டால் நன்மையைப் பெறுவார்கள். இல்லாதவரையில் இப்படித்தான்.

தருமன்.— சுவாமி! பெருங்குடும்பத்தில் இப்படிச் சில விருப்பது ஸ்வபாவந்தானே. இதற்கு நாம் வியசனித்தாலாகுமோ? கூடியவரை முயற்சி செய்தும் பயன் பெறாததால் விட்டுவிட்டோம்.

குணாகரன்.—பெரியவரே! இது தரித்திரர்க்குப் பொருந்திய தன்மை. தேவரீருக்குத் தெரியாததா?

பெரியவர்.—என்ன! தரித்திரமா? ஏன் அப்படிச் சொல்கிறாய்? பரிபூரண பக்தராகிய உங்கள் தந்தைக்குக் கடவுள் அப்படிச் செய்வாரோ?

விகடன்.—ஐயா! பெரியவரே!! பகவான் அப்படிச் செய்ய மாட்டார்; தங்களைபபோன்ற பாகவத சிரோமணிகளின் அநுக்கிரகங்களையும் தினந்தோறும் பெற்று வருகிறோம். அப்படியான எங்களுக்கு வறுமையும் சிறுமையும் எங்கிருந்து வரும்?

நாம் நேரில் பார்த்துக் கொண்டிருக்கும்போதே தமக்குத் தெரிய மாட்டாதென்று அவர்கள் சொல்லுகிறார்கள். இதோ பாருங்கள் எங்கள் வீட்டினை! எம்மனைக்குக் காவலாய் இருப்பவர் சூரியனும் சந்திரனும். இரவும் பகலும் ஒருவர் மாறி ஒருவராய்க் காவல் புரிவர். அக்கினியோ எங்களுக்கு பயந்து வலியடங்கி எமது வயிற்றிலொடுங்கியிருக்கிறான். வாயுபகவான் எங்களை விட்டு ஒருகாலும் பிரிய மனமில்லாதவனாய் இவ்வீட்டிலேயே இங்கும் அங்குமாய்த் திரிந்து வருகின்றான். இப்பெருங்குடும்பத்தினுக்கு யமபாதை ஒருகாலும் நேரிடாது. வருணனோ எங்களனைவருக்குங் கண்ணுக்குக் கண்ணாய் இருக்கிறான். குரூபியானவர்களைக் கண்ணாலும் பார்ப்பதில்லை என்ற விரதம் நாங்கள் கொண்டிருத்தலால் குபேரனது வாடையும் இங்கே வீசக்கூடாது. கௌதம சாபத்தால் நிந்தைபெற்ற இந்திரன் பிராமணரது சமீபத்தில் வருவதும் இல்லையென்று உங்களுக்கே தெரியும் மும்மூர்த்திகளும் இங்கேயே காத்திருந்து எங்கள் பிதாவால் முப்பொழுதும் பூஜிக்கப் பெறுகிறார்கள். எங்களுக்கு உணவு பல்லுணவே.

பெரியவர்.—(தமக்குள்) ஆஹா! இந்தக் குழந்தைகளுக்குற்ற வறுமையால் இவ்வளவு கல்வியும் சிறக்கவில்லை. (வெளியில்) என்னருமைக் குழந்தாய்! உன் பெயருக்கேற்க நீநன்றுவசனிக்கிறாய். துன்ப

மிருந்தவர் விரைவிலேயே இன்பமடைவர் என்பது உலகத்தார் அபிப்பிராயம். இன்னுமிரண்டோர் நாட்களிலேயே கவலை தீரும். சந்தேகமில்லை.

சுமதி.—என் சிற்றறிவினுக்கும் அப்படியே தோன்றுகிறது. அதுவும் முயற்சி யில்லாமல் கூடுமா?

பெரியவர்.—அப்படி முயலுங்காலமும் சமீபித்திருக்கிறது. கவலைப்பட வேண்டாம்.

[ குசேலர் வருதல். ]

குசேலர்.—மஹான்! வாருங்கள். இன்று இங்கேயே அமுது செய்தருளவேண்டும். இவ்வுலகத்தில் ஆதித்தியத்தைப்போல் நலந்தருவது ஒன்றுமில்லை.

பெரியவர்.—"அன்புடையார் என்பு முரியர் பிறர்க்கு" என்பதைத் தங்களைக் கொண்டுதான் நிச்சயிக்கிறேன்.

குசேலர்.—அன்புடையார் சமர்ப்பிப்பது தினையளவாகிலும், அது தங்களைப்போன்ற மஹான்களது கைப்பட்ட அளவிலே வானமுஞ் சிறிதென்னும்படிப் பெருகிவிடுகிறது. தாங்கள் பூரணமானமனமுடையவர்களாதலரல் என் சிறுமை தங்கட்குப் புலப்படவில்லை.

பெரியவர்.—ஐயா! உங்களுடைய மன வுறுதிதான் என்ன! இத்தனை குழந்தைகளடங்கிய ஒரு கிரு ஹஸ்தனுக்கு இவ்வளவு பொறுமையும் உறுதியும் இருப்பது பெருமையினும் பெருமையே இந்தத் தருமத்தை இவ்வுலகு அறியும் வண்ணமே பரம் பொருள் தங்களை இவ்வுலகுக்கு அனுப்பினரோ என்றெண்ணுகிறேன். எம்பெருமான் வெகுவிரை வில் அருள்புரிவானாக.

விகடன்.—ஆமாம்' பெரியவரென்று வேஷம் போட்டுக் கொண்டவர்கள் தங்கள் வார்த்தைகள் உண்மை யாகும் பொருட்டு, நல்ல சக்தியுடையவர்களுக்கே சமயம் பார்த்து ஆசிர்வாதம் பண்ணுவார்கள். இதனால் அவர்கள் சொல்லுக்கு வரும் பெருமை என்னவோ?

சுசீலன்.—விகடா! இதென்ன? எல்லாரையும் பரிகாசம் செய்து கொண்டிருக்கிறாய்; இது நல்லநடத்தை யாகாது. தவிரவும் நீ சொன்னபடி பிராமணர் களுடைய சாபமோ அநுக்கிரஹமோ பயன் தரா திருந்ததில்லை. அந்தணர் வெறுத்தால் ஆகும் துணையேயில்லை. அந்தப்பரமன்செயலும் இந்தப் பெருமை வாய்ந்த பிராமணர்கள் செய்யக் கூடிய யாகமுதலிய நற்கருமங்களை யனுசரித்துத் தானே நடக்கிறது. அவர்கள் செய்யும் ஜபமுதலியவை குறைந்தால் கடவுள் தாம் படைத்த இயற்கைப்

பொருள்களையும் பலனளிக்கா வண்ணம் தடை செய்து விடுகின்றனர்.

தருமன்.—குழந்தாய்!

7. கரிய மாலினுங் கண்ணுத லானினும்
உரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமோ ரைந்தினு மெய்யினும்
பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால்.

குணாகரன்.—தம்பி!

8. ஆவ தற்கு மழிவதற் கும்மவர்
ஏவ லிற்கும் விதியுமென் றுலினி
பாவ தெப்பொரு ளிம்மையு மம்மையுந்
தேவ ரைப்பா வந்துணை சேர்த்ததே.

குசேலர்.—மைந்தா!

9. அந்த ணாளர் முனியவு மாங்கவர்
சிந்தை யாலருள் செய்யவுந் தேவரில்
நொந்து ளாரையு நோய்ந்துயர்ந் தாரையும்
மைந்த வெண்ண வரம்புமுண் டாங்கொலோ-

—ஆதலால்

குழந்தாய்! ஏன் நல்ல பழக்கங் கெட்டு உலகம் பழிக்கத் திரிகின்றாய்? இனிமேலாவது நல்ல சேர்க்கையைக்கொள்.

பெரியவர்.—அருந்தவரே! பிள்ளைச் சொல்லி னுள்ளேயும் குற்றங்காண்பது அழகன்றே.

தூசேலர்.—அப்படியல்ல. வணக்கமுண்டாக நல்ல பழக்கந்தான் வேண்டும். இந்தப் பழக்கமும் சிறுவயது முதலே ஆகவேண்டும். அது தவறிய காலத்தில் தான் தூண்டுதலும் அவசியமாக வேண்டி யிருக்கிறது.

விகடன்.—பிதா! தெரியாமல் செய்து விட்டேன். இனிமேல் இப்படி யுண்டாகாது பெரியவரே! சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம் பெரியோர் பொறுத்தருள்வது கடன். ஆதலால், என்னை மன்னிக்க வேண்டும்.

பெரியவர்.—குழந்தாய்! உனது சொற்களில் நான் ஆச்சரியத்தைக் கவனித்தேனே யொழியக் குற்றங்களை யாராயவில்லை. அஃது எனது பழக்கமுமன்று.

தூசேலர்.—இவன் தன் பெயருக்குத் தக்கபடி பேச்சுடையனானாலும், நல்ல பெரிய சபைகளில் புகழை யடைய மாட்டானல்லவா? அலக்ஷியம், தற்புகழ்ச்சி, தெய்வநிந்தை, தயையின்மை இவைகளுக்கு அடக்கமின்மையே தாயாக இருக்குமாதலால் இதனை யொழித்து விடுதலே நல்லது.

பெரியவர்.—ஐயா! தங்களுக்குப் புத்திரராய்ப் பிறந்தவர் ஒருகாலும் உலகநிந்தைக்கு ஆளாகமாட்டார்கள் இந்தக்குழந்தையும் இனிமேல் சரியாய்நடப்பான். புத்திருக்குள்ள புத்தி கெடா வண்ணம்

இன்னும் சிறிதுகாலம் செல்வமாக வளர்க்கப்பட்டால் எல்லாமக்களும் உயர்ந்து புகழுடைவார். உலகுக்கும் பெருமையுண்டு.

குசேலர்.—உண்மையே. முன்வினையும் முன்னவன் நினைவும் ஒத்து நடக்கும்போது செல்வம் வந்து சேரத் தடையுண்டோ? அதுவரையும் நாம் செய்யும் முயற்சி பலவாயிருந்தாலும் பலனே தராதாம்.

பெரியவர்.—தங்களுக்கு இது பெரியகாரியமில்லை. தாம் நினைத்தால் எத்தன்மைத்தான செயலையும் கண்ணபிரான் முடித்துக் கொடுப்பாரல்லவா? பக்தியுடையவருக்கு அருள்புரியவேண்டிய விரைவுக்காகவல்லவா அந்தப்பரமகருணாநிதி ஆதியஞ்சோதியுருவை யங்குவைத்து, இவ்விருள்தருமாஞாலத்து உதித்திருக்கின்றனர்?

குசேலர்.—ஆமாம். அதிலென்னதடை? பக்தருக்கு ஒரு குறைவந்தால் அதனை அந்த ருக்மிணிமனோகரனிடத்தல்லாமல் யாரிடம் முறையிட்டுக்கொள்வார்?

பெரியவர்.—ஆமாம். அவரல்லாமல் நமக்குத் துணை யாவார் யாவர்? அதிலும், அக்கருணைக்கடல் உங்களோடு கூடவே சாந்திபினியிடம் படித்திருக்கி

ளூர். நண்பர்களானல் வருந்தும்போதும் உதவு வார்கள். களங்கமாயிருந்தாலும், அது சந்திர ளுேடு உயர்வையும் தாழ்வையும் தானும் ஒக்க அநுபவிக்கின்றதல்லவா? உங்கள் சிநேகிதரோ உலகத்தாருக்குள்ள நண்பரைப் போலல்லர். எந் தக் குறையையும் நினைத்தமாத்திரத்தில் போக் கக்கூடியவர். உங்கள் குறையை அவரே நன் ருய்த் தெரிந்திருப்பவர். தாமாகவே உங்களுக்கு உதவி புரியப் பலதடவையிலும் நோக்கமுடை யவர். ஆனல், உங்கள் அபிப்பிராயத்தை எதிர் பார்த்திருக்கிருர். ஆதலால், இச்செயலில் உங்க ளுக்குப் பற்றுண்டானல் இந்த நிமிஷமே குறை யெல்லாம் நீங்கிப்போம்.

குசேலர்.—ஆமாம். இதற்காக நானும் அவரைக் கா ணுதலில் ஆசையுள்ளவன்தான். ஆனல் அழி யாச் செல்வத்தை தரவல்ல, அந்தப்பெருமானி டம் போய் இந்த அழியும் செல்வத்தையா விரும் புவது? என்ற ஆலோசனைதான் என்னுள்ளத் தைக் கலக்குகிறது.

பெரியவர்.—என்ன கலக்கம்? அந்த அழியாச்செல்வத் தையுங்களுக்குக் கொடுக்க அவர் முன்னமே கட மைப்பட்டுள்ளார். இப்போது உங்களுடைய மனைவி மக்களைக் காப்பதன்பொருட்டே இந்தச்

செல்வம் தேவை. தமது வேண்டுகோளுக்கிணங்கி இதனைக்கொடுக்கவும் அவர் கடமைப்பட்டவரே. நீங்கள் போய் அவரைக் கண்டாலும் போதரும். உங்கள் குறையைச் சொல்லவும் வேண்டாம்.

குசேலர்.—ஆமாம். அதற்காக நாளைக்கே புறப்படுவதாக ஆலோசனை செய்திருக்கிறேன்.

பெரியவர்.—ஏன்? இன்றேநல்லதினமாயிருக்கிறதே. பிரயாணத்திலும் காரியநன்மையைத் தருமே. ஆதலால் இன்றே புறப்படுங்கள்.

குசேலர்.—பாகவதர் நியமனப்படி செய்வதே எனக்குத் திருப்தி. அப்படியே செய்கிறேன். நேரமாயிற்று. வாருங்கள் போஜனம் செய்வோம். மற்றவிஷயங்களைப் பற்றிப் பிறகு பேசிக்கொள்வோம்.

(செல்கிறார்கள்)



# இரண்டாமங்கம்—மூன்றுங்காட்சி.

——:o( )o:——

காலம்—மாலை; இடம்—கமலத்தின்வீடு.

(கனகம் பிரவேசிக்கிறாள்.)

கமலம்.—வாடியம்மா கனகம்! என்ன வெகு நாளாகக் காணோம்? என்மீது ஏதாகிலும் கோபமா?

கனகம்.—இல்லேடி. இரண்டுநாட்களுக்குமுன் வந்திருந்தேன். அப்போது உன் கணவர் இருந்தார். தக்கசமயமில்லையென்று போய்விட்டேன்.

கமலம்.—அவரிருந்தாலென்ன? நேற்றுத் தங்கங்கூட வந்திருந்தாளே! இன்றைக்கும் வருவதாகச்சொல்லியிருக்கிறாள். ஆச்சு. வருகிற நேரந்தானிது.

கனகம்.—ஏன்? ஏதாவது விசேஷமுண்டோ?

கமலம்.—விசேஷ மொன்றுமில்லேடி; பொழுது போக்காகப் பேசிக் கொண்டிருப்போமென்றுதான்.

கனகம்.—ஆனால், உன்புருஷன் ஊரிலில்லையா என்ன?

கமலம்.—ஆமாம், ஊரிலில்லைதான்; துவாரகைக்குப் போயிருக்கிறார். திரும்பிவர நான்கு நாளாகும்.

கனகம்.—என்னவோ அம்மா! அவரிருந்தால் இங்கு வருவதற்கு என்மனம் கூசுகிறது.

கமலம்.—அடியம்மா! என்ன 'காணமடியறு'! எல்லாம் விசித்திரமாய்த் தானிருக்கின்றது. காகங்கதற வோடிக் கணவனைக் கட்டிக்கொண்டு ஒகையாய் அழுது மாய்ந்து காகங் கரந்துறையும் நடுக்காட்டிலேபுகுந்து போகத்துணிந்த புண்ணியவதிபோலிருக்கிறாய். அவர் என்ன உன்னைக் கைப்பிடித்திழுக்கிறாரா? கண்ணெடுத்துப் பார்க்கிறாரா? ஐயோ பாவம்! அவர் புஸ்தகமுங் கையுமாய்ப் பொங்கிவிழுகிறார். சுவடியுங் கையுமாய்த் தூங்கி விழுகிறார். நீயோ, அயல் புருஷரைப் பேசுவது அண்டம் கிடுகிடுக்கிறது. பரபுருஷரைப் பேசுவது பாரெங்கும் நகைக்கிறது. என்னவோ வித்தாரம் பேசுகிறாய். க்-க் (என்று முகவாய்க்கட்டையால் தன் இருபுஜத்திலும் இடித்துக்கொண்டு) நன்றாயிருக்கிறது!

கனகம்.—இல்லேடியம்மா! அத்தனைபெரியவர், அவர் இருக்கும்போது பேசவும் எனக்கு நாணந்தானம்மா!

கமலம்.—ஓஹோ! நல்ல இளம்புருஷர் இருக்கும்போது பேசலாம். கிழவனார் இருக்கும்போது பேசக் கூடாதோ? "வித்தாரக்கள்ளி விறகுக்குப் போனாளாம், கற்றாழைமுள்ளு கொத்தோடே தைத்ததாம்" எல்லாம் வேடிக்கைதான்.

கனகம்.—என்னடி கமலம்! இப்படிப் பேசுகிறாய்? என்றைக்காவது புருஷரிருக்கும்போது நான் உரத்துப்பேசியிருக்கிறேனடி? சும்மா கொட்டிக் கொட்டி யளக்கிறாயே?

கமலம்.—எல்லாந்தான். அவர்களைப் பற்றிப் பேசினால் வராத குற்றம் அவர்கள் இருக்கும்போது பேசினால் வந்து பற்றிக் கொள்ளும்போலிருக்கிறது.

கனகம்.—இதேதடியம்மா! இப்படிச் சொல்கிறாய்? நீங்களெல்லாரும் அயல் புருஷரைப் பற்றிப் பேசுகிறதில்லையா? உங்களுக்கு ஒத்ததுதானே எனக்கும்? நன்றாயிருக்கிறது! நன்றாய்ப் பிடித்துக்கொண்டாய் வேட்டை—உம்-உம்-பிடித்துக் கொண்டது போல.

கமலம்.—ஆமாம் அம்மா! நான் வேட்டைநாய்தான். அற்பங்களின் நேசம் ஆபத்தைத்தானே தரும்; ஏழைக் குறும்பு தாழ்க்குமா——?

[ தங்கம் வருகிறாள் ]

தங்கம்.—என்னடி கமலம்! இரைந்து கொண்டிருக்கிறாய்? ஒருநாளும் இப்படி நான் கேட்டதுமில்லை, பார்த்ததுமில்லையே.

கமலம்.—ஒன்றுமில்லேடியம்மா. கனகம் தனக்கு, வேறு புருஷரிருக்கும்போது பேச நாணமாயிருக்

கிறதென்று சொன்னாள். அவர்களைப் பற்றிப் பேச லாம், அவர்கள் இருக்கும்போது பேசினால் தோஷ மாகுமோ என்று நான் சொன்னேன். இதற்கு என்னை வேட்டைநாயென்று சொல்கிறாள். என் னடி தலையிலெழுந்து எனக்கு? இந்த அற்பங்க ளிடத்தில் சினேகங்கொண்டதால் அல்லவா இவ் வளவு பேச்செல்லாம் எனக்குக் கிடைத்தது? இல்லை, இவர்களால் எனக்கு ஏதேனும் லாபம் உண்டா? பின்னையுஞ்சொல்லப்போனால், என்னால் வேணுமென்றாலும் இவர்கட்கு வரும்படி உண்டு. அதனைக்கூட நினைக்கவில்லை பார். விடிக்தெழுந் திருந்தால் இவள் புருஷன் இந்தக் கிழவனார் காலைத்தானே கட்டிக்கிறார்? ஆகட்டும், இனி மேல் வருவர் இங்கே. பார்த்துக்கொள்ளுகிறேன். கிடக்கிறது கிடக்கிறது என்றால், கிழவியைத் தூக்கி மனையில் வை என்கிறாள். உண்டவீட் டுக்கு இரண்டகம் நினைப்பதால்தானே இப்படி வைத்திருக்கிறான் ஈசுவரன்.

தங்கம்.—ஆமாமாம். அவ்வளவு ஏதடி? என்னவோ நமக்கு அஞ்ஞானம் கேட்கவில்லை. நமக்கு ஆசை கிடந்து போராடுகிறது. இவர்களுக்கு என்ன? எல்லாம் வாங்கிக்கொள்ளும்வரையில்தான். பிறகு நீ யாரோ நான் ஆரோ என்றுதான் எண்ணுவார் கள்.

கனகம்.—அடி, கங்கம்! நான் வசனத்துக்கல்லவா சொன்னேனப்படி. இவ்வளவு தூரம் வினையாக்கிக் கொள்வள் என்று எண்ணவேயில்லை. இவளை நான் அப்படிச் சொல்வேனாடி? என் தலையிலெழுத்து அம்மா. வாக்கிலே சனியன் இருந்தது. இன்றைக்கு விழித்த முகத்திலேயே தினமும் விழிக்கவேண்டும். (கமலத்தைப்பார்த்து) அடி கமலம்! கோபித்துக் கொள்ளாதேடி. தெரியாமல் சொல்லி விட்டேனடியம்மா. மனஸ்தாபங் கொள்ளாதே.

தங்கம்.—என்னவிருந்தாலும் உன் வாய் துடுக்குள்ளதுதான் அம்மா! நீ வாயாலே கெட்டு வரிசை குலைகிறாய். உனக்கு எவ்வளவுதான் புத்தி சொன்னபோதிலும், அடி ஏனடி பொறுக்காமல் வருகிறது? என்ன? வாயறியாத வார்த்தையா? இன்னார் இனியார் என்றுகூடப் பார்க்கவேண்டாமா? அப்படித்தானில்லை. கமலம் சொன்னதில் என்ன பிசகு இருக்கிறது? நீ புருஷரிருக்கும்போது பேசினதில்லையா? பேசுகிறதில்லையா? அவள் சொல்லிவிட்டாளென்று கோபங்கொண்டு விட்டாயே. கன்னக்கோல் ஒளிப்பதற்காவது இடம் வைத்துக்கொள்ள வேண்டாமா? பேசப்போனாயோ சாகப்போனாயோ? நாக்கையடக்கிப் பேசவேண்டாமோ? (கமலத்தைப் பார்த்து)

அம்மா, கமலம்! இதையொரு பெரிய குற்றமாகக் கொண்டு கோபித்துக்கொள்ளாதேயம்மா! எல்லாரையுஞ் சொல்லி யுன்னையுஞ் சொல்கிறதா?

கமலம்.—இல்லேடியில்லே. இவள் சுசீலைக்கும் மேலே தான் குணத்திலும் நாணத்திலும் அடக்கத்திலும், அதனால்தான் புருஷரைக் கண்டு நாணுகிருள்.

தங்கம்.—சுசீலையா! அவள் தெய்வம் அல்லவா! பூமாதேவிக்கும் அவள் பொறுமை ஏது? குழந்தைகளும் குட்டிகளும். அப்பா! யாராலே சகிக்கப்படும் அது? மாதவா!

மலையிட்ட செல்வத் தார்கள் மகிழவோர் மகவுந் தாரான்
அலையிட்ட முட்டாட் செய்ய வம்புயத் திறைவோ னேரேழ்
தலையிட்ட விருபான் மைந்தர்த் தந்தனன்.

கமலம்.—ஆமாமம்மா! ஒருநாள் அவளகத்துக்குப்போயிருந்தேன். ஈசுவரா! அக்குழந்தைகள் அவள் இடும் கூழுக்கும் என்ன பாடுபடுகின்றன.

10. ஒருமகவுக் களித்திடும்போ தொருமகவு கைந்நீட்டு
முந்தி மேல்வீழ்க்
திருமகவுங் கைந்நீட்டு மும்மகவுங் கைந்நீட்டு
மென்செய் வாளால்

பொருமியொரு மகவழுங்கண் பிசைந்தழுமற் றொருமகவு
புரண்டு வீழாப்

பெருநிலத்திற் கிடந்தழுமற் றொருமகவென் மனஞ்சகிப்
பெரிதும் பாவம். [பான்

11. அந்தோவென் வயிற்றெழுந்த பசியடங்கிற் றில்லையென
வழுமா லோர்சேய்

சிந்தாத கஞ்சிவாக் கில்லையெனக் கன் றுயெனப்பொய்
செப்பு மோர்சேய்

மூந்தார்வத் தொருசேய்மிசை யப்புகும்போ தினிலொரு
முடுகி யிர்ப்ப [சேய்

கந்தாமற் றச்சேயு மெதிரிர்ப்பச் சிந்துதற்கு
கயக்கு மோர்சேய்.

12. இவ்வண்ணங் கலாம்விளைக்கு மைந்தர்களை யனிநோக்கி
யிரங்கி யேங்கிச்

செவ்வண்ணக் காதலத்தா லணைத்துமடித் தலத்திருத்திச்
சிறப்புச் செய்து

மைவண்ணக் கண்ணீரைத் துடைத்துமுகம் வெளிங்புறக்
வந்து மாம்ப [மை

ல்வ்வண்ண வாய்முத்தங் கொண்டுநயந் தோர்விதத்தி
லாற்றல் செய்வான்.

கனகம் —ஆமாம். என்ன புருஷன்? வீட்டுவருத்தந் தெரிந்துகொள்ளாமல் என்ன நிஷ்டை வேண்டியிருக்கிறது? குழந்தைகளைப் பெறமாத்திரம்

தெரிந்தது, காப்பாற்றத்தெரியவில்லை. ஏதோ கொண்டுவருகிறார். தாம் சாப்பிடுகிறார். நிஷ்டைக்குப் போய்விடுகிறார். குழந்தைகள் சாப்பிட்டனவா, பெண்சாதி ஏதாகிலும் பசிக்குச் சமனம் செய்து கொண்டாளா என்று கொஞ்சமாவது கவனிக்கிறாரா? வைராக்கியமுடையவருக்கு வீட்டிலென்னவேலை? நிஷ்டையிலிருப்பார்க்கு நாட்டிலென்னவேலை? இவரைநாதனென்றுகொண்டவர்க்குத்தாம் போம்வழியென்ன? சம்பாதிக்க வகையில்லாத சிலபேர், இப்படியும் வேஷம் போட்டுக்கொண்டுதான் இருக்கிறார்களம்மா! என்னவோ எனக்கு——.

கமலம்:—சிறுத்தடிசிறுத்து. இப்போதுதானே, வாய்மதங்கொண்டு பேசாதே என்று சொன்னேம். ஏனடி இப்படிப் பெரியவர்களைப் பேசிப் பெரும்பாவங் தேடிக்கொள்கிறாய்? அவரைச்சொல்லியரும்பழி கொள்ளாதே. மகா சீலர், உத்தமர்; அவரைச்சொன்னால் பகவானைச் சொன்னது போல. நல்லவரை நிந்தித்தால் நாக்கு அழுகி நறுக்கென்று விழுந்துவிடாதோ? நல்ல குணம் இருக்க இந்த நாய்க்குணம் எங்கிருந்துதான் வந்ததோ? தனக்காகிலும் தெரியவேண்டும். சொல்லியாகிலும் தெரியவேண்டும். நீ ஒன்றிலே

புஞ் சேர்த்தியில்லை. உனக்குத் தெய்வந்தான் புத்திசொல்லவேண்டும்.

கனகம்.—இல்லேடியம்மா! அவரை நான் என்ன சொன்னேனிப்போது? குழந்தைகளைப் பற்றிக் கவனிக்கிறதில்லையே என்றுதானே சொன்னேன். அதுவுங் குற்றமாய்ப் போயிற்று? என்னவோ அம்மா! என் வழக்கமே இதுவாகப் போயிற்று. மனத்திலொன்றும் வாக்கிலொன்றுமில்லை. கபடமில்லாமல் சொல்லிவிடுகிறேனம்மா! "யதார்த்த வாதி வெகுஜனவிரோதி".

தங்கம்.—என்னடி எதார்த்தம் சொல்லிவிட்டாய் நீ? பெரியவரைத் தூஷிக்காதேயென்று சொன்னால், கபடமில்லாமல் பேசுகிறேனென்கிறாய். கபடமென்பது விஷயத்தை மனத்திலேயே வைத்துக் கொண்டு ஒருவரைக் கெடுப்பதுதான் ஆகும். மற்றபடி எல்லாவிஷயங்களையும் சமயமில்லாமலும் தாரதம்மியமில்லாமலும் கொட்டிவிடக்கூடாது. எதனைச் சொல்லலாகுமோ அதனைத்தான் சொல்லலாம். இல்லாவிட்டால் தோஷம் வந்து சேராதா? எதுவும் பார்த்துத்தான் பேசவேண்டும். என்னவோ அம்மா உனக்குப் பேசவே தெரியவில்லை. வீணே தோஷத்துக்கு ஆளாகிறாய்.

கமலம்.—தன்னையே நம்பியிருக்கப்பட்டவர்க்குப் பக

வான் தானே யாவற்றையும் கொடுப்பர். "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" அல்லவா? வேறு கவலையில்லாமல் தன்னை யார் தியானித்துக்கொண்டிருக்கிறார்களோ, "அவர்களது யோக க்ஷேமத்தைத் நானே வகிக்கிறேன்" என்று கண்ணன் சொன்னதாக என் யஜமானர் பலதடவையினுஞ் சொல்லியிருக்கிறாரம்மா! அதற்கு உதாரணமாகக் குசேலரைத்தான் அடிக்கடிக் காண்பிப்பார். இப்படிப்பெரியவரெல்லாம் குசேலரைப்பற்றிப் புகழ்ந்து அவரைத் தெய்வமாக எண்ணும்போது நாம் அவரை நிந்திப்பது அழகில்லை. அபசாரமுமாகும்.

கனகம்.—ஆமாம். தெய்வம் தெய்வம் என்றுதான் நாம் ஏற்றிவைக்கிறது. அவர் ஒன்றுஞ் செய்வதில்லை. எல்லாம் வினையின்படி நடந்தேதான் முடிகிறது.

தங்கம்.—அது கடவுளை நம்பாத நமக்கல்லவா? அவரால் ஆகாததுண்டா? இன்னும் சிறிதுநாளில் சுசிலை யடையப்போகிற சுகத்தைப்பார். அப்போது நீயே சொல்வாய் அப்பெரியவரைப் பற்றிப் புகழ்ச்சியாக.

கமலம்.—இருக்கட்டும், அடி தங்கம்! நேற்றுச் சுசிலை உலக்கை வாங்கிக்கொண்டு போனாளே எதுக்கடி?

தங்கம்.—இங்கிருந்துதான் வாங்கிக்கொண்டுபோனுளா? ஐயோ பாவம்! எந்தவிதத்திலும் குழந்தைகள் பசியில்லாமல் இருக்கவேண்டுமென்பது அவள் நோக்கம். ஒரு வருத்தத்தையும் வெளியில் காண்பிக்காமலே அவள் தன்னுல் ஆகும் யத்தனங்களைச் செய்கிறுள். ஈசுவரன் கைகூட்டிவைக்க வேண்டும் வெகுசிக்கிரத்தில். அப்பொழுதுதான் என் மனம் திருப்தியடையும்.

கனகம்.—குழந்தைகள் பசியற்றிருக்க உலக்கை என்னத்திற்கு? அவல் இடிக்கப்போகிறுளா அவள்?

தங்கம்.—ஆமாம்! ஏதோ அரைப்படி நெல் ஊறப் போட்டிருக்கிறதாகச் சொன்னுள்; அதற்குமேல் நெல்லுக்கு எங்கேயடி போவள்? அந்தநெல்லும் தினம் சாப்பிடும் சாப்பாட்டில் மிச்சம் பிடித்து வைத்துக் கொண்டதாம்.

கமலம்.—ஐயோ பாவம்! அரைப்படி நெல் எந்த மூலைக்கு ஆகும்? என்னைக் கேட்டிருந்தாலும் ஒரு மரக்கால் நெல் கொடுத்திருப்பேனே?

தங்கம்.—அப்படிச் சில பிணங்கள் மாதிரியாக வீடு வீடாக நுழைகிற வழக்கம் அவள் வீட்டில் பறக்கும் காக்கைக் குஞ்சுக்கும் இல்லையே; அவளுக்கு எங்கிருந்து வரப்போகிறது? எவ்வளவு கஷ்டமி

ருந்தாலும் விட்டோடுமடிவதேயொழிய வெளியே யாவருக்கும் தெரிவிப்பதில்லை. அவளைப்போல யாருக்கடி பொறுமையுண்டாகும்?

கனகம்.—ஆமாமடி! பொறுமையாவது பொறுமை!! அவ்வளவு அசூயையும் அலட்சியமுமல்லவா அவளுக்கு? பாரேன்! அவள் யாரோடாவது ஒட்டியிருக்கிறுளா? இப்படிக் கூழுக்குத் தாளம் போடும்போதே இவ்வண்ணமாயிருக்கிறது. இன்னும் நன்ருய் வாழ்ந்திருந்தால் (வலதுகையைப் பெருவிரல் கீழ்நோக்கத் திருப்பி விரித்து) இப்படித்தான் நிற்பள். அவள் இருக்கும் அலட்சியத்துக்குத் தகுந்தாற்போலேதான் ஈசுவாறும் குழந்தைகளை யபரிமிதமாய்க் கொடுத்துத் தண்டித்திருக்கிறுர். அப்படியும் அடங்கினபாடில்லையே? இந்தத் தரித்திரத்திலேயும் இந்தக் கர்வமா? உற்ருரையும் ஊராரையும் நைச்சியம் சொல்லிப் பாராட்டினுல்தானே ஊனுக்கழாமல் உய்யலாம்.

தங்கம்.—அடி, கனகம்! உன் வாய்மதம் உன்னுடன் கூடப் பிறந்ததடி. இப்போதுதானே படித்துப் படித்துச் சொன்னேம்? படிமானம் கொஞ்சமாவது இல்லை. நீ உன் குலத்தோடு எரிந்துபோகத் தான் இப்படிச் சுசிலையை, பெண்தெய்வத்தை, லக்ஷ்மியை, வாயில் வந்தபடியெல்லாம் பேசுகி

றாய். அடங்கினுரைப் பேசினல் அக்கருணைக் கடல் அகத்தியம் தண்டிப்பார். அவளிடத்தில் என்ன அகுயைக் குணத்தைக் கண்டுவிட்டாய்? அவளைப் பார்த்தவர்க்கும் இருந்த அகுயைக்குண மும் போய்விடுமே? இப்படிப் படாப்பழியைச் சொல்லி வீணில் பாபத்தைத் தேடிக்கொள் ளாதே.

கமலம்.—கனகம்! இதேது இன்றைக்கு ஒவ்வொரு வராய்த் தூஷித்துக் கொண்டே வருகிறுய்? உனக்கு நல்லார் பொல்லார்என்னும் பகுத்தறிவே இன்னும் உதிக்கவில்லையே. உத்தமியவள்பேரைச் சொல்லிக் கொண்டிருந்தாலே தினம் செய்த பாவங்கள் ஒழியுமே? அதை விடுத்து அவளை நிந் திக்கிறுய். அதிருக்கட்டும், யாரையவள் அலட் சியஞ்செய்திருக்கிறுள்? அவள்வீட்டுவேலையே தான் அருணேதயம் முதல் அஸ்தமனம் வரையில் சரி யாயிருக்கிறதே? யாரோடாவதுபேசநேரமுண்டா? தன் வீட்டில் இப்படிக் கஷ்டமிருக்கும்போது இன்னொருவீட்டில் நுழைந்து ஏதாகிலும் ஒரு பண்டம் கேட்கிறுளா? உள்ளதைக்கொண்டு திருப்தியடைவதே யவள் வழக்கம். நீயும் உன் கணவனும், உங்களுக்குப் பிள்ளைகுட்டி யொன் றுமில்லாதிருக்கும்போதே, எங்கே பூரி, எங்கே சபிண்டி, எங்கே சமாராதனை யென்று காத்துக்

கொண்டிருக்கிறீர்களே; அதுமாதிரி யவர்கள் எங்கேயாவது போகிறுர்களா? யோசித்துப்பார், பெய்கிறமழையும் காய்கிற வெயிலும் அவளுக்காகத்தானே. அவள் பேசும் பெண்தெய்வமல்லவா? நன்ருய்ச் சொன்ருய் அலட்சியமுடையாளென்று. சொன்னவாயைச் சுத்தஜலம் விட்டுக்கழுவு.

கனகம்.—நாங்கள் நான்குபேரையும் நைச்சியம் சொல்லி நேசம்பாராட்டுகிறதினுல்தான் பசியாமல் சாப்பிடுகிறேம். நமக்காகப் பிதிரார்ஜிதம் ஒன்றுமில்லாமல் போனுல் அயலாரையண்டியும் நாலுபேரை நத்தியுந்தான் பிழைக்கவேண்டும். எங்களுக்கு ஈசுவரன் குழந்தைகளைக்கொடுக்கவில்லை. அப்படியிருந்தால் நன்ருய்த்தான் காப்பாற்றுவோம். உலகத்தில் மனிதருக்கு மனிதர்தாம் உபகாரம் செய்து தரல் வேண்டும்? தெய்வம் வந்து நேரே உதவிவிடுமோ? வாய்நலம் இருந்து நத்தியிராவிடில் யாவர் வந்து உதவிபுரிவார்? எங்கள்வீட்டில் வந்துபார். என்னபண்டம்குறைவாயிருக்கிறது? அவள்வீட்டில் போய்ப்பார்த்தால் அப்பொழுது நீ சொல்வாய். தரித்திரம் குடிகொண்டுவிளையாடுகிறது. அவள்குழைந்தகளுக்கு,

13. சிறியசித மணிப்பூணே யன்றிவே றெருபூணச்
சேய்கட் கில்லை

வறியமா ஈருரியே யுடையன்றி மற்றுடைகண்
மருவ லில்லை
வெறியபொழிற் றழைத்தவில்லை யுண்கலமல் லாதுகலம்
வேறொன் றில்லை
குறியமனை வயிற்புகுமோ ரெறும்பினுக்கு மாங்குணவு
கொடுத்தற் கில்லை.

14\. நண்புகூர் தருமன்னப் பால்சிறிதல் லாமன்மற்றோர்
நற்பா லில்லை
பண்புகூர் தருதனையர்க் கென்றான்றும் பசிதீர்ந்த
பாடு மில்லை
கண்புகா வில்வறுமை கண்டுமறை யவனுமனங்
கவற்சி யில்லை
யெண்காப் புகழவன்றன் செயல்கண்டு மனைவிவிருப்
பிகத்த லில்லை.

என்னடி புருஷன் வேண்டியிருக்கிறது? வீட்டு விஷயத்தையும், குழந்தைகள் வருத்தத்தையும், மனைவி படும் பாட்டையும் கவனியாத புருஷன் என்ன ஆண்பிள்ளை? இவரைப்போல் என்னகத்துக்காரர் இருந்தால், அவர் கண்ணில் துரும்பை விட்டு ஆட்டிவிடுவேன். அவள் பாவம், அப்பாவி, தெய்வமேயன்று இருக்கிறாள். சும்மா நாராயணா! கோவிந்தா! வாசுதேவ! என்று அண்ணாந்து இருந்தால் ஆகாரம் வாயில் வந்துவிழுமோ?

நாலுபேரையண்டினல்தால் நாராயணனுங்கொடுப்பன். குடித்தனக் காரரைக் கூடினல் தான் கோவிந்தனுங் கொடுப்பன். வள்ளல்களை நத்தினல்தான் வாசுதேவனுங்கொடுப்பன். அப்படியில்லாமல் முயற்சியற்று இருக்கமுட்டாளும் பிரியப்படான்.

தங்கம்.—இரடி. ஓடாதே; அதிலேயொரு விஷயம் நினைத்துக்கொள். அவர் பாரமார்த்தி. குடும்ப சம்ரக்ஷணம் என்பது காலையில் நெல்பொறுக்கிக் கொணர்ந்து கொடுப்பதுதான் என்று எண்ணியிருக்கிறர். ஏனெனில், அவருக்கோ வேறென்றிலும்விருப்பமில்லை. தனக்கு ஆசையுள்ள ஒருவன்தான் மற்றவர்களுக்குள்ள ஆசையையுங் கவனிப்பான். அவளோ கணவன் சொற்றிறம்பாமையும் தானக ஒரு காரியமும் செய்யாதிருத்தலுமாகிய கற்பு என்ற நல்ல விரதத்தை நன்கு அறிந்தவள். அவர் கொணர்ந்து கொடுத்ததைச் சமைத்துக் குழந்தைகளுக்கும் கணவற்கும் அளித்துவிட்டு மிகுந்திருந்தால் தான் உண்பதும் இல்லாவிடில் ஈரத்துணியை வயிற்றிற் சுற்றிக்கொள்வதுமாய் இருக்கிறள். சுவாமியோ இவர்கள் பக்திக்கும் குணத்துக்கும் வசப்பட்டு இவர்களைக்காக்க எண்ணமுடையவராயினும் இவர்களுடைய வேண்டு

கோவை எதிர்பார்த்திருக்கிறார். முன் செய்திருக்ருக்கும் வினையோ இந்த நல்லகுணமுடையவர்களையும் விடாது பற்றியிருந்து நற்காலம் வர வொட்டாமல் செய்கிறது. ஆனால் என்று கூடியும் இவர்கள் நல்ல சௌக்கியத்தை யடைபவர்கள்தாம். அதைக் கூடியவிரைவிலேயே நாம் பார்க்கப்போகிறோம். சுசீலையின் குணத்துக்குச் சுவாமி யிரங்காரென்று சொல்கிறாய்? அவள் பெருங் குணத்துக்குப் பேயுமிரங்குமே. அவள் பொறுமையை நம் வாய்கொண்டு சொல்லிமுடியுமா?

15\. வருவாய்மிக் குடையாரா யளவிறந்த செல்வத்தின் வளமுன் னார்க்கு
ஒருவாவன் பொருமதலை யெண்ணியவா றளித்தோ லொல்லா தாகும் [ம்ப
பொருவாவெங் கேக்கூற்றாய்க் கொடுவிடமாய் வடவை புகுந்து வாட்டத் [யாய்ப்
திருவாகின் றிடமிடியிற் பன்மகவுன் னான்செய்கை யெற்றே! யெற்றே!!

இப்படியிருந்துங் கணவனிடம் அன்புகுறையுமா?

16\. இவ்வாறு மிடியென்னும் பெருங்கடலு ளழுந்தியுந்தற் கினிமை சான்ற

செவ்வாய்மை யந்தணனை வெறுத்துரையா வலர்மொழி
 சிறிதுஞ் செப்பான் [கள்
நவ்வாமை மைந்தர்கள்பால் மறந்துமியற் றுளவுடன்
 சுகுண மென்னே
யெவ்வாறித் துயர்க்கடலீர் துவமெனுமோ ரெண்ணமுளத்
 தென்று மூண்டால்.

அதனால்தான் கூடிய விரைவில் அவன் மனத்தை எவ்வழியாலாவது சுவாமி திருப்திசெய்வார் என்று உறுதியாய்ச் சொன்னேன். அதற்கேற்ப, நான் முன்னம் சொன்னபடி, அந்த அரைப்படி நெல்லையிடித்து அவல் செய்து புருஷரிடம் தந்து துவாரகைக்கு அனுப்பியிருக்கிறாள். அந்தப்பிராமணரும் அதை வாங்கிக்கொண்டு இன்று அருணோதயத்துக்கே பயணமாய்விட்டார். இனி அவரிடம் தரித்திரமென்பது தரித்திராது. பெரியவர் முயன்றால் பெறுததும் உண்டோ? எம்பெருமான் கண்ணன் இவர் வரவையே நல்வரவாகக் கொண்டு உபசரிப்பர். கண்ணன் அருள் நோக்கமிருந்தால் எண்ணிலாச் செல்வத்துக்குடையவனுயிருந்து மண்ணவரும் விண்ணவரும் போற்ற வாழலாமே. அடி, என்னடி! யாவருக்கும் முன்வினைப்பயன்கள்தாம் இப்பிறப்பில் அனுபவிக்கப்படும். இவர்க்குத் தெய்வபலம் இருப்பதால் இப்போதைய நல்வினை யிப்பேரதே பலன் தரப்

போகிறது. அப்படிச் செல்வமும் இவர் கைகூடிவிட்டால் இவர்களுக்கு எந்தவிதமான குறையிருக்கப் போகிறது?

கமலம்.—ஐயோ போகட்டும்! விடிந்ததடியம்மா கசிலே கஷ்டம்! அவன் கஷ்டம் விடிந்தால் ஊர் ஒரு முழம் உயரும். நல்லவர் வாழ்ந்தால் யாருக்கும் சந்தோஷந்தானம்மா! அதிலும் இவர் விஷயத்தில் இரங்கி வருந்தாதவர் யாரிருக்கிறார்கள். கல்லுங்கரையும். கனகம் ஒருத்திதான் மனம் வெந்து மாழ்குவள். அதுவுஞ் சிறிதுநாட்களில் தெரியவரும்.

கனகம்.—என்னவோ அம்மா! எனக்கு அசூயைதான் தலைக்கொண்டிருக்கிறது. எனக்கு இது இயற்கையான குணந்தான். "ஜன்மத்தோடு பிறந்ததைச் செருப்பால் அடித்தாலும் போகுமா என்ன" அவள்தான் நன்றாய்வாழட்டுமே? எனக்கு அவள் என்ன தாயாதியா, அவள் வாழ நான் பொறுதிருக்கிறதற்கு? என்னவோ சொல்லுகிறீரே? நான் என்னசொன்னேன்? அந்தப்பிராமணன் ஊராரோடு ஒட்டியில்லையே; அவர்தாம் அப்படியிருந்தாலும் அவளாவது நாலு பெண்களை நத்திவாழலாமே என்றுதானே சொன்னேன் நீங்கள் என்னென்னவோ சமாதானம் சொல்லிக்

கொண்டுவருகிறீர்கள். அவையொன்றும் எனக்குப் பிடிக்கவேயில்லை. நீங்கள் சொன்னபடி அவன் செல்வம் பெற்று வாழ்ந்திருந்தால்தான் உங்கள் வார்த்தைகளை நான் நிச்சயம் என்று நம்புவேன்; அதுவரையில் என்மனம் உங்கள் சொல்லில் நம்பிக்கை கொள்ளாது.

தங்கம்.—அடி, பைத்தியமே! தெய்வபலத்துக்கு முன்னால் வேறு பலம் நிலை நிற்குமா? பகவான் கிருபை வைத்துவிட்டால் ஊரார் என்ன செய்யமுடியுமென்றிருக்கிறாய்? தெய்வபல மில்லாவிட்டால் ஊரார் ஒப்படைத்தாலும் முடியுமா? ஐயன் வெறுக்க ஆரும் வெறுப்பரல்லவா?

கமலம்.—அடி, கனகம்! இராவணன் கதை கேட்டிருக்கிறாயா? அவனுக்கு என்னபலம் குறைவாயிருந்தது? அவன் நல்ல வேதவித்து. அவனுக்குத் தமயன் குபேரன். தம்பியோ உலகத்துக்கொரு வலியாளனான உயர் கும்பகர்ணன். புத்திரனோ எத்திசையும் இசைகொண்ட இந்திரனைத் தந்திரமாய் வென்றவன். தானோ பத்துத்தலைகளும் இருபது கைகளும் அழியாச் செல்வமும் அளவிலா வரங்களுங் கொண்டவன். இருப்பிடமோ நல்ல அரணுள்ளதாகி மண்ணவரால் கடக்கமுடியாத மாபெருங்கடலின் மத்தியிலுள்ளது. இன்

னும் எவ்வளவோ பலங்கள் இருந்தன. தெய்வங்களின் விரோதத்தாலும் பெரியவர் சாபங்களாலும் பதிவிரதைகளின் கண்ணீராலும் வெந்துசாம்பராய்ப்போனான். பஞ்சபாண்டவர் இத்துணையொன்றுமில்லாமல் கண்ணனொருவனையேதுணைக்கொண்டிருந்ததால் பெருவலிகொண்டு எதிர்த்த துரியோதனனைக் குலத்தோடு ஒழித்துச் சுகமே வாழ்ந்தனர். ஆதலால் கண்ணனை நம்பினோர் எண்ணியபெறுவர்.

கனகம்.—சரி, பார்ப்போமே. ஆனால் கண்ணன் கருணைவைத்தால் ஆகும்-தா-ன். அவர் வைக்க வேணுமே.———

தங்கம்.—கருணைக்கடலான மாதவன் தன்னுடன் படித்த சாதுக்களில் உயர்ந்தவராகிய இவருக்கு அருள் புரியாமல் மற்று யாருக்குத்தான் செய்வர். இவர் வரவைத்தான் எதிர்பார்த்திருக்கிறார். அதுவும் நிகழ்ந்துவிட்டது. இனிக் கண்ணனையும் நல்லவர் வாழ்த்தும் காலம் வந்துவிட்டது.

கமலம்.—நாழிகையாகிவிட்டதடியம்மா. வீட்டுக்காரியம் தலைக்குமேல் கிடக்கிறது. ஆனாலும், இன்றைக்கு முதலில் என்னவோவிஷயம் ஆரம்பிக்கப்பட்டாலும் கடைசியில் நல்லவர்கள் கதையில் வந்துமுடிந்தது. இந்தக்காலம் வீண்காலமன்று.

தங்கம்.—ஆமாமடியம்மா. எனக்கும் போகவேண்டும். சுசீலைக்கென்ன! அவள் குணவதி. தெய்வம் துணையிருக்கும். நாமெல்லாம் பார்க்க நாளைக்கே நன்றாய் வாழப்போகிறாள்.

கனகம்.—வாழ்ந்தால் யாருக்கும் சந்தோஷம்தான். என்னமோ, என் அபிப்பிராயத்தைச் சொன்னேன். நான் போய்வரட்டுமா கமலம்! குற்றமிருந்தாலும் மன்னித்துக் கொள்ளம்மா. வருகிறேன்.

(செல்கிறார்கள்)



## மூன்றுமங்கம்—முதற்காட்சி.

——:o)(ஂ)(o:——

காலம்—நண்பகல்; இடம்—அவந்திக்கானகம்.

(குசேலரும், வாமனனும்.)

குசேலர்.—(தனக்குள்) இத்துணைத்துயரம் உடைமையினன்றோ விழுமியோர், காமத்தை மேன்மேலும் பயப்பதாகிய இவ்வறத்தினை யறவிடுத்துத் துறவறமேற்கொண்டு காடுறைகின்றனர். தினையும் பற்றிலானெனினும் வீட்டிலுறைவானுக்குக் காமம் பனையிற் பெரிதாகின்றது. அவன், கூட்டினுட் பறவைபோன்று கொண்டார் கொள்கைக் கொப்பக் கூவிக்குலைந்து தாவித்தயங்கிச் செய்திவினைகளான் ஆவி பிரியினும் பாவியாய் எண்பத்துநான்கு உயிர்வகையினும் பல்காற் பிறந்துழன்று அலையிற்றுரும்பாகின்றான். நான் மனோபலத்தால் ஒழித்திருந்தும், புறத்திடியால் உள்கலங்கும் தெங்கங்காயினது தெண்ணீர்போல, முன்வினைத் தொடர்பாற் கலங்கியிச் செயலுக்கு ஆளானேன்.

I7, செறிதருதன் மனப்படியே செய்தலொரு வருக்கினிதா
மறிவுறக்கும் இருமொழிகேட் டாக்கலஃ திறுஞ்சிறப்பா
முறிதருமே இவர்சொற்கேட் டுற்றன்முனி துயர்மனையாள்
வறியவுறை கேட்டுற்றல் மண்ணிறனோர் கெடுதியுறும்,

இதனை நான் அறிந்துள்ளவனாயினும் மனைவியின் சொல்லைக்கேட்டு இவ்வளவு துன்பத்தைத் தரக்கூடிய இந்தச் செயலிலிறங்கினேன். அவள் என்பால் காட்டிவரும் அன்பால் நான் இது செய்யத் துணிந்தேன். ஆரம்பித்த காரியத்தை முடிக்கமுயல்வதே ஆண்தன்மைக்கு அழகாகும். அதனால் அதைரியப்படாமல் மனத்தை மேலே செலுத்தவேண்டும். என்னவிது! இவ்வளவு தூரம் நடந்து வந்திருக்கிறேன். துவாரகை சமீபத்தபாடில்லை. வழிப்போவாரைக் கேட்டாலோ வெகுதூரத்தில் இருக்கிறது என்கிறார்கள். நானோ பலகாடுகளையும் மலைகளையும் கடந்து வந்திருக்கிறேன். இதுவரையிலும் வழி நடந்தறியாதவனாதலால் கால்தளர்ந்துநாவுலர்ந்து தாகம் மிகுதியாயிருக்கிறது. இங்கோர் கிளைவழி தென்படுகிறதே. தெய்வமே! கண்ணா!! இனி என்னசெய்வேன்? இந்த இரண்டுவழிகளில் எது துவாரகைக்குச் செல்லும் வழியோ தெரிகிலேன். யாரையாவது கேட்போமென்றாலோ ஒருவரையும் காணோம்; நாழிகையோ பதினைந்தாயிற்று. இந்த இரண்டு வழிகளில் எது நான் போகத்தகுந்தது? தெரிந்து கொள்ளாமல் போகுதல் நல்லதன்று. என்னசெய்வேன்? (நாற்புறமுஞ் சுற்றிப்பார்த்து

ஒருவரையுங் காணுமல், தனக்கு வலது பக்கத்தில் பாதைக்குச் சற்று விலகியிருக்கும் ஒருதென்னஞ்சோலையைக் கண்ணுற்று மனோதிடங்கொள்கிறார்.) என்னவந்தாலும் கண்ணபிரான் கைவிடமாட்டார். இந்தச் சோலையைப் பார்த்தால், இவ்விடத்தில் ஒரு குளமிருக்கிறது என்று தெரியவருகிறது. அங்கே போய் அதிலிறங்கி அநுஷ்டானத்தை முடித்துக்கொண்டு கொஞ்சம் நீர்த்தமுஞ் சாப்பிடுவேன். அதற்குள் யாராகிலும் வரமாட்டார்களா? அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். (குளத்திலிறங்கி, அநுஷ்டானத்தை முடித்துக்கொண்டு, மேலே ஏறி, அங்கு ஒருவரைக் காண்கிறார்.)

வாமனன்.—(எழுந்து வணங்குகிறார்.) வரவேண்டும். குசேலரே! எது இப்படிவழி நடந்து வந்தீர்கள்?

குசேலர்.—(உட்கார்ந்துகொண்டு) தங்களை இன்னாரென்று அறியாத பாவியாயிருக்கிறேன். தெரியச் சொல்லவேண்டும். நான் துவாரகைப் பயணமாக வந்திருக்கிறேன். தங்களது தேசமுதலிய விவரங்களை நான் அறியலாகுமோ?

வாமனன்.—நானும் அவந்தி நகரைச்சேர்ந்தவன்தான். தங்களையறியாதவர் உலகத்திலேயே இல்லை. அப்

படியிருக்க, தம்மூருக்கு வெகு சமீபத்திலிருக்கும் நான் அறிந்திருப்பது ஒரு ஆச்சரியமன்று. தாங்கள் எப்போதும் நிஷ்டையிலேயே காலங் கழிப்பவர்களாதலால் மற்றவர்களைப்பற்றி வெகுவாக அறிந்திருக்கமாட்டீர்கள், இது இருக்கட்டும். தாமாவது துவாரகைக்குச் செல்வதாவது! ஆச்சரியமாயிருக்கிறதே. இந்தக்காரியம் தங்களால் சாதிக்க முடியாததாயிற்றே! என்னைப் போன்றவர்க்கு இது ஸகஜம். தாங்களோ இது வரையில் ஒருநாழிகை வழிகூட நடந்தறியீர்கள். இவ்வளவு தூரம் எப்படி நடந்துவந்தீர்கள்? ஐயோ பாவம்! மிகவும் களைத்துப் போயிருக்கிறீர்களே. காலைமுதல் ஆகாரமே எடுத்துக் கொள்ளவில்லை போலிருக்கிறது. (பாழுந் தெய்வமே! ஏனிப்படி பக்தரையும் படுத்துகிறாய்? என்று எண்ணிக்கொண்டே, சில பழங்களை எடுத்து முன்னே வைக்கிறார்.) ஸ்வாமி! இந்தப் பழங்களைச் சாப்பிட்டால், பசி சிறிது அடங்கும். பிறகு வழி நடக்கலாகும். எடுத்துக் கொள்ள வேண்டும்.

குசேலர்.—ஐயா! வேண்டாமே. வழியிலே போவாருக்கெல்லாம் இப்படி நீங்கள் உபசாரம் செய்து வந்தீர்களானால், உங்கள் பசி தணிவதெப்படி?

வாமனன்.—கருணைக்கடலே! பிறருக்கு உதவுதல் என்னும் இந்தச்செயலைத் தாங்கள் ஒரு விரதமாக வன்றோ கொண்டிருக்கிறீர்கள்! வயல்களில் உதிர்ந்து கிடந்தவற்றைப் பொறுக்கிக் கொண்டு வந்து குற்றிச் சமைத்து, அது தம் குடும்பத்துக்கே போதாததாக விருந்தபோதும், ஒரு அதிதிக்காயினும் அளித்தபிறகே சாப்பிடுவது என்னும் அழியாவிரதம் பூண்டிருக்கிறவர்கள் தாங்களன்றி யாரிருக்கிறார்கள்? வளரரை வளர்த்தால் தன்னைப் பகவான் காப்பான் என்பது உங்கள் கொள்கையன்றோ? இந்தப்பெருமையான தருமத்தை உலகத்தாருக்கு நடத்திக் காண்பிப்பதற்காகவே தாங்கள் அவதரித்திருக்கிறீர்கள் என்பது பெரியவர் அபிப்பிராயம். தங்கள் பெயரைக் கேட்டவனும் பிறருக்கு உதவியைச் செய்வானென்றால், தங்களோடு வசித்துத் தங்களை எப்போதுந் தரிசிக்கின்ற எனக்கு இந்தச் செயல் செய்யத் தோன்றுவது ஆச்சரியமாகாது. உலகத்தில் தங்களுக்கு உபசாரம் செய்யாதவன் பாவியென்று அழைக்கப் படுவான் என்பதில் தடையில்லை. மிருகங்களும் பறவைகளும் மரங்களுங்கூடத் தங்களை அன்போடு உபசரிக்கும். தங்களுக்குப் பசியே இல்லாதிருந்தா

னும்; ஏழையாகிய நான் கிருதார்த்தனாகும் பொருட்டு இந்தப் பழங்களை அங்கிகரிக்கவேண் டும். (பழங்களைக் குசேலரது மடியில் வைக்கிறார்.)

குசேலர்.—(புன்னகை செய்து) அன்புள்ளவரே! அப் படியே எடுத்துக் கொள்ளுகிறேன். (பழங்களை எடுத்துக் தமது ஹ்ருதயத்தில் குடிகொண்டி ருக்கும் அந்தர்யாமிக்கு நிவேதனம் செய்து, நண்பர் வாமனருக்கும் கொடுத்துத் தாமும் சாப் பிடுகிறார்.)

வாமனன்.—(எழுந்து) ஸ்வாமி! சற்றுப் பொறுங்கள். தாகத்துக்கு நீர் கொண்டுவருகிறேன்.

(குளத்தில் இறங்குகிறார்.)

குசேலர்.—(எழுந்திருந்து) ஸ்வாமி! வேண்டாம். நானே போய்க் கொண்டுவருகிறேனே. தாங்கள் செய்யும் இவைகளெல்லாம் எனக்கு மனவருத்தத்தை யுண் டுபண்ணுகின்றன. (கையமர்த்துகிறார்.)

வாமனன்.—(இன்னும் வேகமாக நடந்துகொண்டு) பெரியவருக்கு உபசாரம் செய்வதைக் காட்டி லும் பாக்கியம் வேறேயுண்டோ? பிராமணரு டைய முக்கிய கொள்கை இதுதான் என்பது தாங்கள் அறியாததன்றே! தாங்கள் தயவு செய்யு

வேண்டும். நான் செய்திருக்கும் பெரும் பாவங்கள் நீங்குவதற்கு இந்தச் செயலல்லாமல் வேறொரு பிராயச்சித்தமுமில்லை.

(நீர் கொணர்ந்து கொடுக்கிறார்.)

குசேலர்.—ஸ்வாமி! தங்களுக்குப் பிறவுயிர்களிடத்தில் என்ன அன்பு! இதுவன்றோ அருளென்பது.

(தாகசாந்தி பண்ணிக்கொள்கிறார்.)

வாமனன்.—பெருந்தவரே! கொஞ்ச நாழிகை நித்திரைசெய்து இளைப்பாறலாமே. சற்றுப் பொறுத்துப் பயணப்பட்டால், ஒன்றரைக் காதத்துக்கு அப்பாலிருக்கும் கிராமத்தை அடையலாம். அங்கே இராத்திரியைக் கழித்துவிட்டு, விடியற் காலை எழுந்திருந்து உங்களது பயணத்தைத் தொடரலாம்.

குசேலர்:—நண்பரே! அப்படித்தான் செய்யவேண்டும். வெயில் அதிக உக்கிரகமாகத்தான் இருக்கிறது. சிறிது நாழிகை பொறுத்துப் புறப்படுவோம். தாங்கள் அந்தக்கிராமம் வரையிலும் போகிறீர்களோ?

வாமனன்:—ஆமாம். அங்கே ஒரு பிரபுவின் கிருஹத்தில் நாளைக்கு விவாஹ மஹோத்ஸவம் நடக்கப்போகிறது. அவர் எனக்கு நன்கு பரிசயம்

உள்ளவர். பிராமணர்களை நன்ருய் உபசரிப்பவர். தத்தம் குடும்பசம்ரக்ஷணத்தின் நிமித்தம் செல்வரைத் தேடிப்போவது ஏழைகளுக்கு இயற்கைக் குணந்தானே? அதனுல் நான் அதுவரையில் போகப்பட்டவன்தான்.

(இருவரும் படுத்துக் கொள்கிருர்கள்.)

குசேலர்.—ஸ்வாமி! தாங்கள் சொன்னபடியே ஏழைகளுக்கு உதவுவது என்பது பணக்காரரில் சிலரிடத்தில்தான் உண்டு. பலர், தமக்குச் செல்வம் வந்தவுடனே தெய்வத்தை நிந்திப்பவராயும், பெரியவரை அவமதிப்பவராயும், வம்புக்கும் கோளுக்கும் தாஸிக்கும் செலவு செய்பவராயும் இருக்கின்ருர்கள்.

வாமனன்.—ஆமாம். இஃது உலகவியற்கை தானே. ஆனுல், என்னுல் சொல்லப்பட்டவர் அப்படிப்பட்டவரல்லர். பரம்பரையாய்த் தரும சிந்தையுடைய குலத்தில் பிறந்தவர். துறந்தார் முதலிய மூவருக்கும் துணைவர். சிறந்த ஆஸ்திகர். தரித்திரமென்னும் வியாதியைப்போக்கும் வயித்தியர். மெய்யே உருவாகக் கொண்டவர். எல்லாச் சம்பத்தும் நிறைந்துள்ளவர். பெரியவரது அநுக்கிரகம் பெற்றவர். தாங்கள் நாளை அங்கே தங்கியிருக்க நேருமாயின், தங்களை நன்ருய் உபசரிப்பார். தங்களது குணதிசயங்களை விஸ்தாரமாகக்

கேட்டிருக்கிருர். தங்களைப் பார்ப்பதற்கு மிகவும் ஆசை கொண்டுள்ளவராதலால், தம்மைக் கண்டவுடன் பிருஹஸ்பதியைக் கண்ட இந்திரன் போல மகிழ்வார். எனக்கும் அதனுல் பெருமையுண்டாகும். கிருபை செய்யவேண்டும்.

குசேலர்.—பெரியவரே! தாம் சொன்னவெல்லாம் எனக்கு இஷ்டமானவையாகவும், எனக்கு உள்ளக்களிப்பை மிகுதியாகக் கொடுக்கக் கூடியவையாகவுமிருந்தாலும், நான் உத்தேசித்துப் புறப்பட்ட காரியத்தில் ஒரே உறுதியான கருத்துக்கொண்டிருக்கிறேனுதலால், என் பயணத்தை இடையில் நிறுத்திவிட்டுச் செல்வதில் நான் இஷ்டப்படவில்லை. கண்ணபிரானது செந்தாமரைக் கண்ணிணைகட்குப் பாத்திரமாவதை விடுத்து, வேருெருவர் கண்ணேக்கை எதிர் பார்த்திருக்க நான் பிரியப்படேன். அல்லாமலும் மனிதரது உதவியையே ஒருவன் நாடியிருந்தானுனல், அவன் தெய்வவுதவிக்குப் பின்னுவான். ஆதலால், எனக்கு அதில் நோக்கமில்லை.

வாமனன்.—உண்மைதான், தாங்கள் சுத்தமன்றும் உறுதியான எண்ணமும் உடையவர்களாதலால், உத்தேசித்துப் பயணப்பட்ட காரியம் கேடில்லாமல் முடியும் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை. மற்றவர்கள் அப்படியல்லர். காமத்தினுல் கட்டுண்டு கழிகிருர்கள்.

குசேலர்.—இது மனப்பரிபாகத்தின்செயல், ஆனாலும், பகவான், அவரவர் உள்ளக்கருத்தினுக்குத் தக்க படி செய்வினைகளை யநுசரித்து உதவுகிறார். எல்லாவுருவங்களும் ஆதியஞ்சோதியின் பேருரு வங்களாகவே இருந்தாலும், தம்மைத் துதித்த வர்கள் தங்கள் தங்கள் மனத்தில் குறித்துக் கொண்ட உருவத்தின் அளவேதான் பதங் கொடுக்கிறார்.

18. தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவந் தானே
தமருகந்த தெப்பேர்மற் றப்பேர்—தமருகந்த
தெவ்வண்ணஞ் சிந்தித் திமையா திருப்பரே
யவ்வண்ண மாழியானும்.

இது பெரியவர்களுடைய பொய்யாத மொழி யன்றோ? ஏன்? இப்படிப் பேசிக்கொண்டே வழி நடப்போமே. பொழுதாயிற்றன்று? தூரவழிநடக் கவேண்டுமாதலின், மெல்ல எழுந்துபோவோம்.

வாமனன்.—இஷ்டப்படியே செய்வோம். ஆனால், உஷ் ணம் மிகுதியாயிருக்கிறதே. நாம் நடக்கவேண் டிய வழி கொஞ்சம் மணலும் கலந்துள்ளதாத லால், இப்படிக் கொதிக்கும் வெயிலில் நடந்து போவது அசாத்தியமாகுமே.

குசேலர்.—ஆமாம். ஆனால், நமது வழி தொலைய வேண்டாமா? நாம் போகும்போது அப்படி மிக வும் பொறுக்க முடியாதிருந்தால், நிழல் கண்ட

விடத்தில் சற்று இளைப்பாறுவோமே. பொழுது சாய்ந்து விட்டதாதலால், நாம் போகவேண்டிய பதினைந்துநாழிகைவழிக்கு இப்போதே புறப்பட்டால்தானே சூர்யாஸ்தமனத்துக்காவது அந்தக் கிராமம் போய்ச்சேரலாம். இருட்டிப் போனால் காட்டில் வழி நடக்கமுடியாமல் போய்விடுமே.

வாமனன்.—ஆனால், மெல்ல மெல்லப் போவோம். மூத்தோர்சொல் வார்த்தையமிர்தம்.

(எழுந்து செல்லுதல்.)

குசேலர்.—வாமனரே! என்ன உஷ்ணம் பார்த்தீர்களா? மிருகங்களும் பறவைகளும் இந்தக் கொதிப்புக்கு ஆற்றுமல் என்ன பாடு படுகின்றன!

வாமனன்.—அருந்தவத்தீர்! இவ்வளவு உக்ரம் சூரியனுக்கு மற்றைப் பருவங்களைக் காட்டிலும் இந்தப்பருவத்தில் உண்டாயிருக்கக் காரணமென்ன? இஃதென்ன பருவம்?

குசேலர்.—உலகத்தில் சீதோஷ்ணங்கள் பருவங்களுக்குத் தக்கபடி மாறிவருகின்றன. இது முதுவேனிற்பருவம்.

19. மண்கொதிப்ப வறல்கொதிப்ப வளிகொதிப்ப வெண்ணுவா
ரெண்கொதிப்ப நறுநீழ லியைமனைவிட் டகலார்க்கும்
கண்கொதிப்பக் காங்கொதிப்பக் கால்கொதிப்பக் கற்பகஞ்
விண்கொதிப்ப விவ்வேனில் வெம்பருவ மேவியதால். [சார்

இந்தக் காலத்தில் வழிநடப்பவர் மிக்க அருமையே. நம்மை இந்தக்காலத்தில் வழிநடத்துவதும் மிக்க வறுமையே.

வாமனன்.—ஸ்வாமி! பாருங்கள். இந்த வெப்பத்தினுல் குளங்களும் நதிகளும் வற்றிப்போய் இருக்கின்றன. இதனைப் பார்த்தால், பிராமணர்கள் நீரைக்கொண்டே மூன்று காலங்களிலும் தனது பகைவரை யழிக்கிருர்கள் என்றதைத் தெரிந்த சூரியன், அந்த நீரையெல்லாம் தன்னிடத்தே இழுத்துக்கொண்டால் எப்பகைவரும் தன்பால் அணுகமாட்டார்கள் என்று எண்ணித்தான் கவர்ந்து கொண்டானே என்று சொல்லவும் இடமுண்டாகிறது.

குசேலர்—ஆமாம். அப்படி எண்ணவும் இடமுண்டு தான். அதோ பாருங்கள்! ஒரு மான் வெப்பத்துக்கு ஆற்றுமல் தாகமிகுதியினுலே அங்கே தோன்றுகின்ற கானல் நீரை நல்ல நீரென்று எண்ணிக்கொண்டு ஓடிப்போய், ஜலம் அங்கே காணுமல் போகவே, திரும்பிக் கலக்கத்துடன் ஓடிவருகிறது. இதனை யூகித்தோமானுல், உலோபிகளிடத்தில் ஆசையோடு சென்ற தரித்திரர், அவர்களைப் பலதட்வைகளில் தொடர்ந்தும் ஒன்றும் பெருமல் இளைத்து மனம் வருந்தி வரும் தன்மை நினைவுக்கு வருகிறது. ஐயோ பாவம்! என்ன தாபம்!! என்ன பரிதாபம்!!!

வாமனன்,—ஆமாம். ஸ்வாமி! அந்தக் கானலாறு நம்மையே மயக்குகின்றதே. பகுத்தறிவில்லாத அவைகள் என்ன செய்யும்? இதோ! இந்தப் பறவைகளைப் பாருங்கள். தண்ணீர் இருக்கும் வரையிலும் இந்தக் குளங்களில் தங்கியிருந்து, நீர் வற்றிப்போகவே, தாங்களும் வேறு குளங்களை நாடிச் செல்கின்றன.

குசேலர்.—ஆமாம். இதுதான் இழிந்தவர்கள்செய்கை. ஒருவன் செல்வவானாயிருக்கும் வரையிலும் அவனுடன் கூடியிருந்து சுகித்து, அவன் இளைத்துப் போனவுடன் தாமும் அவனது சினேகத்தை மறந்து அவனிடம்போவதையே நிறுத்திவிடுவது அவர்கள் தொழிலன்றோ?

வாமனன்.—இஃது உலகவியற்கைதானே. சமுத்திரத்தில் வடவாமுகாக்கினி தங்கியிருக்கிறது என்கிறார்களே. அதன் கொதிப்பு இந்தக்கொதிப்பை விடக் கொடியதாயிருக்குமோ?

குசேலர்:—இல்லை. இல்லை. அந்த வடவாமுகாக்கினி சூரிய வெப்பத்துக்கு ஆற்றுமல்தான், குளிர்ந்த இடம் தேடிப் போய்ச் சமுத்திரத்தில் ஒளித்துக் கொண்டிருக்கிறதோ என்று சொல்லலாம்படியிருக்கிறது.

வாமனன்.—ஆமாம். இருக்கும். அதனால்தான் மற்றப் பருவங்களிலும் இந்த வேனிற் பருவத்தில் சமுத்

திராஜலம் மிகுதியாகக் குறைந்து போகின்றதோ?

( செல்லுகிறார்கள். )

குசேலர்.—இல்லை. அது காரணமன்று. இந்தக் கோடைகாலத்தில் கடலில் விழும் நதிகள் நீரற்று இருப்பதாலும், மழை இல்லாமல் இருப்பதாலுந்தான் கடலின்வரவு குறைந்து சூரியவெப்பத்தால் உள்ளதும் வற்றிப் போகிறது.

( இருவரும் சிறுமணல் வெளியைக் கடக்கிறார்கள். )

ஐயா! இங்கே பார்த்தீர்களோ இந்த நிலம் பசையே யற்றிருக்கிறதை.

20. தாவரு மிருவினை செற்றுத் தன்னரு
மூவகைப் பகையரண் கடந்துமுத்தியிற்
போவது புரிபவர் மனமும் பொன்விலைப்
பாவையர் மனமும்போற் பசையு மற்றதே.

வாமனன்.—ஆமாமையா! பார்த்தால் எங்கும் எரிகின்றதே. பசையெங்கிருந்து வரும்? இந்த நிலத்தில் இந்தவேளையில் நம்மிரண்டு பேரையுந் தவிர வழி நடப்பார் ஒருவரையுங் காணோம். இந்த மணல் கொதித்து வெந்து உருகியிருப்பதைப் பாருங்கள். இதனால் இந்த நிலத்தில்,

21. பாருமோ டாதுநீ டாதெனும் பாலதே
சூருமோ டாதகூ டாதரோ சூரியன்
தேருமோ டாதுமா மாகமீ தேரினேர்
காருமோ டாதுகீள் காலுமோ டாதரோ.

குசேலர்.—ஆனால், நாம் போகவேண்டிய வழியெல்லாம் இப்படித் தானிருக்குமோ?

வாமனன்.—இல்லை. இந்தச்சிறுதூரங் கடந்துபோனால் நல்ல நிழலுள்ள சாலையாகத் தானிருக்கும். அதனை வெகு ஸுலபத்தில் கடக்கலாகும்.

குசேலர்.—இந்தச் சிறுவழி கடந்தோமானால், அந்தப் பெரியவழி ஸுலமாகத் தானிருக்கும். இந்த வெயிலில் இதனைக் கடந்து போகவேண்டுமே!

வாமனன்.—அதனால்தான் புறப்படும்போதே சற்று வெயில் தணியட்டுமே யென்று சொன்னேன். பிறகு தங்களது கட்டுரைக்குத் தட்டுரை சொல்லாமல் பயணப்பட்டு விட்டேன்.

குசேலர்.—நான் இதுவரையில் வழி நடந்திராததால், நடக்கவேண்டிய வெகு தூரவழியை நினைத்து மெல்ல நடப்போமென்று துரிதப் படுத்தினேன். அதனால் உண்டான குற்றமிது. மன்னிக்கவேண்டும்.

(இப்படிப் பேசிக்கொண்டே இருவருஞ் சென்று அஸ்தமனத்துக்கெல்லாம் அந்தக்கிராமத்தை அடைந்தனர்.)



## மூன்ருமங்கம்—இரண்டாங்காட்சி.

காலம்—மாலை; இடம்—கானகம்.

(குசேலர் பிரவேசிக்கிருர்.)

குசேலர்.—(தனக்குள்) நான் எனது நகரத்தை விட்டு நான்கு இராத்திரி கழித்தேன். ஆசைமிகுதியால் பயணப்பட்டேனுஞலும், இந்தக் காட்டு வழிகளில் படும்வருத்தங்கள், துணிந்த நெஞ்சுடைய என்னையும் சிறிது பின்னடையச் செய்கின்றன. 'துன்பம் அடையாதவர் இன்பம் பெருதவரே' என்பதைப் பலதாமும் எண்ணியே மறுபடியும என் முயற்சியைக் கைக்கொண்டேன். கண்ணபிரான் இருக்குமிடம் மோக்ஷ வீடாகும்போது, அதனை நாடிப் போகுமவர் துன்பக்கடலுள் மூழ்கிக் கரையேறுவது இயற்கைதானே. இந்தக்காட்டுமார்க்கமே அந்தக்கடலாகும். இதனைக் கடந்து செல்வதற்கு அவரது ஆயிரநாமங்களே பெருந் துணையாகும். அந்தவேழு பவவாழிகளையும் அவன் பேரால் கடப்பார்கள். அது செய்யும் அவனது அரிய நாமங்களுக்கு இந்தப் பெரிய வழிகளைக் கடத்தல் அருமையாகுமோ? போகிறேன். என்ன! இன்றைக்கு வெயில் மிகுதியாயிருக்கின்றதே? சகிக்கக் கூடவில்லையே.

நானும் வாமனரும் நடந்துவந்த நாளைக் காட்டிலும் வெப்பமாயிருக்கிறதே! அன்று இத்தனை வருத்தம் உண்டாகவில்லை. மார்க்கமோ கல்லும் முள்ளும் கலந்ததாயிருக்கிறது. இன்று சூரிய உதயத்துக்கெல்லாம் அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு புறப்பட்டுஇந்தப் பதினைந்து நாழிகையும் நடந்திருக்கிறேன். வெயில் மிகுதியாலும் வேகமான நடையாலும் தேகம் சோர்வடைகின்றதாதலால், கொஞ்சநேரம் இங்கே எங்கேயாவது தங்கித்தான் போகவேண்டும். சிறிது வெப்பங் குறைந்தபிறகு பயணப்படலாம். படுத்துக்கொள்ளலாமென்று எண்ணினாலும் இங்கே சோலையொன்றும் காணப்படவில்லை. ஆமாமாம். பெரிய கானகங்களில் சோலை காணக் கிடைப்பது அருமைதானே. கொடிய மிருகங்களும், கடுவிடப் பிராணிகளும், வழி பறிக்கும் வேடருமல்லாமல் இங்கு வாழ்வார் யாவர்? ஆதலால், எனது களைப்புத் தீரும் வண்ணம் இந்த அடர்ந்த மரங்களின் நிழலிலேயாவது சிறிதுநேரம் படுத்துக்கொள்ளுகிறேன். (அங்கே போய் ஒரு இடத்தைக் கல்லும் முள்ளுமில்லாமல் சுத்தப் படுத்திப் படுத்துக் கொள்ளுகிறார்.) இந்தக் காட்டில் மரவகைகள் யாவுமே வளர்ந்திருக்கும் போலிருக்கிறதே. குரங்குகளும் எறியறியாதனவாய் மரங்கள் உயர்ந்து வளர்ந்திருக்கின்றன. இந்த வனத்தில்

மரங்கள் அடர்ந்தும் உயர்ந்தும் செழித்தும் இருக்கும் மாதிரியைப் பார்க்கவே, நான்முகன் அழியும் காலத்தும் இந்தக் கானகம் அழியாது என்று எண்ணுவதற்கும் இடமுண்டாகிறது.

22. சந்தநறு மலர்ச்சேக்கைச் சதுமுகனே ருகூழு
மிந்தவனக் கழிவின்றென் றியாவருநன் கெடுத்துரைப்பக்
கந்தமலர் தவிர்துறுமிக் காய்கனியின் சுகடேங்க
மந்திகளு மறியாத மரங்கள்பல வோங்கியதால்.

ஆதலால், இந்த வனமானது நாளடைவில் ஓங்கி வளரும் என்பதில் சந்தேகமில்லை. பல வகுப்பு உயிர்ப் பிராணிகளும் வசிப்பதற்குரிய ஒருபெரிய இடமாயுமிருக்கிறது. ஆனால், விவேகிகள் இருந்து வாழப் பெற்றிராததோர் பெருங் குறை யுண்டு. முன் சாந்திப முனிவரிடம் படித்துக் கொண்டிருந்தபோது பற்பல வனங்களைப் பார்த் திருக்கிறேன். இதைப்போலப் பெரியவனத்தைக் கண்டதில்லை. வனம் என்பது உத்தியான வனத் தைவிடக் கொஞ்சம் அடர்த்தியாயிருப்பதுதான் என்று இது வரையிலும் எண்ணியிருந்தேன். பாதைக்குச் சற்று விலகியிருக்கும் இதுவே இப் படி அடர்ந்திருந்ததானால், இதன் உள்ளே பிர வேசித்தால் சூரியன் ஒளியே நுழைவதற்கிடம் இராதென்று எண்ணுகிறேன்.

(இப்படிச் சொல்லிக்கொண்டே தூங்கிவிட்டார்.)

[ சுவேதனும் சுதேவனும் பிரவேசித்தல் ]

சுவேதன்:—ஆமாம், நகரில் இருப்பவர்கள் எவ்வளவு தான் படித்தவர்களானாலும், நாகரிகத்துக்காக ஸதாசாரங்களையெல்லாம் விட்டொழித்து விடுகிறார்கள்.

சுதேவன்.—அதேனப்படிச் சொல்லுகிறாய்? ஒழுக்கமுடையவர்கள் எங்கிருந்தாலும் சிலராகவே இருப்பார்கள். அவர்கள் தங்கள் கடமைகளைத் தூங்கி யெழுந்ததுமுதல் படுக்கும் வரையிலும் கிரமமாகச் செய்துகொண்டிருக்கிறார்களாதலால், எங்கே போனாலும் அந்தப் பழக்கத்துக்குத் தவறி நடக்கமாட்டார்கள்.

சுவேதன்.—அது சரி. அதற்கு மாறாக நான் ஒன்றும் சொல்ல வரவில்லை, இப்போது. நகரங்களில் வசிப்பவருக்குச் சில ஆசாரங்கள் அசாத்தியங்களாகையால், அவற்றை விலக்குவது அவசியமாகிறது. "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையினானே" அல்லவா?

சுதேவன்.—ஆமாம். அப்படியானால், கூடுமானவற்றைச் செய்துகொண்டு கூடாதவற்றையல்லவா விட வேண்டும்? அப்படியின்றி எல்லாவற்றையும் தொலைத்து நாஸ்திகர் ஆகிறார்களே.

சுவேதன்.—ஆகக்கூடாதுதான். ஆனால், என்ன செய்யலாம்? தங்களால் அநுஷ்டிக்க முடியாமல் போகவே, காலதேச வர்த்தமானங்களை யநுசரித்து விட்டிருக்கவுங் கூடும்.

சுதேவன்.—நண்பா! என்னவிது? ஒன்றிலும் ஒட்டாமல் பேசுகிறாய். இது அழகாகுமோ?

சுவேதன்.—ஆமாம். தங்களது குலத்துக்குத் தக்க ஆசாரங்களை விட்டிருப்பவர்களை ஒழுக்கமுடையவர் என்று எப்படிச் சொல்லலாம். அதுவன்றி, அவர்களின் குற்றங்களை எடுத்துச் சொல்வோமானாலும் சொல்பவரைத் தூஷிப்பார்கள். அதனால்தான் ஒட்டாமல் பேசவேண்டியிருக்கிறது.

சுதேவன்.—இஃது உண்மையே. நாஸ்திகரை ஆஸ்திகராகச் செய்தல் சாத்தியமானதன்றுதான். என்ன செய்யலாம்? நல்லவர் தோன்றி அவரை நல்வழிக்குத் திருப்பக்கூடிய நல்ல காலம் எப்போது வருமோ?

சுவேதன்.—ஆம். "செயற்கரிய செய்வர் பெரியர்" நல்லோர் தங்களது ஒழுக்கத்தாலும் குணத்தாலும் உபதேசத்தாலுமே உயிர்க்குதவ உலகத்தாரைத் திருத்துகிறார்கள். ஜனகன் முதலியவர் தாங்கள் நிஷ்காம பக்தியாற் சிறந்து ராகத்வேஷங்களை யொழிந்திருந்த போதிலும், உலகத்

தாரைத் திருத்துவதாகவே தாங்களும் உலகில்துக் கங்களில் உழல்வதுபோல் காண்பித்துவந்தன ரல்லவா?

சுதேவன்.—ஆமாம். அஃது உண்மைதான். அவர்கள் போலப் பலபேரைப் பற்றி நாம் படித்துமிருக்கிறோம். கேட்டும் வருகிறோம். அவையெல்லாம் ஆகமப் பிரமாணங்களல்லவா? பிரத்தியக்ஷமாகவே அறிந்துகொள்வதற்கு அவந்தியில் ஒரு பெரியவர் இருக்கிறார். அவரை யறியாதவர் அறியாதவரே.

சுவேதன்.—நண்பா! இப்படிச் சிறப்பாகச் சொல்வதாலும், அவர் வசிக்குமிடம் நம்மூருக்கு வெகு சமீபமான அவந்தி என்று சொல்வதாலும் அம்மஹானை நான் நன்றாய்த் தெரிந்துகொண்டேன். ஆனாலும் அந்தப் பெரியவரைப் பற்றிக் கேட்டிருக்கிறேனே யல்லாமல் அவரை யொருமுறையாகிலும் தரிசித்ததில்லை. இப்படிப்பட்ட பெரியவர்களைத் தரிசித்தாலும் பாவங்கள் ஒழியுமென்பார்களே! நீ யொருதரமாகிலும் அம்மஹானை தரிசித்ததுண்டா?

சுதேவன்.—நான் அவரைப் பலமுறை தரிசித்திருக்கிறேன். அவர் எப்போதும் நிஷ்டையிலிருப்பவராதலால், சமயம் அறிந்துதான் தரிசனஞ் செய்ய வேண்டும். ஆனாலோ வெகு சுலபர். பகவான்

வாசுதேவனும் இப்பெருந் தவரிடத்திலே தான் ஸௌலப்யகுணத்தைக் கற்றுக் கொண்டாரோ வென்று சந்தேகங் கொள்ள வேண்டியிருக்கிறது.

சுவேதன்.—என் அப்பனே! உலகத்துக்கொரு மூர்த்தி நீயேதான். இப்படியன்றோ புகழ் பெறவேண் டும்!.

23. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

இதுவன்றோ பெருமையென்பது? மற்று எத்தனை தான் குலத்தாலும், வயதாலும், தனத்தாலும் மாத்திரம் உயர்ந்திருந்தாலும் பெருமையாகுமோ? சுதேவா! அந்தப் புண்ணிய மூர்த்திக்கு ஏதா கிலும் குறையுண்டோ? அவரைப் போன்ற பெரி யவர்களுக்கு ஏதேனும் குறையைத் தருவது எம் பெருமானுக்கு ஒரு திருவிளையாட்டல்லவா? அப் படியேதேனும் இருக்கிறதோ?

சுதேவன்.—அப்பா! பூமியில் பிறந்தவர்களெல்லோரும் முன்வினைக்கு வசப்பட்டவர்களல்லரோ? ஆத லால், குறையே யில்லாமல் இருக்கமுடியுமா? ஏதேனும் ஒரு குறையாகிலும் இருந்துகொண்டு தானிருக்கும். ஆனாலும், அந்தப் புண்ணிய புருஷர் தமக்குக் குறையிருக்கிறதென்று அறிந்த வரேயல்லர். அவர் விருப்பும் வெறுப்பும் இல்லா

தவர். அதனுல் சுகமின்னதென்றும் துக்கமின்னதென்றும் அறியாதவர்.

சுவேதன்.—அவருக்கு என்னகுறை ஏற்பட்டிருக்கிறது? குழந்தையில்லாக் குறையா? அதுதான் பெரும்பாலும் பெரியவருக்குற்ற குறை.

சுதேவன்.—அதுவன்று. ஆனுல்——

சுவேதன்.—அதுவன்று? ஆனுல், மிகவும் தரித்திரத்தில் ஆழ்ந்திருப்பார் என்று எண்ணுகிறேன். ஏனென்றுல், இந்த இரண்டுமல்லாத மற்றைக் குறைகள் உலகத்தாரை வருத்துவதில்லை. அவற்றிலும் வறுமையுடையார் அடையும்சிறுமையைச் சொல்லிமுடியாது.

சுதேவன்.—அந்தப்படியாக மற்றவர் எண்ணிக்கொள்ளலாமே யல்லாமல், பெருமான் குசேலர் கொஞ்சமாகிலும் மனந்தளர்ந்தவரே யல்லர். அவருக்குக் குழந்தைகளோ இருபத்தேழு. இவ்வளவிருந்தும் அந்த மஹானை மற்றவர் கை மேலாகும்படி போய் யாசித்ததில்லை. வயல்களில் சிந்திக்கிடப்பவற்றைச் சேகரித்துத் தமது தர்மபத்தினியிடம் அளிப்பர். அந்தச் சுசிலையும் அவற்றை அன்போடு வாங்கிக் குற்றிச் சமைத்து எல்லாரையும் திருப்தி செய்வள். இந்தவிதமான தரித்திரத்திலும் அந்த ஸதிபதிகள் ஒரு அதிதியையாகிலும்

உபசரிக்காமல் இருந்ததில்லை. இவ்வளவு சுத்தமும் உறுதியுமுள்ள மனம் செல்வர்களுக்கும் உண்டோ?

சுவேதன்.—இஃதென்ன? உலக விசித்திரமாயிருக்கிறதே! ஒத்தவாழ்க்கையென்பது இதுவன்றோ! உலகத்தில் கிருஹஸ்தனுக்குப் பத்தினி நல்லவளாக வாய்ப்பதுதான் அருமை.

சுதேவன்.—அப்பா! அப்படி வாய்க்காததால் உண்டாகும் கஷ்டத்தை ஏட்டில் அடக்கமுடியாது.

சுவேதன்.—இவ்வித ஆசாரமும், தருமமும் உடையவர்களுக்கு மனைவி தக்கபடி வாய்த்திராவிட்டால் அவர்களது கொள்கை பயன் பெறுமல் போய்விடும். பத்தினிகளாலேயே பர்த்தாக்களுக்குப் பெருமையுண்டாகிறது என்பதற்கு இஃதோர் நிதர்சனமாகிறது.

சுதேவன்.—ஆமாம். அதிலென்ன சந்தேகம்? கற்பு எனப்படுவது கணவன் சொற்களுக்குத் திறம்பாமல் நடக்க வேண்டியதன்றோ?

சுவேதன்.—இதனாலேயே இந்தப் பெரியவர் முன் பிறப்பிலும் நல்வினைகளைச் செய்துள்ளவர் என்று தோன்றவில்லையா? வறுமையுடையவர்கள் பூர்வத்தில் தீமையைச் செய்துள்ளவர் என்று உலகம் சொல்லுமானாலும், அஃது இவர் போன்ற புண்

ணியவான்களைக் குறிக்காது. ஏனென்றால், அருட்பெருங்கடவுள் நல்லதவமுடைய சிலருக்கே பலவிதமான கஷ்டங்களைத் தந்து, அவரை நலி யச் செய்து, அதனாலும் அவர்கள் தங்களது விர தங்கெடாமல் நடந்து வருந் தன்மையை உலகத் தார்க்கு அறிவிக்கிறார்.

சுதேவன்.—ஆம். இவரை ஒரு அவதார புருஷரென்று உலகத்தார் சொல்வார்களே யல்லாமல், கர்ம சேஷத்தால் பிறப்பெடுத்தவர் என்று வாய்கூசாமல் சொல்லத் துணியமாட்டார். தருமமே இவ்வுருக் கொண்டு உதித்தது என்று நான் சொல்லுவேன்.

சுவேதன்.—இந்த மஹானை ஒரு தரமேனும் காணப் பெறாதவர் கண்ணுள்ளவரேனும் முகத்திலிரண்டு புண்ணுள்ளவரே யாவர். ஒரு முறையாகிலும் போய் அந்தச் சிலருடைய பாதபத்மங்களை எனது சிரசினுக்கு ஆபரணமாகப் பூண்டாலல் லாமல் என் மனம் ஆறாது.

சுதேவன்.—ஏன்? கூட வருவது உண்டானால், இதுவே பயணமாகப் போய் வருவோம். மனத்தில் எண் ணியதை ஆராய்ந்து, நலமானால் உடனேமுடித்து விடுதலே கற்றறிந்தவர் கடமையாகும்.

சுவேதன்.—ஆமாம். அது துணிவுதானென்றாலும், வீட்டில் சொல்லாமல்புறப்பட என்மனம் துணிய

வில்லை. வீட்டிலிருப்பவர் தக்க துணையில்லாமல் மயங்குவாரல்லவா?

சுதேவன்.—இந்தப் பெரும் பாசமல்லவா மாந்தர்களை நன்மையடையவிடாமல் தடுக்கிறது? இந்த வித மான பற்றுள்ளவர்களே வண்டியினுருளை போலச் சுழன்று, சுழன்று பிறப்பெடுக்கிறார்கள். இந்தச் சிறியசெயலுக்கே இப்படி ஆலோசித்தாயானால், பெரிய காரியங்கள் எப்படி உன்னால் முடிக்கப் படும்?

சுவேதன்.—என்னையப்படிப் பரிகாசம் செய்யாதே. தங்களை நம்பியிருந்தவருக்குத் தக்க சமாதானம் செய்த பிறகல்லவோ, மற்றைத் தருமங்களில் நுழைவது மனிதர்க்கு அழகு?

சுதேவன்.—"ஒருவன், தான் எண்ணிமுடித்த செயல் நல்லதென்று ஆரம்பித்து அதிலேயே ஆழ்ந் திருந்துவிட்டானானால், பகவான் அந்த பக்தனு டைய குடும்ப யோகக்ஷேமங்களைத் தான் கவனித் துக் கொள்கிறார்" என்று கீதை முறையிடுகிறதே. இதுவே ஆஸ்திகரின்தெளிந்தகொள்கையன்றோ?

சுவேதன்.—அந்தத் துணிவுதானே தோன்றாமல் உல கம் மயங்குகிறது. அந்தத் துணிவு சிறிது உண் டானாலும் உலகப்பற்று காலடைவில் ஒழிந்து விடாதோ? பற்றொழிந்தால் அன்றே, அப்போதே, அதுவே வீடன்றோ?

சுதேவன்.—இந்த விதமான துணிவு பெரியவரைப் பணிந்து அவரிடம் பழகினாலல்லாமல் உண்டாகாது.

சுவேதன்.—ஆமாம். பெருந்தவத்தினரது நட்பைக் கொள்ளாதவர் பிறந்தும் பிறவாதவரே. அந்த நட்பும் பலபிறவிகளிற் செய்த பெருந் தவங்களாலேயே உண்டாகும்.

24. பொன்னுள்ளான் பூமியுள்ளான் புந்தியுள்ளா னுயிடினு
மென்னுள்ளா னுவனவ னிருந்தவர்த நட்பிலனேற்
பொன்னில்லான் பூமியில்லான் புந்தியில்லா னுயிடினு
மென்னில்லா னுவனவ னிருந்தவர்த நட்புளனேல்.

சுதேவன்:—அந்தப் பெரியோரது உறவே கூடும் நட்பாகும். கூடார் உறவோ பாடாய் முடியும்.

25. கூடுதற்குக் கூடாத கூட்டத்துப் பகோட்பு
விடுதற்குத் தக்கதாய் நாடோறு மெலிந்தொழியு
நீடுதற்குத் தக்கதுநன் னெறிநின்றோர் நட்பொன்றே
தேடுதற்குக் கிடையாத திரவியமு மஃதாமால்.

சுவேதன்—பெரியவரோடு நட்புக்கொண்டால் அடையும் பாக்கியம் அபரிமிதமல்லவா?

26. முத்திக்கு வித்தாகு முழுதுணர்ந்தோர் பெருநட்பே
தித்திக்கு நாடோறுந் தேவர்பெறத் கருந்திருவுஞ்
சித்திக்கும் படியருளுஞ் செப்பரிதால்.

சுதேவன்.—ஆமாம். இப்படி அளவில்லாப் பல பேற்றுக்குக் காரணமாக விருக்கிற அந்தப் பெரிய

வரைத் தரிசிக்கப் போவோமென்ருல், நீ மீன மேஷம் பார்க்கிருய். உனது குடும்பச் சுமையை உன் அந்தர்யாமிக்கு ஒப்பித்துவிட்டுப் புறப் படப்பா. போவோம்.

சுவேதன்.—சரி. அப்படியே போவோம். ஆனல் தாபமான இவ்வேளையில் வழி நடப்பது தகாது. சிறிது நேரம் இந்தக்காட்டு நிழலில் இருந்து பிறகு போவோம்.

சுதேவன்.—அப்படியே யாகட்டும்.

(இருவரும் அங்கே போய் நித்திரை செய்யும் குசேலரைக் காண்கிருர்கள்.)

நண்ப! நீ நல்ல பக்தியும் உறுதியான் நம்பிக்கையு முடையவனென்று எண்ணுகிறேன்.

சுவேதன்.—என்ன ஆச்சரியம்? இங்கே படுத்துக் கொண்டிருப்பவர் யார்?

சுதேவன்.—யாரா? ‘கும்பிடப்போனதெய்வம் குறுக்கே வந்தது’. நீ எண்ணிய எண்ணத்தை உன் அந்தர் யாமி முடித்துவைத்தார். பார்த்தாயா? ‘கடவுளை நம்பினேர் கைவிடப்படார்’.

சுவேதன்.—நாம் கருத்துள் தியானித்திருந்த நாதன் இவர்தாமா? இங்கேன் படுத்துறங்குகிருர்? இவரது அங்க லக்ஷணங்களைப் பார்த்தால்,

27. அடக்கமும் பொறையுங் கருணையு நண்பு
மழுக்கறுத் திலாமையு மென்றும்
விடக்கருந் தவத்தோ டொருங்குற வளர்ப்போர்,
வெருளியுங் காமமு மயங்கும்
கடக்கருந் திமை நாடொறும் விளக்குங்
கவர்க டொடர்ச்சியுந் தன்னைத்
தொடற்கரி தாக வடியறக் காய்ந்தோர்,
துயர்க்குந் தூயவர் மாதோ.

என்று தோன்றுகிறது, இப்பெரியவரே தமது நல்ல நடத்தைகளால் உலகத்தாரைத் திருத்தி யருள்வர்என்பது வெளியாகிறது. இவர் நித்திரை யிலிருக்கும்போதும் இவருடைய தேஜசு வேதப் பொருளை நன்குயறிந்தவர் என்பதனை யறிவிக் கிறதே.

சுதேவன்.—ஆமாம். இந்தமஹான்,

28. படியிலா மறைநூன் முற்றுணர்ந் தடுத்தோர்
பக்குவத் திறன்மதித் தறியா
வொடிவறு சரியை யாதியா நான்கு
முற்றுறப் பயின்றுசாந் தீப
னடிமல ரடையா விருப்புமுன் மூன்று
மையமுன் மூன்றும்விட் டோடக்
கடிகெழு காயாம் பூங்கதிர் மேனிக்
கண்ணனே டமர்ந்துகற் றனரே.

இவரோ இயற்கையில் நல்ல குணமுடையவர்,

மற்றுஞ் சேர்க்கையிலுஞ் சிறந்திருக்கிறார். இவரைத் தூயவரென்று சொல்லவும் வேண்டுமோ?

சுவேதன்.—ஒருவரும் சொல்லவேண்டியதில்லை. இவர் உருவமே தெரிவிக்கும்.

சுதேவன்.—இவர் தமது நிஷ்டையறையை விட்டு வெளியே வருவது அருமை. இப்படி வழி நடந்தேயறியாதவர். என்ன காரியமாக வெளிப் புறப்பட்டாரோ தெரியவில்லை. நமக்குத் தரிசனங் கொடுப்பதற்காகவே புறப்பட்டார் என்று எண்ணுகிறேன். அல்லது பகவான் தான் நமது குறையை நீக்கும் பொருட்டு இந்த வுருவோடு இங்கே தோன்றியிருக்கின்றாரோ என்றும் எண்ணுகிறேன். ஆச்சரியத்தால் மனம் மயங்கியிருக்கிறது. ஒன்றும் தோன்றவில்லை.

சுவேதன்.—பரம்பொருளே இவ்வித வுருக்கொண்டு வந்திருக்கின்றார் என்று துணிவதற்கு முடியாது. ஆனால், நாம் எண்ணியதற்கும் இவர் இங்கே எழுந்தருளியிருப்பதற்கும் உள்ள ஒற்றுமையைப் பார்த்தால், இஃது ஆதியஞ்சோதியின் அதியற்புதச் செயலென்றே தோன்றுகிறது. ஐயோ, பாவம்! வழி நடந்து வந்த பேரிளைப்புத்தான் இவரையிப்படி நித்திரையிலாழ்த்தியது.

சுதேவன்.—இவர் தினமும் கண்ணபிரானையே ஆராதனம் புரிந்து வருபவர்.

29. மாற்கடல் கடந்த மனத்தனாய் வேத
வரம்புகண் டிலந்தமிக் குசேலன்
பாற்கடன் மிசையோர் கார்க்கடல் போலப்
பையர வணைமிசைத் துயில்வோன்
சேற்கரு நெடுங்கட் டிருமகள் வருடச்
சிவந்தகாட் டிடுமரை மலர்த்தா
னேற்குந்த னுள்ளத் திருவென நாளு
மியற்றரும் பூசனை யியற்றும்.

ஆதலால், அந்தக் கண்ணபிரானைத் தரிசிக்கவே இப்படிப் பயணப் பட்டிருக்கலாம்.

சுவேதன்.—ஆமாம். இது நிஜமாகத்தான் இருக்கும். இவர் முகத்தில் சந்தோஷம் தோன்றுகிறதேயல்லாமல் வியசனம் தோன்றுகிறதா பார். இதுவே இந்த மஹான் ஸ்ரீ கண்ணபிரான் சேவையை உத்தேசித்தே மிகுந்த ஆசையோடு இந்தப் பெருவழியைக் கடந்து வந்திருக்கிறார் என்பதைக் காட்டுகிறதல்லவா?

சுதேவன்.—மித்திரா! இவரது தேகம் இவ்வளவு மெலிவை யடைந்திருக்கக் காரணமென்ன? விரதங்களை மிகுதியாய் நோற்றுள்ளவர் போலிருக்கிறது.

சுதேவன்.—அடடா! அந்தப் பெருமை சொல்லி முடியுமோ!

30. கொழுந்துவிட் டெரியும் பசித்தழ லவித்துக்
கோதில்வை ராக்கிய மிக்குற்
றழுந்துபட் டிடாத சாந்திரா யணமுன்
னளப்பருஞ் செயற்கரும் விரத
மெழுந்துவிட் டொளிரப் பற்பகலாற்றி
யென்பொடு நரம்புக டோன்றிச்
செழுந்தசை வற்றி யிளைத்தயாக் கையாய்த்
திகழ்ந்துளார் சீர்த்தியந் தணரே.

இவர் உபவாசமிராத விரதங்களில்லை.

சுதேவன்.—இரு; இரு; சத்தமிடாதே. கண் விழித்துக் கொள்வார்போல் இருக்கிறது. அவர் விழித்துக் கொள்ளும்போது எதிரே நிற்காமல் சற்று விலகி நிற்போம்.

(சற்று விலகி மறைந்திருக்கிறார்கள்.)

குசேலர்.—(கண்விழித்து, பகவானை நினைத்து அஞ்சலி செய்துகொள்கிறார்.)

31. முற்றா விளமென் றளிர்க்கரத்தான்
முனிவிலாது மெல்லெனச் செம்
பொற்றா மரையிற் குடியிருக்கும்
பூவை வருடுந் தொறுஞ்சேக்கும்
விற்றா ரணிநற் பதமிரண்டும்
வியன்மா நிலத்தீண்டிட நடந்து
கற்றா மேய்த்த சிற்றாயன்
காமர் சீர்த்தி வாழியவே.

காராயணு! கண்ணு!! பிருந்தாவனலோலா!!! அடியேனை யாதரித்தருள். உனது திருவடி சேவைக்கென்று நான் இத்தனை துயரமடைந்துவழி நடந்தும் இன்னும் உன் கமலக் கண்ணேக்கம் பெற்றிலேனே. சிறிது பாசத்தையுற்று நெஞ்சம் உழல்கின்றதே அதனால் பரிசோதனையா?

32. பற்றிற் பழுதியற்றும் பந்தத் துழனெஞ்சே
செற்றச் சகடுதைத்தான் றன்குறியா தென்கொலோ
முற்ற வொழிந்து விடல்.

இன்று பவம்விளக்கும் பந்தத் துழனெஞ்சே
கன்று குணில்கொண்டான் றன்குறியா தென்கொலோ
வென்று மொழிந்து விடல்.

நன்றும் வினைக்கிடனும் பந்தத் துழனெஞ்சே
யுந்தி மருதிடந்தான் றன்குறியா தென்கொலோ
வந்தோ வொழிந்து விடல்.

ஏ, மடநெஞ்சே' இனியாயினும் அவன் நாமத்தையன்றிப் பகராதே. அவன் திருவடியையன்றிச் சூடாதே. அவனைத் தரிசித்தற்கல்லாமல் போகாதே. அவனை வணங்குதற்கல்லாமல் கையெடுக்காதே. ஈசுவரா! எப்பிழையிருப்பினும் பொறுத்தருளவேண்டும். 'என்று அண்ணாந்து நோக்கிப் பொழுதாயினமை யுணர்ந்து, இனித் தாமதிப்பது தக்கதன்று. எழுந்துபோவோம். என்று பயணத்துக்காகத் தமது ஆடை முதலியவற்றை எடுத்துக் கொண்டனர்.)

[ சுவேதனும் சுதேவனும் எதிர்தல் ]

சுதேவன்.—ஆரிய! சுதேவன் வணங்குகின்றேன். (வணங்குதல்.)

சுவேதன்.—அண்ணலே! சுவேதன் பணிகின்றேன். (பணிதல்.)

குசேலர்.—(இருவர்க்கும் வணக்கஞ் செய்து) ஐயன்மீர்! நீங்கள் யார்? உம்மைக் காணுது எத்தேசம் வாடுகின்றது?

சுதேவன்.—அருள் வள்ளால்! நாங்களிருபேரும் வசிப்பது துவாரகைக்கு அடுத்துள்ளதோர் அக்கிரகாரம். தங்களைத் தரிசிக்கவேண்டுமென்று இந்த நண்பர் ஆசை கொண்டிருந்தார். அதன் நிமித்தமே நாங்கள் பயணப்பட்டோம். ஆனால் வீட்டை விட்டு நீங்கும்போது இவ்வெண்ணமில்லையெங்களுக்கு. வழியிலே தோன்றிய வெண்ணந்தான். அவ்வெண்ணந் தோன்றிய உடனே பயணப் பட்டோம். எம்மெண்ணத்திற்குத் தாமதிக்காது எமக்குக் காட்சி தந்தருளினீர்கள்.

சுவேதன்.—ஆமாம் இதுவன்றோ பெரியாரியல்பு? நினைந்தார் நினைத்தபடி முடிப்பது ஈசன் செயல். அச்செயலே பெரியவர்கள் செயலுமென்பர். அது உள்ளங்கை நெல்லிக்கனியாயிற்று.

குசேலர்.—பெருங்குணத்திர்! நற்குணத்தோர் மற்றவர் தமக்குச் செய்யும் தீங்கினையு நன்மையாக்கொள

டின்புறுவர். நிமை செய்யாத என்பால் நிகழ்ந்ததை அன்பால் நீங்கள் ஏற்றுக்கொண்டது வியப்பன்று. உங்களுக்கு நான் எதிர்வந்த இது காகதாலிய நியாயமாகுமே யல்லாமல் என்னால் நிகழ்ந்ததன்று. ஆனால். எனக்கு நீங்கள் காட்சி கொடுத்ததற்கு ஒரு பொருத்தமுண்டு. நான் கோபாலப் பெருமானைக் காணத் துவாரகையை நோக்கிப் பயணப்பட்டேனாதலால், இவ்வழியில் நான் படும் பாட்டையறிந்து உங்களிருவரையும் எனக்குத் துணையாகப் பகவான் அனுப்பினதாக எண்ணவும் இடமிருக்கின்றது.

சுதேவன்—எப்படியோ. உபசாரம்சொல்ல அறியோம். இன்று நல்லவர் காட்சியைப் பெற்றுப் பரிசுத்தரானோம். தமது அபிப்பிராயப்படி கண்ணனால் ஏவப்பட்டவராகக் கொண்டாலும் எங்களுக்குச் சிறப்பேயன்றி வேறன்று. இன்றுமுதல் தமது பணிக்கு ஆளாகின்றோம். எம்மையேற்று எங்களுக்குப் பணியிட்டு நாங்கள் உய்யுமாறு செய்ய வேண்டும்.

குசேலர்.—நாராயணா! நாராயணா!! அபசாரம்! அபசாரம்!! நான் தங்கள் வரவுண்டாகிய நற்செயலையும் விரைவையும் வியந்து சொன்னேனேயல்லாமல், உங்களைக் கண்ணனனுப்பினாரென்றும், உங்களைப் பணியாளரென்றும் சொல்ல வரவில்லை. அப்

படி என்னவும் என்மனம் பொறுக்காது. நான் இன்னும் பல பிறவிக்கு ஆளாகலாமானால் இவ்வபிப்பிராயத்தை யென் மனம் எண்ணட்டும்.

சுவேதன்.—தங்கள் மனம் நோவக்கூடாது. தமக்குப் பணிவிடை செய்யவேண்டுமென்பது எங்கள் கொள்கையே. அதனைத் தலைக்கட்டிக் கொடுத்தருளவேண்டுமென்று பிரார்த்திக்கின்றோம்.

குசேலர்.—இஃது உமக்கு வேண்டுகோளானாலும் எனக்கு அஃதோர் பிறவிக்கு வித்தாகும். நான் உய்யவேண்டின் இக்கொள்கையை யொழியுங்கள்.

சுதேவன்.—ஸ்வாமி! தங்க்ள் மனத்துக்குத் தகாததை செய்யச் சம்மதியோம். சிறிது தூரம் உங்களைப் பின்தொடரவாவது இடந்தரவேண்டும். இதனை மறுக்கக்கூடாது.

குசேலர்.—நீங்கள் எங்கே செல்லப் பயணப்பட்டீர்கள்? உங்களில் ஒருவரை நான் முன் பார்த்திருப்பதாக எனக்கு நினைவு உண்டாகிறது.

சுவேதன்.—நாங்கள் இவ்வனத்துக்கடுத்ததோர் கிராமத்துக்குப் பயணப்பட்டுவந்து, காரியங்களையும் முடித்துக் கொண்டோம். இனி தம்மைத் தொடர்ந்து துவாரகை போகவேண்டியவரேதாம்.

குசேலர்.— அந்தத் துவாரகையின்னும் எத்தனைகாவத முள்ளதோ?

சுதேவன்.—சுவாமி! இதற்கடுத்ததோர் ஊர் கடலுக்கு இக்கரையிலிருக்கிறது. அதனையும் கடலையும் கடந்தால் துவாரகைதான். அந்தச் சிறிய கிராமமும பத்துநாழிகை தூரத்தில்தான் இருக்கிறது.

குசேலர்.—ஆனல், பயணைப்பட வேண்டியதே. நாழிகையுமாயிற்று. நீங்களும அங்கே போகவேண்டியிருத்தலால், இனி வழி நடப்பதால் வருத்தம் உண்டாகாது.

சுதேவன்.—புறப்படுவோம் நாழிகையும் ஆயிற்று. தங்களுடன் வரப்பெற்றதால், நாங்கள் பாக்கியம் பெற்றவரானோம்.

(மூவரும் பயணப்பட்டு வழியில் லௌகிக வைதிகங்களிற் சம்பந்தப்பட்ட பலவிஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டே அப்பெருங் கானகத்தைக் கடந்து அஸ்தமிக்க ஒரு நாழிகைப் பொழுதினுக்கு மேற்கூறிய அச்சிற்றூரை யடைந்தனர்.)



## மூன்றுமங்கம்—மூன்றுங்காட்சி.

காலம்—மாலை; இடம்—சிற்றூரின் தெரு.

(குசேலர் முதலியமூவரும்.)

குசேலர்.—ஆஹா! காற்று எத்தனை மனோகரமாய் வீசுகின்றது பாருங்கள்! இஃதென்ன? இவ்வூரில் மாத்திரம் இதுவரையில் காற்று உலாவுகிறது.

சுவேதன்.—ஆமாம்; இது கடலுக்கருகேயுள்ள கிராமமாதலால் காற்று மிகுதிதான்.

குசேலர்.—அப்படியா! நாம் இப்பொழுது கடலுக்குச் சமீபத்தில் வந்துவிட்டோமா? இஃது எந்தக் கடல்?

சுதேவன்.—இக்கடல்தான் கண்ணனைக் காணவிரும்புவோர் கடக்கவேண்டிய கருக்கடல் போன்றதோர் கருங்கடல்.

குசேலர்.—மெய்தான் ஸம்ஸாரமாகிய கடலைத்தாண்ட விரும்புவார், அதற்குமுன் தோன்றும் இன்பங்களனைத்தையும் சிற்றின்பமென வெறுத்தபின்னரல்லவா அப்பேரின்பத்தை யடைவார்?

சுவேதன்.—தாம் இப்பொழுது 'ஈங்கு வீசும் காற்று மனோகரமாயிருக்கிறது' என்று சொன்னதா

லேயே, நமக்கு உலகவின்பத்தில் பற்றுண்டு என எண்ணிவிடலாகுமா? ஜனகன் முதலானோர் உலக விஷயங்களை அநுபவித்திருந்தே பற்றற்று நிற்க வில்லையா? பொய்ப்புலன்களைக்குநோய் புல்லியர் பாலன்றியே, மெய்ப்புலவர் தம்பால் விளையா' வன்றே?

குசேலர்.—ஆனால், சிறிது அவற்றின்வழி மனத்தைச் செலுத்திவிட்டால், அவை மனத்தைக் கவர்ந்து விடுமன்றோ?

சுதேவன்.—அது பற்றுடையார்க்கு இயற்கைதான். அல்லாமலும், தாம் காட்டிய உவமையால் 'வினை கெடும்' என்பது உறுதியாயிற்றே?

குசேலர்.—ஆம்; வினைகெடுங் காலம் அணுகியபோது தான் அமலனையடைய அவாத்தோன்றும். அது வரைச் சிற்றின்பத்திலே திகைத்துத்தான் கிடப் பர்.

சுவேதன்.—அருட்பெருங்கடலாகிய பகவானது குணா திசயங்களை யெடுத்தோதுவது அரிய வேதந் தானே?

குசேலர்.—ஆமாம். சந்தேகமில்லை. புராணேதிஹா ஸங்களும் எடுத்துச் சொல்லும் என்றாலும், அவைகளுக்கும் வேதமே முதன்மையானது.

சுதேவன்.—அந்த வேதத்தின் உட்கருத்தை என் போன்றவருக்கு விளக்கிக் காண்பிப்பவர் யாரோ?

குசேலர்—ஜீவர்களிடத்து அன்பும் அருளுங் கொண் டிருத்தலே தமக்குச் சுபாவமாகவுடைய பிரா மணர்களே வேதாந்தங்களை உலகத்தாருக்கு அறிவிப்பவர்.

சுவேதன்.—கண்ணபிரானும் அவர்களையே தனக்கு ஆசிரியராய்க் கொண்டிருப்பதாகச் சொல்லியிருக் கிறார்.

83. அந்தணரே யாசன்முதன் மூவருக்கு மாசிரிய
ருளார் தெய்வ
மந்தணரே மறைக்கிழவன் முதலாய தேவரினு
மாற்றல் சான்றோ
ரந்தணரே யாவதற்கு மழிவதற்குங் காரணமா
யமைந்த நீரா
ரந்தணரே தெய்வமெனக் கென்றுகண்ண னுரைக்கவுமி
மயிர்த்த லென்னே. [யா

குசேலர்.—ஆமாம். அதிலென்ன தடை? அவர் வாக் குக்கெதிர்வாக்கு முண்டோ?

சுதேவன்.—இன்று நல்ல பாக்கியத்தைப் பெற்றோம். இதனைவிட முத்திப்பேறு சிறப்பேயன்று.

சுவேதன்.—இதுதான் முத்தியென்பதும். இதுவே பிறவிநோய்க்கு மருந்து. இதுவே அறிவையூட்

டும். தொண்டரை வணங்கியவர் கிருபைக்குப் பாத்திராராவதிலும் உயர்ந்தது ஒன்று உண்டென்று என்னுவதற்கு இடமேயில்லே.

குசேலர்.— பாருங்கள் இந்தத் தெளிந்த நீரூற்றை. உருவிற் சிறியதானலும் குணத்திற் பெரியதாயிருக்கிறது. நீர் வேட்கை மிகுதியுண்டாக நடுக்காட்டில் தேடித்திரிந்து தவித்துத் தயங்கினேமே. இப்போது தாகமில்லாவிட்டாலும் இதன் தெளிவைப் பார்க்கும்போது குடிக்க ஆவல் உண்டாகிறது.

சுதேவன்.—ஸ்வாமி! ஈயாத மனமுடைய பெருஞ் செல்வரையும் ஈத்துவக்கும் குணமுடையவரையும் எடுத்துக் காட்டுவதற்கே இங்கே கடலையும் அதற்கடுத்ததாக இந்த ஊற்றினையும் பகவான் உண்டாக்கியிருக்கிறார் போலும்.

குசேலர்.—அது மாத்திரமன்று. 'இறைவன் உருவத்தால் மாத்திரமல்லாமல் குணத்தாலும் ஜீவரைத் தன்வழிக்குத் திருப்புகிறார்' என்பதும் இவ்விரண்டினலும் தெரிகிறது பாருங்கள்.

சுவேதன்.—ஆமாம். இந்த இரண்டும் (கடலும், ஊற்றும் தெளிவில் ஒத்திருந்தாலும் குணத்தில் வேறுபட்டே இருக்கின்றது.

குசேலர்.—என்னவிது? இந்த வலைச்சிகள் விற்கக் கொண்டுவந்திருப்பது மீனாயிருந்தாலும், அதிக மணம் வீசுகின்றன.

சுதேவன்.—ஸ்வாமி! அவர்கள் தலையில் சூட்டியிருக்கும் தாழைமலர்கள் அந்த மீன்களுக்கும் மணமேற்று கின்றன.

சுவேதன்.—ஆமாம். தாழம்பூ நல்லோரையும், அதனைச் சேர்ந்த மீன்கள் கெட்டவரையும் உணர்த்துகின் றன.

குசேலர்.—என்னையாவிது? இந்தவூர் சிறு கிராமமானா லும், ஒவ்வொரு குடிசையின் வாயில்தோறும் செல்வரும் விரும்பக்கூடிய பல விலையுயர்ந்த முத் துக்கள் குப்பைகளோடு குவிக்கப்பட்டிருக்கின் றனவே.

சுவேதன்.—இது, கண்ணனைக் காணவிரும்பி வருவா ருக்குச் செல்வத்தில் பற்றிருக்கக் கூடாது என்ற தமது கொள்கையை வெளிப் படுத்துகின்றன. எதுவும் மிகுதியாயிருந்தால் அலக்ஷியந்தான் தோன்றும்.

குசேலர்.—இருங்கள், இருங்கள் இதென்ன சப்தம்? பேரொலியாயிருக்கிறதே.

சுதேவன்.—இது கடலொலிதான். காற்றுக்காலமாத லால், பெரிய பெரிய அலைகள் கரையில் வந்து மோதுகின்றன.

துசேலர்.—ஆனால், கடல் கிட்டிவிட்டதோ?

சுவேதன்.—ஆமாம். அதோ பாருங்கள் எதிர்ப்புற மாக.

துசேலர்.—(பார்த்து, சற்று நிதானித்தல்.) ஆ! ஆ! என்னநிறம்! என்னபெருமை! என்னகாம்பீர்யம்!

சுதேவன்.—ஆமாம். இவற்றால்தான் இதனைக் கண்ண னுக்கு ஒப்புக் காண்பிக்கின்றார்கள் பெரியவர்.

துசேலர்.—அதிலென்ன சந்தேகம்? சிறந்த சங்கத்தைப் பெற்று குவலயத்தை யுண்டாக்கி, ஆமை மீன் முதலிய உருவங்களைக் கொண்டு உயிர்களைப் பல வகையாலுங் காத்து, அழகிய பவளச் செவ்வாய் இயைந்து, பொன்னைக் கொண்டு, கரிய நிறமுங் காட்டி நிற்றலால், இதனைக் கண்ணபிரானுக்கு உவமையாகச் சொல்லுவது பெருமையே.

சுதேவன்.—நன்றாய்ச் சொன்னீர்கள். மனததிலுற்ற வற்றை மற்றவற்றிலும் பொருத்திச் சொல்லுதல் மனிதரது இயற்கை. தாங்கள் தங்களது மனத் தில் கண்ணபிரானையே நினைத்திருத்தலால், கட லும் கண்ணனாயிற்று.

சுவேதன்.—சுவேதா! அது மாத்திரமல்ல பெரியோர் கள் அநுபவத்தை மற்றவருக்குஞ் சொல்லி, அவர் களையுந் திருத்துங் குணமுந் தோன்றுகிறது பார்.

குசேலர்.—ஆமாம், கடலேக் கண்டாய்விட்டது. இதனைக் கடந்தல்லவா கண்ணனைக் காணவேண்டும். இதனைக் கடக்கவேண்டுமே தோணிக்காரனுக்கு ஏதேனும் கொடுத்தல்லவா போகவேண்டும்.

சுதேவன்.—பெரியவரே! இங்கே இருக்கப்பட்டவர்களது எண்ணங் கண்ணபிரான் அருளால் நல்ல நெறியில் செல்லக்கூடியனவாயிருக்கும். தம்மைப் போன்றவரை நன்றாய் உபசரித்து வழியனுப்புவார்கள். தடையில்லை இது விஷயத்தில் தாங்கள் ஆலோசிக்கவேண்டாம்

குசேலர்.—நல்ல சிநேகிதர்களைப் பெற்றவர் எங்கே போனாலும் அந்தநேயர்களாலே நன்றாய் உபசரிக்கப்படுவார் என்பது உண்மையாதலால், தங்களை நட்பினராகக் கொண்ட எனக்குக் குறைவில்லை. ஆனால், என் கையிலில்லாததைப் பற்றி வருந்துகிறேன்.

சுதேவன்.—பெரியவர்கள் மற்றவருக்குத் துன்பந் தாக்கூடாதென்று எண்ணிச் சிறிய செயலையும்பற்றி மயங்குவார்கள். ஆனாலும், அவர்களுடைய உள்ளக் கருத்தை யறிந்த நல்லவர்கள் அப்பெரியவர்களை நன்றாய் உபசரித்துக் குளிர வைப்பார்கள்.

குசேலர்.—'பிறரை யுபசரித்தல்' என்பதனை விரதமாகக் கொண்ட பெரியவர் எக்குலத்தும் பிறந்

நிருப்பார்கள் அவருக்கு ஏற்றம் இழிவு, நல்லவர், கெட்டவர் என்னும் வேறுபாடே தோற்றாது. எல்லாரையும் ஒருங்கே உபசரிப்பார்கள்.

(இப்படிப் பேசிக்கொண்டே தோணிக்காரனால் நன்றாய் உபசரிக்கப்பட்டு அக்கரை சேர்கின்றார்கள்.)



## நான்காமங்கம்—முதற்காட்சி.

——:o)(-)(o:——

காலம்—காலை; இடம்—துவாரகையின் பெரியதெரு.

(குசேலர் முதலியமூவரும்.)

சுதேவன்.—ஸ்வாமி! இந்தச் செழிப்பான பட்டணந்தான் துவாரகையென்பது. இந்தப் பெரிய தெருக்களையெல்லாம் கடந்துபோனால், கார்வண்ணனுகும் கண்ணனைக் காணலாகும்.

குசேலர்.—ஐயா! இங்கே வசிக்கும் பெரியோர்களது தேஜஸினால், அவருக்கு ஒன்றிலுமே குறையில்லை என்று தோன்றுகிறது. அப்படிக் குறையொன்றுமில்லாதிருப்பதற்குக் காரணம் இந்த நகரின் செழுமையல்லவா?

சுதேவன்.—ஸ்வாமி! திக்பாலகருக்கும் மற்றுள்ள தேவருக்கும் நாதனான கண்ணபிரானிருக்குமிடம் இதுவானால் இதன் செழுமைக்கும் விளைவுக்கும் குறையிருக்குமோ?

குசேலர்.—அதெப்படிக் குறையுண்டாகும்? அவரைச் சேர்ந்தவையும் அவருடைய உருவைக்கொண்டு விளங்குமென்றால், அவர் தாமாக இஷ்டப்பட்டு வந்து சேர்ந்த இந்நகர் அவருருவமாகவே விளங்குவதற்கு தடையென்ன? அவரது ஸாரூப்யத்தை

யடைந்த ஒன்றினுக்குக் குறையென்பது எங்கி ருந்து வரும்?

34, தருமந் தவ்வலர் தங்கிப் பொலிவுறத்
தெருமந் தன்னரு பாவஞ் சிதைதரா
வருமந் தலைவன் வைகலி னாருர்க்
கருமந் தன்னமு மின்றிக் கடிநகர்.

சுவேதன்.—இந்த நகரைக் கண்டாலும் அவரைக் கண் டதாகும் போலிருக்கிறதே!

சுதேவன்—இருந்தாலும், அவரைக் கண்டதாலுண் டாகும் பயன் இந்த நகரைக் கண்டதாலுண்டா குமா?

துகேலர்.—அஃது எப்படியுண்டாகும்? அவர் இங்கி ருந்து விளங்குவதால் இந்த நகர் அவருடைய பிரதிபிம்பமாகத் தோன்றினும் தோன்றலாமே யல்லாமல், அந்தப் பகவானது எண்ணற்கருமை யாகும் குணங்களும் செயல்களும் இந்த அசேதன மான நகரினுக்குண்டாகுமோ? நித்யர்களாகிய ஜீவரும் அவரைப் பலவிதத்தால் ஒத்திருந்தும் அவரது சாமான்யத்தை யடையமுடியாதவர்களா யிருக்கிறார்களே. உலகில் யாவருக்கும் போதிக் கும் வேதமே அவருடைய அரிய செயல்களை அறிந்துசொல்லவும் முடியாமல் தனது முடியா மையைத் தன் வாய்கொண்டும் முறையிட்டுவிட் டதே.

சுதேவன்.—இதனுலேயே, இவரை 'ஒத்தாரும் மிக்காரும் இல்லாய மாமாயன்' என்று பெரியோரும் ஓதியிருக்கின்றூர்கள்.

குசேலர்.—(அகழியைக் கண்டு) இஃதென்ன! இதுவும் ஒரு கடலோ? அங்கேதான் ஒரு கடலைக் கண்டோமே, அன்றியும் தாண்டி வந்தோமே. இதனையும் கடந்து போகவேண்டுமா என்ன?

சுவேதன்.—ஸ்வாமி! இது தான் அகழியென்று சொல்லப்படுவது. அதனை அரசர்கள் தமதுநாட்டைக் காப்பதற்கு ஓர் அரணுக அமைத்துக் கொள்வது வழக்கம்.

குசேலர்.—இதனைப் பார்த்ததும், உத்தமக் கவிகளின் அழகும் தெளிவும் ஆழ்ந்த பொருளுமுடைய செய்யுட்கள் நினைவுக்கு வருகின்றன.

சுதேவன்.—ஸ்வாமி! சற்று நிதானித்து வாருங்கள். அங்கே பாருங்கள், ஒரு அரசன் கண்ணபிரானைத் தரிசித்துவரும் கோலத்தை. அந்தப் பெரிய கூட்டம் நெருங்கிவிட்டால் நமக்குப் போக வழியிராது.

குசேலர்.—(கைகுவித்து) கண்ணனைக் கண்டாரைக் கண்டாலும் தொலையாப் பெரும் பாவங்களும் தொலையுமல்லவா?

சுவேதன்.—(தனக்குள்) இவருடையபக்திதான் என்ன? ராமபக்தியிற் சிறந்தவர்களான அஞ்சனைச் சிறுவனும் அரும்புகழ் பாதனும் இவருடைய பக்திக்கு ஒப்பாகமாட்டார்கள்போல் இருக்கிறதே. (வெளியில்) ஸ்வாமி' கை கோத்துக்கொள்ளுங்கள். இல்லையானல், கூட்டத்தில் தவறிவிடுவீர்கள்.

குசேலர்.—ஆமாம். உண்மைதான்.

(கை கோத்துக்கொள்கிறார்)

சுதேவன்.—பெரியவரே! இதோ பாருங்கள் வணிகப் பெண்கள் விளையாடிக் கொண்டிருப்பதை. இவர்கள் தம்மாடலுக்குப் பொன்கட்டிகளை அடுப்பாகவும், பொற்பாத்திரத்தைச் சமையற் பாத்திரமாகவும், அந்தப் பாத்திரத்தில் பன்னீரைப்பெய்து அதனை உலை நீராகவும், அந்த நீருள் நல்ல முத்துக்களைக் கொட்டி அவற்றை அரிசியாகவும், அடுப்பில் அரதனங்களைக் கொட்டி அவற்றை நெருப்பாகவும், பவளக்கொடிகளை விறகாகவும் கொண்டிருக்கிறார்கள்,

குசேலர்.—இந்தத் தெருவழியே எம்போலியர் கடந்து போகவும் கூடாது போலிருக்கிறதே.

சுவேதன்.—அந்த விலக்கு ஆசையுள்ளவருக் கல்லவோ? ஆசையும் வெறுப்பும் அற்ற உங்களுக்கு இவ்விஷயத்தில் கவலையென்ன?

குசேலர்.—(கையமர்த்தி) இதென்ன பெரிமசுத்தம்? (சற்றுக் கவனிக்கிறார். அடுத்த தெரு பிராமணர்கள் வசிக்குமிடமோ? வேதகோஷம் மிகுதியாயிருக்கிறதே.

சுவேதன்.—ஆமாம், இந்தக் கோபுரத்தைத் தாண்டி உள்ளே நுழைந்தால் வேதியர் வாழும் வீதிக்குப் போகலாம்.

குசேலர்.—(பிராமணத் தெருவுக்கு வந்ததும்) நல்லது நல்லது; நகரத்தில் இருக்கும் பிராமணர்கள் ஆசாரங்களில் குறைந்திருப்பார்கள் என்று கேள்விப் பட்டிருக்கிறேன். அது முற்றிலும் உண்மையல்லவென்று இப்போது தைரியமாய்ச் சொல்லுவேன். இங்கே காணப்படும் வேதியச் சிறுவர்கள் பட்டாடையும் முஞ்சிகாறும மான்தோலுமே தமக்கு ஆடையாகவும் ஆபரணமாகவும் கொண்டிருப்பதே மேற்குறித்ததற்குச் சாக்ஷியாக நிற்கும். அவர்களது வாக்கு எவ்வளவு ஸ்பஷ்டமாக வேத மந்திரங்களை உச்சரிக்கின்றன பாருங்கள்.

சுதேவன்.—நல்ல சுபாவமுடையார் எங்கே சென்றாலும் அவரது கண்களுக்கு நல்ல நடத்தைகளேதாம் தோன்றும்.

குசேலர்.—அப்படியல்ல. ‘இலங்கையில் பிராமணர்கள் வேதத்திலும் யாகத்திலும் திருந்தமுள்ளவராக

விருந்தாலும் ஆசாரங்களில் குறைந்திருக்கின்றார் கள்' என்று வான்மீகிபகவான் சொல்லிமுடித் தார். அது போலில்லாமல், படிப்பும் நடத்தை யும் ஒத்திருப்பதில் சந்தோஷமடைய வேண்டு மல்லவா? ஆசாரம்தானே முதலாவது தருமம். ஸ்ரீ கண்ணபிரான் இருந்தருளும் நகரல்லவா?

சுவேதன்.—ஆமாம். கண்ணபிரானது வாஸத்தையு டையதாகவும், அவரைக் காண்பதற்கு வரும் தங்களைப் போன்ற ஸாதுக்களுடைய வரவினால் நல்ல பழக்கமுடையதாகவும் இருத்தலால் இங் கிருப்பவர்களுக்குக் கெட்ட ஒழுக்கம் எங்கிருந்து வரும்?

குசேலர்.—அது மாத்திரமா? நல்ல ஒழுக்கமானது அவர்களது குடிப்பிறப்பை யுணர்த்துவதல்லாமல் உயர்த்தவும் செய்யுமல்லவா?

சுதேவன்.—(அரச வீதிக்கு வந்தபின்) ஸ்வாமி! இந்த வீதியே ராஜவீதியாகும். இத்தெருவுதான் நமது அருள்வள்ளலாகும் காயாம்பூ வண்ணனது அரண் மனையை அடக்கியுள்ளது.

குசேலர்.—வாஸ்தவமே. இதுவே பரமபதமுமாகும். (ஒரு வீட்டின் தெருக்கவரில் எழுதப் பட்டிருக் கும் சித்திரங்களைப் பார்க்கிறார்.) ஐயா! இங்கே எழுதப்பட்டிருக்கும் சித்திரங்கள் எனக்குக் கண்ணபிரானைக் காட்டுகின்றனவே அஃதென்?

சுவேதன்.—இந்தச் சித்திரங்களெல்லாம் அந்தப் பெருமானது திருவிளையாடல்களைக் குறிப்பதற்கு என்றே எழுதப்பட்டுள்ளன. நன்றாய்ப் பழகிய சித்திரக்காரனால் எழுதப்பட்டவைகள்.

குசேலர்.—சிநேகிதர்களே! சிறப்புடைய இந்த நகர் வளத்தைப் பார்த்தவுடனே, பலகாவதவழிகள் நடந்த இளைப்பும் பறந்தது. பசியும் போய் ஒழிந்தது. நாவில் ஜலமும் ஊறுகின்றது.

சுதேவன்.—ஸ்வாமி! கருமத்திலே கண்ணாயிருப்பவர்க்கு அது முடிந்தவுடன், தாம் பட்டவருத்தங்கள் எல்லாம் தோன்றுவன்றே; வயாவும் வருத்தமும் மடிமிசைக் குழந்தையைக் கண்டவுடன் தாய்க்கு ஒழிந்து விடுகின்றனல்லவோ? இஃது அவரவர் மனத்துநித்த ஆசையைக் காட்டுகிறது.

குசேலர்.—சிநேகிதத்திற் சிறந்தவர்களே! பேராற்றல் கொண்டவர்க்கும் துணையில்லாமற்போனால் காரியம் முடியாது. எனக்கு உங்கள் துணையில்லாமலிருந்தால், இந்தப்பேறு கிடைத்திராதென்று உறுதியாய்ச் சொல்லுவேன். அதனால் உங்களை ஆசாரியராகக் கொள்வதற்கும் உடம்படுகிறேன்.

(கை கூப்புகிறார்.)

சுவேதன்.—(தானுங் கைகூப்பி) ஸ்வாமி! இஃதென்ன எங்களைப் பாவத்துக்குள்ளாக்குகிறீர்கள்? நாங்கள் தங்களது சிஷ்யர்களாகவிருக்கும்போது, இப்

படிக்குத் தாங்கள் சொன்னால் எங்களுக்கு இழிவைத் தாராதோ? (சுவேதனைப் பார்த்து) நண்ப! இவர் கண்ணன் பக்தியிற் பித்துக்கொண்டவர். உள்ளே புகுந்து அதிசங்களைக் காணும்போதெல்லாம் நம்மை வணங்குவார்போல் இருக்கிறது. ஆதலால் நமக்குப் பாவம் வந்து சேராதிருப்பதற்காக நாமே இவரை விட்டு விலகுதல் நல்லது. நமது ஸல்லாபத்தோடு இவரைக் கோவிலுக்குச் சமீபமாகவும் கொண்டுவந்து விட்டோம். இனிமேல் இவர் எளிதாகப் போவர்.

சுவேதன்.—ஆமாம். அதுவே சூழ்ச்சி. யாதொரு வேலையுமில்லாமல் அரண்மனைக்குள் போதலுங் கூடாது. விலகிப்போவதே நலமாகும். (குசேலரைப் பார்த்து) மாதவரே! நாங்கள் பிராமண வீதியில் குடியிருப்பவர்கள். உங்களை இந்த அரண்மனை வாயிலில் கொண்டுவந்து விடுவதற்காகவேதான் இதுவரையில் வந்தோம். இதுதான் அரண்மனை வாயில். உள்ளே நுழைந்தால் நம் பெருமானைக் காணலாகும். உங்களுக்குத் தவறாமல் காட்சி தந்தருள்வார். உள்ளன்பிலாதவர் குபேரனாகவிருந்தாலும் தரிசனம் கொடுக்கமாட்டார்.

குசேலர்.—(மறுத்துச் சொல்லமுடியாமல்) நல்லது. அப்படியே செய்யுங்கள். தங்களுக்கு நான் தந்த வருத்தங்களுக்கு என்னை மன்னிக்கவேண்

டும். உலகத்தில் ஒருவலா வருத்திந்தான் மற்றொருவர் சுகப்படவேண்டியிருக்கிறது.

சுவேதன்.—வேலையில்லாதவர் அரண்மனைக்குள்ளே போவதுகூடாது. போனால். சட்டத்துக்கு விரோதமாதலால், தண்டிக்கப்படுவாரகள். கூடியிருந்து இதுவரையில் நாங்கள் அடைந்துவந்த நல்ல ஸல்லாபத்தை யிழக்க நேர்கின்றதே என்று வருந்துகிறோம்.

குசேலர்.—குணவான்களே! கிருபையிருக்கவேண்டும். "ஒருநாட்பழகினும் பெரியோர் கேண்மை, யிருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே" என்னும் பெரியவர் வாய்மொழிகளுக்கு நீங்கள் நல்ல உதாரணமானீர்கள். 'பேயோடு பழகுறினும் பிரிவு அரிது' என்று உலகத்தார் சொல்வர். நல்ல தாயைப் போன்றவர்களோடு குளிரக் குலவிய நான் பிரிவதற்கு வருந்துகிறேன்.

சுவேதன்.—'துன்னிக் கலந்தாரைக் கைவிடுதல் விலங்கிற்கும் அரிது' என்பது மெய்ம்மொழி; அதனை நன்றாய் அறிந்திருந்தும் மனிதராகிய நாங்களும் கற்பக விருக்ஷத்தைப் போன்ற தங்களை விட்டுப் பிரியும்படியான சமயமாயிற்று இது.

குசேலர்.—பன்னிப் பேசுவதிற் பயனில்லை. இனிமேல் எதிர்ப்பட்ட இடங்களிலாவது நேசத்தைக் காண்பித்தலே தருமம்.

சுதேவன்.—ஸ்வாமி! என்றும் அருள் மாருமல் எங்களிடத்தில் பிரியமிருக்கவேண்டும். போய் வருகிறோம்.

குசேலர்.—அப்படியே போய்வரவேண்டும்.

(அவர்கள் செல்கிருர்கள்.)

(அவர்கள் கண்மறைவாய்ப் போனவுடன் தமக்குள்) இவர்களுடைய நட்புத்தான் இருந்தபடியென்ன! என்னேடுபேசினவையெல்லாம் பொருளாழமுடையனவாயிருந்தனவே யல்லாமல், வெறுஞ் சொற்களாகவிருக்கவில்லை. நல்ல ஒழுக்கமுடையவர்கள். அடடா! பெருங் கூட்டம் வருகிறதே, எப்படி உள்ளே போவேன்? ஆனல் வருங்கூட்டம் ஒரு அரசனது கூட்டம்போலிருக்கிறது. அவர்களில் நானும் ஒருவனுக உள்ளே போவதே நல்லது. (என்று அக்கூட்டத்தோடு போய்க் கண்ணனது கோயிலின் உட்புறவாயிலுக்குச் சமீபத்தில் வந்து சேர்ந்தார்.) இந்த இடத்தைக் கடந்து போகப்பட்டவர் ஒருவரையும் காணேமே. இங்கே யாரும் போகக் கூடாதுபோலிருக்கிறது. அதோ! இரண்டு காவலர்கள் நிற்கிருர்கள். என்னைவிடுவார்களோ? விடமாட்டார்கள்போலிருக்கிறது. அதோ சிலரை உள்ளேவிடுகிருர்களே. ஆமாம். அவர்கள் நல்ல வஸ்திரங்களும் உயர்ந்த ஆபரணங்களும்

அணிந்திருக்கிறார்கள். அரசர்கள் போலிருக்கிறது. அவர்களை விடச்சொல்லிக் கண்ணன் உத்தரவும் ஆகியிருக்கலாம். கந்தலை யுடுத்துவந்திருக்கும் என்னை உள்ளே விடுவது அஸாத்யம்தான். ஆனால், அவர்கள் முகத்தின் தேஜஸைப் பார்த்தால் நல்லவர் போலத் தோன்றுகிறது. எனது எண்ணத்தைச் சொல்லிக் கேட்டால் அவசியம் விடுவார்கள் போலும் இருக்கிறது. போய்க்கேட்கட்டுமா? மனம் கலங்குகிறதே. எல்லாவற்றுக்கும் கண்ணன் இருக்கிறார். போய்க் கேட்கிறேன்.

(மனந்துணிந்து அருகே போகிறார்.)



## நான்காமங்கம்—இரண்டாங்காட்சி.

——:o)(ː)(o:——

காலம்—மாலை; இடம்—கோயிலின் வாயில்.

(குசேலரும் துவாரபாலகரும்.)

குசேலர்.—கண்ணனுக்கு அடியவரே! நல்ல வினையைச் செய்திருத்தலால் பாவந் தொலைத்த மாதவரும், செய்ய பூங்கமலத்தோனும், மற்றைத் தேவரும் கண்ணற்கரிய புகழ்பெற்றவரானீர்கள். உங்களைக் காணுந்தோறும் கண்ணனைக் கண்டதுபோலச் சந்தோஷங் கொண்டேன். ஏனெனின், ஸ்ரீயப் பதியான நாராயணனை நித்திய சேவை செய்யப் பாக்கியம் பெற்றவராதலால்.

துந்திலன்.—ஓய்! நீர் ஆருங்காணும்? சும்மா படிக்கிறீமே. ஆசார வாசல்லே ஒம்ம அளுக்கு வேட்டியெ கட்டிக்கினு சும்மா அளக்கிறீம்.

குசேலர்.—செல்வரே! எளியேன் பிராமணர் குலத்து உதித்தேன்.

துன்முகன்.—அட! இதேது; இவரேயிங்கவிட்டுட்டுமே! எசமான் கண்டா தலைக்கல்லவரும். போய்யா அங்கிட்டு. இங்ஙனே பிச்சை போடமாட்டாக.

குசேலர்.—அப்பா! நான் பிச்சைக்கு வரவில்லை; கடல் வண்ணனைக்காணவந்தேன்.

துந்திலன்.—ஐயா! பாப்பாரச்சாமி! இங்ஙனே பாருங்க ஆராச்சி இப்படி வேட்டியோடே இருக்கிறுர்களான்னு. அல்லாட்டி உள்ளேதான் போருவுளா அப்படிப்போனாலும் ராசாக்க அல்ல போறது.

குசேலர்.—அப்படியல்ல. கண்ணன் யாவரும் கண்ணற்கெளியவன். இப்படி யாருக்கும் அருள் செய்யவென்றே இப்பூமியில் உதித்துள்ளாரவரென்பர். ஆதலால் அவரைக் காண மனங்கொண்டவர் அவரைக்கண்டு மணங்கொண்டவரேயாவர்.

துன்முகன்.—அட! என்னயா!! போன்னு சும்மாப் போவியா, சும்மா பளக்கப்பட்ட மாதிரி என்னென்னமோ சொல்றே. இங்கிருந்து தொலேச்சு எங்களுக்குத் தண்டம் வைக்கவா?

குசேலர்.—அப்பா! நீ சொல்லும் மாதிரி எம்பிரான் கண்ணன் எனக்குப் பழக்கமும் உள்ளவர். நாங்களிருவரும் சிறுபிராயத்தில் கூடிப் படித்திருக்கிறோம்.

துந்திலன்—ஐய! பெரியவுகளாயிருந்து ஒரு புரோசனமும் கெடைக்காத விசயத்துக்கு இப்படிப்பொய்யுஞ் சொல்லலாமா? வாண்டாம், நாங்கள் உள்ளற அனுப்பமாட்டோம், போங்க.

குசேலர்.—ஐய! அப்படிச் சொல்லப்படாது. இந்தப் பயனைப் பெறுவதற்காகப் படக்கூடாத கஷ்டம்

களையெல்லாம் பட்டு வந்து சேர்ந்திருக்கிறேன். நீங்கள் இப்படிச் சொல்லி என்னை விலக்கினால் நான் உய்ய வழியற்றுப் போவேன். உங்களுக்குத் தோஷம் வந்துசேரும்.

துன்முகன்.—சரிதான் போய்யா! போகக்கூடாதுன்னு பல்லைக் காட்டுறீம். தோசமாம் பாவமாம்; தோசமும் பாவமும் எங்களை என்னபண்ணும்? எங்க வேலையை நாங்க செய்யணும்.

துசேலர்.—(தனக்குள்) இவன் உண்மையைத்தான் சொல்லுகிறான். இவன் வேலை தக்கவரை யுள்ளே விடுவதுதானே. (வெளியில்) காவலரே! என்னைக் கண்ணனிடம் சேர்ப்பித்தால் அவர் உங்களைப் பெருமைப் படுத்துவரேயன்றிக் கோபித்துக் கொள்ளமாட்டார். பிராமணனாகிய என் வார்த்தையை யுண்மையென்று எண்ணி என்மீது தயவு செய்யுங்கள்.

துந்திலன்,—சாமி! எசமான் பேட்டிக்குப் போறவங்க ராசாவா இருக்கோணும், அல்லாட்டித் தக்க பெரிய மனுசாளா பெரபுக்களா இருக்கோணும். அப்படியில்லாதவுகளே விடச்சொல்லி யெங்களுக்கு உத்தரவில்லை.

துன்முகன்.—அட எஞ்சாமி! நல்ல பளபளான்னு நகையும் மறுக்க துணியும் போட்டுட்டு வராவுளே

பெரிய பெரிய ராசாக்க, அவுகயின்னும்பின்னும் கத்தியும் கேடயுமாவாராக. எசமான்பேட்டி கெடக்கல்லேனு காத்துக்கிட்டிருக்காக. இவரு எசமானைப் பாக்கணுமாம். உள்ற விட்டேனு மாம். வேட்டியைப் பாரு. பதினாயிரம் மடிப்பு மடிச்சுக் கட்டிகிட்டாலும் வெளக்கு வச்சாப்புலே எல்லாந் தெரியுது. ஒடம்புலே நரம்பு எண்ணிப் பார்க்கலாம்போல் இருக்கு. இவரு அரண்மனைக் குள்ளே போகணுமாம்.

துந்திலன்.—சாமி! இங்கே போறவுக இப்படி வரமாட்டாக. அவுகளுக்கு தேருங்குதிரையும் ஆனையும் ஆளும் வேணும். கையிலே கடகமும் காதிலே குண்டலமும் வெரலுலே மோதிரமும் மாருலே ஆரமும் பட்டுப்பட்டாச் சேலையும்வேணும். அவுக நடந்து வரமாட்டாக. வாகனத்துலே வருவாக. இங்கிட்டும் அங்கிட்டும் கையைக் கூப்பிக்கிட்டு ஆளுங்க வருவாக. அப்படிவந்தா நாங்க மரியாதி யோட வணங்கி நின்னு வழிவிடுவோம். அப்படி யல்லாட்ட பொடனியபுடிச்சுத்தான் தள்ளுவோம். நீங்க பாப்பாரச்சாமியாச்சே என்னுத்தான் பாக்கறம். நாங்க என்னசேவோம் சாமி! எங்களுக்கு உத்தரவு அப்படி. இல்லாட்டி என்ன எங்க வரும்படியே நீங்க ஏதாகிலும் வாங்கிக்கிடறகளா? அதில்லே. விடுன்னு உத்தரவானாச் சரிதான்.

குசேலர்.—நீ சொல்வது சரிதான். இதுவரையிலும் அப்படித்தான். இனிமேலும் அப்படியே நடக்க வேண்டும். ஆனால் என்னுடன் நட்புக்கொண்ட வராதலால் அப்படியுங்களைக் கோபிக்கமாட்டார்.

நன்முகன்.—சாமி! பொய் சொல்லாதிங்க. ஒங்களையும் எசமானையும்பார்த்தால் மண்ணாங்கட்டிக்கும் மலைக்கும் உள்ள வித்தியாசமில்லையா? தெரிஞ்சும் நீங்க இப்படி வரக்கூடாது. நேசம் நேசம் எங்கிறிகளே? ஒங்க எடத்துலே நேசம் நிச்சயமானா இதுவரைக்கும் ஒரு ஒலைச்சுருளானா அனுப்பியிருக்காகளா.

நந்திலன்.—சாமி! ஒருவேளை ஒங்ககூடப் படிச்சிருக்கலாம். ஆனாலும் பணக்காரருக்குப் பணக்காரர் நேசந்தான் எப்பவும் வெளக்கும். ஏளை யுங்க சிநேகம் வெளக்காது. நல்லாப்படிச்சிருந்தாலும் பணம் இல்லாப்போனால் ராசா சபைக்கு ஒதவாது. ஒன்னும் படிப்பு இல்லாதபோனாலும் பணமிருந்தாப் பெரியவுங்கதானே.

குசேலர்.—அப்பனே! இல்லை, இல்லை. அப்படிக் கண்ணனுக்கு மறதியிருக்கமாட்டாது. நாங்கள் படித்துக் கொண்டிருந்த காலத்திலே அக்கண்ணன் எனக்குத் தனமளிப்பதாகவும் இந்நகரில் வரும்படியாகவும் கட்டளையிட்டிருந்தார். அதனால் இப்போது நான் வந்தேன்.

துந்திலன்.—சாமி பெரியவுகளே! நீங்க என்னத்துக்கு பொய் சொல்லப் போறீங்க? அப்படிச் சொல்ல மாட்டீங்க. ஆனாப் பணக்காரங்களுக்கு இந்த நெனவு இருக்காது சாமி. அதிலேயும் இவுக ராசா காரியமே எப்பவும் சரியாயிருக்குமே.

துன்முகன்.—ஏன்? நம்ப எசமான் இந்தப் பாப்பாரச் சாமியோடே' படிக்கிறபோது, அந்தநாள்பளக்கத் துக்காக அப்படிச் சொல்லியிருப்பாக. இந்த நாள் பளக்கமில்லாதுபோக ஒண்ணும் நெனைச்சி ருக்கமாட்டாக. இல்லாட்டி அவுகளுக்கு நெனவு இருக்திச்சுன்னா ஒரு ஓலையாவது ஆளாவது அனுப்பினாங்களா நம்ப சாமிக்கு. இல்லே பாரு.

குசேலர்.—அப்பா! கண்ணன் அப்படி நினைக்கமாட்டா ரென்றெண்ணித்தான் இவ்வளவுதூரம் நடந்து வந்தேன். என்னுடைய ஆசை இப்படி யலையச் சொல்லியது.

துந்திலன்.—ஆமாம். அவுகளுக்கு நெனவிருந்தா அப் படி ஒங்களே சும்மாப் போகச் சொல்லமாட்டாக' நெனவிருக்கோணுமே.

குசேலர்.—அதற்காகத்தான், என்னை உள்ளே விட்டு விட்டானல் நான் அவரை நேரில் தரிசித்தபோது எல்லாம் பழகினது போலாய்விடும். கொஞ்சம் தயவு செய்யுங்கள்.

துந்திலன்.—சாமி இதோ பாருங்க, எத்தினி ராசா மாருங்க பத்திபத்தியா எசமான்களப்பாக்கக் குத்திக்கிட்டும் கின்னுக்கிட்டும் அலஞ்சிகிட்டும் இந்தப்படி நல்ல பணக்காரங்களெல்லாம் போறத்துக்கே கூடாதபோது நீங்க போகமுடியுமா ஒங்கக் கந்தத்துணியோடே? நாங்க எப்படி உள்ற விடறது. நாங்க விடமாட்டோம்.

துன்முகன்.—சாமி! ஆனு ஒரு காரியம் பண்ணுங்க எங்காலும் போயி நல்லதுணி கட்டிகிட்டு வாங்க. நாங்க விட்டுடறோம். அப்பறம் ஒங்க சாமர்த்தியம்.

குசேலர்.—அப்பா! நான் நல்ல துணிக்கு எங்கே போவேன்? எனக்கு இங்கே யார் இருக்கிறார்கள்? என் ஊர் வெகு தூரத்திலிருக்கிறதே! நீங்கள் சொல்வது என்னுல் எப்படி முடியும்?

துன்முகன்.—என் சாமி! நீங்கத்தான் பாப்பாரச்சாமியாச்சே. அந்தோ இருக்காங்களே ராசாக்க, அவுகளைக்கேட்டா குடுப்பாக. கேளுங்களே.

குசேலர்.—(ஒன்றுந்தோன்றுமல் பிரமித்துத் தமக்குள்)

35. மின்செய்த மதாணி யாம்முத் தாமமாம் விளங்கு பட்டாம்
பொன்செய்த வூர்தி யாமிப் போதியாம் பெறுவ தெங்கே
நன்செய லெம்மு தாதை நாளினுங் கேட்ட தின்று (நீதே
லென்செய்வா மென்ன தொன்றையியற்றுத லென்னும்

இந்த நகைகளுக்கு நான் இப்போது எங்கே போவேன்? ஆதலால் ஊருக்குத் திரும்புவதே நலம. இவ்வளவுக்கும் எனது கந்தைகளை நன்ருய்த் தோய்த்துத்தான் உடுத்தியிருக்கிறேன். இது ராஜசலபைக்கு உதவாதுதான். நம்மால் முடியாதசெயலுக்கு எட்டிப்பார்த்துக் கொட்டாவி விடுவது தகுதியல்ல. இன்னும் நமது கந்தையில் பொதிந்திருக்கிற அவலைப்பார்த்தாராகில், எனது மானம் இதனுடன் நில்லாது. என்னைப் பித்துக் கொண்டவனென்றே சொல்லித் துரத்துவார்கள். ஆமாம் பெண்புத்தி கேட்பானொருவன் பித்துக் கொண்டவன்தானே. என்னவோ அப்பொழுது பரிதாபத்தால் அவள் சொன்னவைக்கு இரங்கி இத்தொழிலில் இறங்கினேன்.

(என்று இருதலைக் கொள்ளியுள் எறும்புபோலத் தவித்துக்கொண்டிருந்தார்.)

[ஜயவிஜயர்கள் வருதல்.]

ஜயன்.—விஜயா! அதோ காண். ஒரு பெரியவர் வந்திருக்கிறார் அந்தமஹானைக் காவலர்கள் உள்ளேவிடச் சம்மதிக்கவில்லை போலிருக்கிறது.

விஜயன்.—அண்ணு! அவர்வந்து வெகுநேரம் ஆயிற்று. அவர் சாதுவாக நமக்குத்தோன்றினாலும் அந்தப் பயல்களுக்கு அந்த அறிவேது? வெகு

நாழிகையாக அப்பெரியவரோடு வாதிக்கிறார்கள். அது மாத்திரமன்றி முதலில் அவரை வாய்க்கு வந்தபடியெல்லாம் தூஷித்து ஏளனமுஞ் செய்து விட்டார்கள். நான் அதுமுதல் கவனித்துக் கொண்டிருக்கிறேன்.

ஜயன்.—அடடா! கெடுத்துவிட்டாயே காரியத்தை. முன்னமே தெரிந்திருந்தால் என்னிடம் சொல்லி யிருக்கக்கூடாதா? பெரியவர்களை ஒருவர் தூஷிக்க நாம் பார்த்திருப்பதும் கேட்டிருப்பதும் தோஷ மாகுமே. ஐயோ! பாவம்!! அவர் என்ன நினைத் திருப்பார் மனத்தில்.

விஜயன்.—என்னநினைத்திருப்பார்? அவர்கள்சொன்ன சொல்லினால் வீட்டுக்குத் திரும்புவதே நலமென்று ஆலோசித்துக் கொண்டிருக்கிறார்.

ஜயன்.—ஆனால் விரைந்துபோவோம் வா. பெரியவர் கள் நமது கண்ணபிரானைக் காணவந்து அது முடியாமல் மனம் மறுகிப்போனால், அது கண்ண னுக்கு இழிவானபெயரையல்லவாதரும்? அதிலும் இவர் மகா உத்தமரென்று முகத்தோற்றத்தால் தெரிகிறது. தோஷம் நமக்கு ஸம்பவிக்கும். (என்று விரைந்துபோய் வீட்டுக்குப் போகும் எண்ணத்தோடு திரும்பின பெரியவரையழைத்து, எதிரிற்சென்று தண்டனிட்டு) ஸ்வாமி! தாம்யார்? எங்கு வந்தீர்கள்? ஏன் திரும்பிவிட்டீர்கள்?

குசேலர்.—அப்பா! அவந்தி தேசத்தைச் சேர்ந்த ஒரு பிராமணன். கண்ணனைக் காணவேண்டுமென்று வந்தேன். வாயிலைக் கடந்து போகமுடியாததால், பல காவதங்கட்கப்பால் உள்ள என் ஊருக்குத் திரும்புகிறேன். கண்ணனுடைய கிருபை நமக்கு இருந்திருக்குமானால் இந்தவாயிலையும் கடக்கலாம். நான் செய்திருந்த பாவங்கள் இன்னும் கழிய வில்லையாகையால் என்பேரில், அவர்க்குக் கிருபை தோன்றவில்லை. அதனால் திரும்புகிறேன்.

ஜயன்.—ஸ்வாமி! இந்த மாதிரியான பெரியோர்கட்கு எங்கண்ணபிரான் சன்னிதியில் யாதொரு தடையும் கிடையாது- அந்தக்காவலர்கள் அறிவிலிகள். தம்மையுணராது ஏதேனும் பேசியிருப்பார்கள். அவற்றைச் சிறியோர் செய்த பிழையாயெண்ண வேண்டும். தாம் போகக் கூடாது.

விஜயன்.—ஸ்வாமி! இந்த வாயிலைக் கடந்து வாருங்கள் அதோ ஆஸனமிருக்கிறது வீற்றிருங்கள். நாங்கள் கண்ணனிடம் தெரிவித்துஉத்தரவு பெற்றுக்கொண்டு வருகிறோம்.

குசேலர்.—அப்பா! கந்தையுடன் கூடிய என்னை உள்ளே விடுவதால் உங்கள் வேலைக்கு ஏதாகிலும் கெடுதி நேராமல் இருக்கவேண்டுமே.

ஜயன்.—எங்கள்வேலைக்கு எப்போதும் கெடுதிநேராது நாங்கள் கண்ணபிரானது உள்ளக்கருத்தை நன்

ளாய் அறிந்தவர்கள். பெரியோர்களை ஆதரிக்க வென்றே எங்களைக் கண்ணபிரான் நியமித்துளார். ஆதலால், அவ்விஷயத்தில் தேவரீருக்கு ஸந்தேஹம் வேண்டாம். (என்று சொல்லிக்காவலர்களைப் பார்த்து. ஏ! அற்பர்களே! எவ்வளவுதான் நீரில் ஊறிக் கிடந்தாலும் ஈரம்பெறாக் கருங்கல்போல, நங்கண்ணபிரானிடம் இவ்வளவு நாள் பழகியும் ஸாதுக்கள் இன்னாரென்று அறிந்துகொள்ளத் தெரியாதிருக்கிறீர்கள். உலகத்தில் உயர்ந்த மனிதப்பிறவியிற் சிறந்தகுலம் பிராமணகுலமே. அவர்கள் தங்கள் தபோ மகிமையால் நான்முகனாலும் செய்யற்கரிய விஷயங்களை நாடி நன்கு செய்வார்கள். அவர்களை எந்தவிதத்திலும் நாம் கௌரவப் படுத்தவேண்டும். இதுவே நங்கண்ணனது திருவுள்ளக்கருத்து. அவர்களிலும் இம்மஹானே நல்ல தத்துவதரிசி. (மெய்ஞ்ஞானி) வேஷம்போட்டுக்கொண்டுவருகின்ற மெய்ஞ்ஞானிகளும் உண்டு அவர்கள் தங்கள் தலைமயிரைப் போக்கிக்கொண்டு பாயினால வஸ்திரம் தரித்துக் கொண்டு பல கற்றவர்போலப் பிரஸங்கம் செய்து உண்மை ஞானியர்கள்போலப் பேசி, நல்ல கருமஞ் செய்பவர்களைக் கண்டு, இக்கருமங்கள் எதற்கு? விட்டுவிடு என்பார்கள். பொன் முதலிய பொருளிடத்து ஆசையற்றவர்போலப் பேசிக் கடைசியில் அவர்கள் விரும்பிக்கொடுக்க வாங்கிச்

சுகிப்பர். பக்குவமடைந்தவர்போல் பலபேர்க்கு உபதேசஞ்செய்து தாம் அந்தவழி நில்லார்கள். ஏனெனில், தமக்கு அது நியமமில்லை யென்பார்கள். இப்படி அநேக குணங்களால் அவர்களது வேஷத்தை யறிந்துவிடலாம். ஆனால் மெய்ஞ்ஞானிகளோ காளமேகமுதிர்ந்து மலைகள் கொறுங்கிக் கரைந்தாலும், எழுகடலும் நிலை பெயர்ந்தாலுங் கொஞ்சமேனும் மனங்கலங்காது, எல்லாம் ஈசன் செயலென்றிருப்பார்கள். பலபட அவரைப் புகழ்ந்து பேசினாலும் அல்லது இழிந்தவரைப் போல மிகவும் இகழ்ந்து பேசினாலும் விருப்பு வெறுப்பு என்பது ஒன்றும் இல்லாதிருப்பார்கள். எது கிடைத்தாலும் அதனை அதிதியரோடு அன்றைக்கே செலவழித்துவிடுவார்கள். நாளைக்கு வேண்டுமென்று சேமித்துவைக்கமாட்டார்கள். பொய்ஞ்ஞானிகளைப்போல,

36. விண்ணிடையே குதன்மீளப் பாதலத்திற் புகன்மீட்டுப்
புவியின் மேவல்

அண்ணியபல் பரகாயப் பிரவேசஞ் செயலுறையு
மவ்வி டத்தே

யெண்ணியவெ லாம்வரச்செய் திடன்முதற்செய் சித்தி
யென்றும் வேண்டார் [களை

புண்ணியபா தகமிலார் பெருமையிலார் சிறுமையிலார்
பொய்மெய் யில்லார்.

பக்தி பாவசத்தால் ஆடுவார்கள். உன்மத்தர்கள் போலத் திரிவார்கள். சிரிப்பார்கள் காரணமின்றி. கைகொட்டிப் பாடுவார்கள். ஓரிடத்திருக்க மனம் பற்ருர்கள். சுற்றிக் கூடியிருப்பவரிடத் திற் கூடமாட்டார்கள். கந்தையல்லாமல் வேறு உடை உடுத்துக்கொள்ள மனங்கொள்ளமாட்டார் கள். அவர்களுடைய புகழையெடுத்துச் சொல் லல் சேடனுக்கும் அரிது. பகுத்தறிவில்லாமல் இருந்து சாதுக்களை வாய்கொண்டமட்டும இழித் துப்பேசி அவர்கள் சாபத்துக்கு ஆளாவது அன் றியில் கமது கண்ணபிரானது கண்ணியத்தையும் கெடுத்துவிடுகிறீர்கள். இவர் நல்ல ஞானி. சற் கருமத்தினின்றும் வழுவாதவர். கண்ணனிடம் கனத்தஅன்புகொண்டவர். ஒன்றை நாடியவரைக் காணவந்தவரல்லர். கண்ணனை எப்படியாவது தரிசித்துப்போகவேண்டுமென்பதே இவர் துணிபு. இவரை நீங்கள் இகழ்ந்து பேசிவிட்டீர்கள். அந் தத்தோஷம் நீங்க எது செய்தாலும் இயலாது. இவரை வணங்கி இவரது ஆசிர்வாதத்தைப் பெறுதலில்லாமல் வேறு வழியில்லை. இவரை வணங்குங்கள். இதற்குமுன் இருந்த பாவமும் ஒழியும்.

(அவர்கள் அப்படியே வணங்கினர்கள். குசேலரும் அவர்களையாசிர்வதிக்க, ஜயவிஜயர் பெரியவரை யழைத்துக் கொண்டுபோய், ஓராஸனத்தில் உட்

காரவைத்துவிட்டுத் தாங்கள் கண்ணனிடம் செல்வதாக உத்தேசித்திருந்ததால், அவரது நாமதேயந் தெரிந்துகொள்ள வேண்டுமென்று கேட்டுத் தெரிந்துகொண்டு, அவரைவணங்கி உத்தரவு பெற்றுக்கொண்டு, வெகு விரைவாகப் பலவாயில்களையுங்கடந்து கண்ணபிரானைச் சபையில்தேடிக் காணுமல், அந்தப்புரத்தில் இருப்பதாகத்தெரிந்து அங்குச் சென்று தமதுவரவை அங்குள்ள பெண் காவலர்களுக்குத் தெரிவித்தனர்.)



## நான்காமங்கம்—மூன்றாங்காட்சி.

---

காலம்—மாலை; இடம்—துவாரகையில் அந்தப்புரம்.

(கண்ணனும் மனைவியரும்.)

ருக்மிணி.—என்? நாதா! படுத்துக் கொள்ளுகிறது தானே. எழுந்திருப்பானேன்?

கண்ணன்.—வெகு நாழிகையாய்விட்டதே படுத்துக் கொண்டு; உங்கள் இருவர்தொடைகளுக்கும் வலியுண்டாகுமோ என்றுதான் ஐயங்கொள்ளுகிறேன்.

ருக்மிணி.—நன்றாய்ச் சொன்னீர்கள்! இதுதான் முதல் தரமோ தாங்கள் என்மடிமீது தலைவைத்துப் படுத்தது? இத்தனை நாள்களினும் நோவுண்டாகாமல் இன்று உண்டாக நியாயம் என்னவோ? அன்றியும் காமினிகட்குத் தம்கணவர் செயல் ஒவ்வொன்றும் இன்பத்தையல்லவோ ஊட்டும்? ஒருகால் திருவடிகளின் பாரத்தால் பாமையின் தொடைகள் நொந்தனவோ என்னவோ?

பாமை.—ஆமாம், ருக்மிணிக்குப்பேச விஷயமில்லாமல் போனால் பாமா மண்டையைத்தான் உருட்டுவது வழக்கம். ஏனடி அக்கா! இப்படி எப்போதும் என்னைக் காய்ந்துகொண்டே இருக்கிறாய்? நீ பெரியவளாயிருக்கிறாயென்றும், உன்னை நான்

வணங்கவேண்டுமென்றும் நாதன் எனக்குச் சொன்ன சொல்லை வேதமாகக் கொண்டு நடந்து வருகிறேன். உலகத்தில் ஒருவரிடத்தில் இன்னொருவர் வணங்கியிருக்கக்கூடாது. அப்படி வணங்கினால், வணங்கினவரை வணங்கப்படுபவர் இழிவாகச் சொல்லுவார்கள். இஃது என்னிடத்தும் நேர்ந்தது.

ருக்மிணி.—அடி, அம்மா! பிடித்துக்கொண்டுவிடாதே! நான் விளையாட்டுக்குச் சொன்னேனேயொழிய வேறில்லை.

பாமை.—நான் உன்னைப் பிடித்துக் கொள்வதற்குப் பேயா? நன்றாய்ச் சொல்கிறாய் ஒவ்வொரு சொல்லும் ஆணித்தரமா?

கண்ணன்.—சகிகாள்! என்ன இப்படி வாதிடுகிறீர்கள்? ஸஹோதரிகளாக இருந்து வாழுங்கள் என்று முன்னமே சொல்லியிருக்கிறேனே?

பாமை.—நீங்கள்தாம் கேட்டுக்கொண்டே இருக்கிறீர்களே. நாதா! யார்மேல் குற்றம் இப்போது?

கண்ணன்.—இப்போது ருக்மிணி மேல்தான் குற்றம். ஆனால் அதனையவள் விளையாட்டாகச் சொன்னாளேயன்றி வேறில்லை. ஆதலால் இது குற்றமுமாகாது.

பாமை.—ஆமாம், பிரபு! உங்களுக்கு அவளிடத்தில் பயம்போலிருக்கிறது. அதனால்தான் உண்மை சொல்லாமல் இரண்டுங் கெட்டதாய்ச் சொல்லு கிறீர்கள்.

ருக்மிணி.—இல்லேடியம்மா! நான் சொன்னது பிழை தான் மன்னித்துக்கொள்.

பாமை.—நீ விளையாட்டிற்குஞ் சொல்லியிருக்கலாம், அக்கா!. என்றாலும் என் தேகம் வார்த்தையைப் பொறுக்கமாட்டேனென்கிறது. அன்றியும் நீயே இப்போது, காமினிகட்குக் கணவர் செய்யும் ஒவ்வொன்றும் இன்பமாகத்தான் இருக்குமென்று சொல்லினை. அந்தப் படியே பார். உனது தொடைக்கு வலியுண்டாகாமல் எனக்கு வருத்த முண்டாகுமென்று நீசொன்னதால், கண்ணனிடத்தில் அன்பு உனக்குத்தானென்றும் எனக்கு இல்லையென்றும் ஏற்படுகிறதல்லவா? அப்படி யெண்ணித்தான் எனக்குக் கோபம் வந்தது. இந்த எண்ணம் தோன்றாவிடில் இச்சொல் விளையாட்டாகத்தான் எண்ணப்பட்டிருக்கும்.

ருக்மிணி.—அடியம்மா! இஃதேது சொற்சோர்வுகளையும் குற்றமாகக்கொள்ளுகிறாய். இனியுன்னிடம் விளையாட்டாகவும் பேசக்கூடாது போலிருக்கிறதே.

கண்ணன்.—சரி! இவ்வார்த்தையை இம்மட்டோடே நிறுத்துங்கள்.

பாமை.—கிறுத்திவிட்டோம், உங்கட்கு ஏதாவது அவசரகாரியமுண்டா என்ன? இங்கு நிலைகொள்ளவும் கவனிக்கவும் மாட்டேனென்கிறதே உங்கள் மனம். என்னகாரணம்?

கண்ணன்.—ஆமாம். அஃது எனக்கே தோன்றவில்லை. மனம் அலைந்து கொண்டுதானிருக்கிறது.

ருக்மிணி.—யாரேனும் பக்தர்கள் வாயிலில் காத்துக் கொண்டிருப்பார்கள். அதனால்தான் இந்த மனக் கலக்கம்.

கண்ணன்.—ருக்மிணி சொன்னது சரிதான். இல்லாவிடில் நிஷ்காரணமாக மனம் கலக்கமுறாது. அதிலும் நல்ல பக்தராகவிருக்கவேண்டும். என்மனம் அவ்வளவு துடிக்கின்றது.

பாமை.—இவையெல்லாம் வீண்எண்ணங்கள். எவளோ ஒருத்தியை மனத்தில் நினைந்துக் கொண்டிருக்கிறீர்கள். அச்சிறுக்கி உங்கள் மனத்தில் இருந்து கொண்டு குடைகிறாள். அதை மறைத்து இப்படிச் சொல்லுகிறீர்கள்.

கண்ணன்—பாமா! உனக்குமாத்திரம் ஆலோசனை தனியாகவே தோன்றுகிறது. ருக்மிணி அப்படி எண்ணினாளா? பார்த்தையா!

பாமை.—ஆமாம். நான் மனத்திலிருப்பதைக் கொட்டி விடுகிறேன். இவள் அப்படியில்லாமல் மனத்தி

லேயே வைத்துக்கொண்டு ஏதாகிலும் உங்களுக்கு இனிக்கச் சொல்லுகிறுள்.

கண்ணன்.—இதுதான் உத்தமப்பெண்களின் இயற்கை. கணவன் மனத்தை எப்போதும் எவ்விடத்தும் எக்காரியத்திலும் எச்சொல்லிலும் களிக்கச் செய்ய வேண்டுமேயல்லாது சுளிக்கப்பேசலாமோ? இன்னும் சிறிது நாழிகையிற்பார், யார் சொன்னது உண்மையாகிறதென்று. உத்தமப் பெண்களுக்குத்தான் கணவர்களின் அபிப்பிராயம் சொல்லாமலே விளங்கும். நான் சொல்வதிற் கோபம் கொள்ளாதே. நீயும் அப்படிப் பழக வேண்டும்.

பாமை.—நீங்கள் என்னசொன்னுலும் எனக்குக்கோபம் உண்டாகாது. நாதா! மற்ருெருத்தி சொன்னுல் தான் என்னையறியாமல் வந்துவிடுகிறது. அதனையும் இனி வரவொட்டாமல் தடுத்துவிடவேண்டுவதுதான்.

கண்ணன்.—அப்போது நீ புத்திசாலிதான். உத்தமியுந்தான்.

லக்ஷ்மணை.—அஃதென்ன ப்ரபு! நீங்கள் அடிக்கப்போனவிடத்துங்கூட உங்களது எதிரிகள் உங்களது முகத்தைக் கண்டவுடன் உங்களை வாழ்த்துகிறுர்கள்! உங்களிடம் என்னவோ மாயமிருக்கிறது.

ருக்மிணி.—இதுதான் நம்மண்ணனுக்கு மூற்றவரினும் பெருமையை யுண்டுபண்ணுகிறது.

பாமை.—கோதித்த நெஞ்சுடைய எனக்கும் இவரில்லாதவேளையில் உண்டாகும் கோபங்களெல்லாம் இவர் முகத்லைதக் கண்டவுடன் பறந்தோடுகின்றனவே. மற்றவர்களுக்கு எப்படியிராது? புருஷரும் பார்த்து ஆசைகொள்ளும் மேனியல்லவா இது!

லக்ஷணை.—நாதா! எதிரே நிலைக்கண்ணாடியில் தோன்றும் உருவங்களில் எந்த உருவத்தில் உங்களுக்கு ஆசை மிகுதி, சொல்லுங்கள்.

கண்ணன்.—ஏன் அப்படிக் கேட்கிறாய்?

லக்ஷணை.—இல்லை. இதற்குப் பதில் சொல்லுங்களேன். பிறகு நான் காரணம் சொல்கிறேன்.

கண்ணன்.—அது கூடாது, காரணத்தைச் சொன்னால் தான்.

லக்ஷணை.—என்னபிரபு! சொல்லுங்கள் என்றால் வாதாடுகிறீர்களே!! சொல்லமாட்டீர்களா! என்கண்ணே? சொல்லமாட்டீர்களா!! (முத்தமிடுகிறாள்.)

கண்ணன்.—உன் காரணத்தை நான் தெரிந்துகொண்டேன்.

லக்ஷணை.—அஃதென்ன?

கண்ணன்.—என்னவா? என் அழகை என்னையே பார்க்கச் சொல்லுகிறாய்.

லக்ஷ்மணை.—அதன் அபிப்பிராயமென்ன?

கண்ணன்.—என்னவா? சொல்லட்டுமா?

லக்ஷ்மணை.—சொல்லுங்கள் பார்ப்போம்!

கண்ணன்.—அதுவா? இருக்கட்டும் (பாமாவைக் கேட்போம்) பாமா! நீ சொல். இதன்காரணம் என்னவாக இருக்கும்?

பாமை.—இதிலென்னகாரணமிருக்கிறது? யாருங்கண்டு மயங்கும் உங்கள் திவ்ய வடிவில் நீங்களே மயங்குகிறீர்களா இல்லையா என்று அறிவதுதான்.

கண்ணன்.—பேஷ். என் லக்ஷணு! சரிதானே?

லக்ஷ்மணை.—உண்மையாய் நான் அதற்குத்தான் பார்க்கச்சொன்னேன். எவ்விதம் இவளுக்குத் தெரிந்தது?

பாமை.—இதேதடி! சமயமறிந்துகூட அபிப்பிராயத்தைச் சொல்லமுடியாதா?

லக்ஷ்மணை.—என்னவோ அம்மா! நான் இவ்வளவுசூக்ஷ்மமாக அறியமாட்டேன்.

கண்ணன்.—பத்திரா! கையில் என்னவைத்துக்கொண்டிருக்கிறாய்?

பத்திரை.—நாதா! ஒரு நாழிகையாக வெள்ளிலையை வைத்துக்கொண்டு நின்றுகொண்டிருக்கிறேனே. நீங்கள் கவனித்தீர்களா? என்னிடத்தில் உங்களுக்குண்டான பிரியத்தின் அளவு இவ்வளவு தான்.

கண்ணன்.—நான் இங்கே பேச்சுப் பராக்கில் இருந்து விட்டேன். கோபித்துக் கொள்ளாதே; சமீபத்தில்வா. அதனைக்கொடு.

(வாங்கி வாயிலிட்டுக்கொள்கிறார்.)

பத்திரை.—நாதா! இஃதென்ன! ஒரு வெற்றிலை போட்டுக்கொள்வதற்குள் உதடு இப்படிச் சிவந்துவிடுகிறதே.

லக்ஷ்மணை.—அடி பத்திரா! சற்றுமுன் உன்னிடத்தில் கண்ணனுக்குப் பிரியமில்லையென்று குறைபட்டாயே? உன்னிடத்தில் தனக்குள்ள பிரேமையை நன்றாய்க் காண்பித்திருக்கிறார். உதடு சிவந்தால் உன்னபிரியம் வெளியாகுமாமே?

பாமை.—ஆமாம். அதில் சேர்ந்திருக்கும் வஸ்துக்கள் அளவோடிருந்தால் தானாகச் சிவப்புநிறம் தோன்றாதா?

பத்திரை.—இருக்கட்டும், அம்மா! எங்களிடத்துக் கண்ணனுக்குப் பிரேமை கிடையாது, உன்னிடத்திலேயே முழுப்பிரியமும்.

கண்ணன்.—பத்திரா! கோபங்கொள்ளாதே. அவள் தான் எடுத்துப்பேசுபவள் என்று உங்களுக்கெல்லாம் தெரியுமே. எனக்கு எல்லாரிடத்திலும் பிரியம்தான். ஒருவராவது எனக்குத் தள்ளுபடியிடையாது. கிட்டவா! (என்று அணைத்து முத்தம் கொடுத்தார்.) காளிந்தி! விசிறினது போதும் நிறுத்திவிட்டுக் கிட்ட உட்கார்.

[ஜாம்பவதி விரைந்து வருகிறாள்.]

கண்ணன்.—கண்ணே, ஜாம்பவதி! என்ன அவசரம்?

ஜாம்பவதி.—ஒன்றுமில்லை. அறையில் உட்கார்ந்து உங்கள் உருவத்தை எழுதிக்கொண்டே இருந்தேன். அந்த உருவத்தை முடித்து விட்டுக் கண்ணுக்குக் கருவிழியைவைத்தேன். அஃதென்ன காதா! அப்படி நான் உருவத்துக்குக் கண் திறந்த முதல், உங்கள் முகத்தில் உண்மையாய்த் தோன்றும் புன் முறுவல் அவ்வுருவத்தில் தோன்றுகிறது? பாருங்கள். (என்று உருவப்படத்தைக் காண்பித்தாள்.) பார்த்தீர்களா! இந்தப் புன்சிரிப்புத் தோன்றினவுடன் எனக்கு மனத்தில் ஆசைமேலிட ஓடிவந்தேன்- எங்கே ஒருமுத்தம் கொடுங்கள்.

(முத்தங்கொள்கிறாள்.)

ருக்மிணி:—எங்கேடி! இங்கே கொண்டுவா சித்திரத்தைப் பார்ப்போம். (வாங்குகிறாள்.)

லக்ஷணை:—எங்கேயக்கா! நானும் பார்க்கிறேன். (வாங்கிப் பார்த்து விட்டு) நன்றாய் இருக்கிறது.

ஜாம்பவதி:—(ருக்மிணியைப் பார்த்து) என் அக்கா! உங்களுக்கு என்ன தோன்றுகிறது? அழகாக அமைந்திருக்கிறதோ?

ருக்மிணி.—அடி என் கண்ணே! நன்றாய் எழுதியிருக்கிறாய். இது மனத்திலுள்ள ஆர்வத்தை நன்றாய்த் தெரிவிக்கிறது பார்! அவரையே நன்றாய் மனத்தில் உருப்படுத்திக் கொண்டிருந்தாலல்லாமல், நன்றாய் எழுதத்தெரிந்திருந்தாலும், முறுவல் தோன்றும்படி எழுதமுடியாது.

பத்திரை.—புன்சிரிப்பு மாத்திரம் தான் தோன்றுகிறதோ சித்திரத்தில்? நன்றாய்ப் பாருங்கள். அக்கா! நமது நாதனிடத்தில் தோன்றும் மயக்கிற பார்வையும் அதிலிருக்கிறது பாருங்கள்! எழுதினது அருமைதான். எழுதுவதும் அதிசயந்தான்.

காளிந்தி.—போதும். சித்திரத்தைக் கொண்டு வாருங்கள். சும்மா பார்த்துக் கொண்டே இருந்தால் எழுதினவளுக்கும் உருவத்துக்கும் திருஷ்டி விழும்.

(உருப்படத்தைப் பறித்துக்கொண்டு போய்விடுகிறாள்.)

பாமை.—ஆமாம்! மஹாபடம்! அதிசயச் சித்திரம்! இதைவிட மேலாக எழுதலாம். என்னவோ அதி

கப் பெருமைப் படுத்துகிறீர்களே அ[illegible]. இந்த எழுத்து எழுதக் கூடாதா என்ன?

பத்திரா.—உனக்குத்தான் எல்லாரிடத்திலும் பொறுமை யுண்டே, அதை யிப்போது காண்பித்து விட்டாய். எழுதத் தெரியாதவளுக்குத் தான் வாய் அதிகம்.

கண்ணன்.—பத்திரா அவள் சுபாவம் தெரிந்திருந்தும் ஏன் இப்படிப் பேசுகிறாய். (ஜாம்பவதியைப்பார்த்து) என்ன ஜாம்பவதி! அவள் சொன்னதில் வருத்தமோ?

ஜாம்பவதி. நாதா! என்னை யார் என்ன சொன்னாலும் எனக்கு மனம் கலங்காது. என்ன வேண்டு மென்றாலும் சொல்லட்டும்

(இரண்டு மூன்று காவல் பெண்கள் ஓடிவந்து வணங்குகிறார்கள்.)

கண்ணன்.—என்ன விஷயம்? ஏன் அவசரம்?

காவல் பெண்கள்.—வாயிலில் ஜயவிஜயர் வந்து நிற்கிறார்கள். ஏதோ அவசர காரியம் போலிருக்கிறது, சமயந்தானா என்று கேட்டார்கள்

கண்ணன்.—சமயந்தான். சிக்கிரம் வரச்சொல்லுங்கள். (ருக்மிணியும் சத்திய பாமையும் தவிர மற்றவர்கள் கண்ணனுக்குப் பின்புறத்தில் நின்றுகொண்டார்கள். கண்ணன் எழுந்து உட்கார்ந்துகொண்டார்.)

ஜயவிஜயர்கள்.—(ஓடிவந்து வணங்கி)

37. மாமறைத் தலைவா போற்றி மதிக்குல விளக்கே போற்றி
காமரிக் திரன்முன் ஞான்றோர் காண்பதற் கரியாய் போற்றி
தாமரைக் கண்ணா போற்றி தரியலரேறே போற்றி
தோமறு செல்வம் வாய்ந்த துவாரநகர் இறைவா போற்றி.

சுவாமி! ஆதிநாள் தம்மோடு அரிய கலைகள் படித்தவராம். நமக்கு மிக்க நட்பாளராம். கந்தை தான் உடுத்துக் கொண்டிருக்கிறார். மறையவர் குலத்துதித்தவர். உத்தம குணமுள்ளவர். வற்றி எலும்பு எழுந்த தேகமுடையவர். குசேலரென்ற பெயருடையோர் அவருக்குத் தங்கள் மீதுள்ள பக்தியை எங்களால் அளவிட்டுச் சொல்ல முடியாது. தங்களைக் காணவேண்டுமென்று வாயிலில் வெகுநாழிகையாகக் காத்துக் கொண்டிருக்கிறார்.

கண்ணன்.—(சரேலென்று கீழே குதித்து) குசேலரா! ஏன் இவ்வளவு தாமதம்? எங்கிருக்கிறார் அவர்? அவருக்கு எங்கும் தடைகூடாதே. சீக்கிரம் வாருங்கள். நானே போய் அழைத்து வருகிறேன்.

ஜயவிஜயர்கள்.—சுவாமி! சற்றுப் பொறுங்கள். நாங்கள் அழைத்து விரைவில் வருகிறோம்.

கண்ணன்:—ஆனால் சீக்கிரம் அழைத்து வாருங்கள். அழைத்து வாருங்கள். அழைத்து வாருங்கள் சீக்கிரம். (செல்லுகிறார்கள்.)



# ஐந்தாமங்கம்—முதற்காட்சி.

---

காலம்—இரவு; இடம்—அந்தப்புரம்.

(கண்ணனும் குசேலரும்.)

(துவாரபாலகரோடு வரும் குசேலரைக் கண்ணுற்ற கண்ணன் அணையை யுடைத்துக்கொண்டு எழுகின்ற அறு போலத் தமது ஆஸநம் விட்டுச் சரேலெனச் சென்று எதிர் கொண்டழைத்துவந்து ஓராஸநத்திருத்தி முகமன்விசாரிக்கத் தொடங்கினர்.)

கண்ணன்.—மாதவத்தீர்! உமது நல்லவரவால் இந்தச் சிறுகுடில் பாக்கியமடைந்தது. நான் இதுவரையும் செய்துவந்த தர்மங்களும் பலனடைந்தன. இந்தக்காலமும் நல்லசிறப்பையடைந்தது.

குசேலர்.—(கண்ணன் தம்மை எதிர்கொண்டழைத்து வந்து மிகுந்த உபசாரங்களைச் செய்துகொண்டு ஆஸநத்துட்காரவைத்து நல்வரவு கூறி முகமன் விசாரித்த பேரதிசயத்தால் ஒன்றுந்தோன்றாதவராகப் பதிலுரைக்காது இருந்தனர்.)

கண்ணன்.—(தமது பத்தினியைப்பார்த்து) ருக்மிணி! என், பெரியவர்க்குச் செய்யவேண்டிய உபசாரங்களுக்குக்கூட எனது கட்டளை வேண்டுமோ? அவரவர்க்கு இஷ்டப்பட்டபடி உபசாரங்களைச் செய்யலாம். இவரையன்றித் தெய்வம் வேறில்லை.

தர்மம் வேறில்லை. சாது வேறொருவரில்லை. இந்த நாளே நன்னாளாகும். இதுவே நல்வேளையாகும். அவரவர் தமது தமது அபீஷ்டங்களைக் கோரிக் கொண்டு இப்பெரியவரைப் பணிந்தாலும் உப சரித்தாலும் அவ்வவ்வபிப்பிராயம் தக்கபடி முடி யும். தடைப்படாது. இது நிச்சயம்.

ருக்மிணி.—நாதா! எங்களுக்கெல்லாம் இப்பெரிய வரை யுபசரிப்பதில் ஆசை மிகுதிதான். இது வரைத்தமது ஆணையை எதிர்பார்த்திருந்தோம் இனிமேல் எங்களுக்கு மிகுதியாகச் சொல்லவேண் டுவதில்லை. (என்று சொல்லி, மற்றைப் பெண் மணிகளைப்பார்த்து) பாமா! நீதான் ஸ்வாமிக்குக் கைலாகு கொடுத்து அழைத்துப் போகவேண்டும். லக்ஷணா! நீ இம்மஹானுக்குத் தைலக்காப்பு இட வேண்டும். காளிந்தி! நீதான் இவர்க்குச் சிகைக் காய் தேய்த்துக் கோதாற்றவேண்டும்.

பத்திரை.—ஏன், ருக்மிணி அக்கா! நான் வெகு விரை வில் நல்லனவாகிய பண்டங்களைச் சமைத்துவைக் கலாமோ?

ருக்மிணி.—தக்கவேலைதான். மித்ர விந்தையையும் ஜாம்பவதியையும் கூடவைத்துக்கொண்டு அறு சுவைப்பதார்த்தங்களோடு அடிசிலையும் அமைக்க வேண்டும். செல்லுங்கள். (செல்கின்றனர்.)

கண்ணன்.—ருக்மிணி! ருக்மிணி!! நான் மிகுதியாக இருக்கிறேன். இந்தக் கைங்கரியத்தில் எனக்குக் கொஞ்சமாவது சம்பந்தம் இல்லாமற்போனால் நான் உய்வதற்கு மார்க்கம் கிடையாமற்போகும். ஆதலால் எனக்கேதேனும் கட்டளையிடு.

ருக்மிணி.—பிரபு! தாம் இங்கு இருந்துகொண்டு நாங்கள் செய்வதனுள் யாதொரு தோஷமும் பிறக்கா வண்ணம் பார்த்துக்கொண்டிருங்கள்.

கண்ணன்.—வேண்டாம்; அது கைங்கர்யமாகாது. நான் அவருடைய பாதஸேவை செய்துகொண்டிருப்பேன். இதுதான் எனக்கு விருப்பம்.

ருக்மிணி.—சரி. தங்களது அபிப்பிராயப்படியே.

சித்திரலேகை.—அம்மா! வெந்நீர் ஆயத்தமாகிவிட்டதே.

ருக்மிணி.—லக்ஷணை! ஏன் இன்னும் தைலம் கொணரவில்லை? (இதற்குள் லக்ஷணையும் பரிமளதைலத்துடன் வந்து சேர்ந்தனள்.) பாமா! ஏன் தாமதம்? ஸ்வாமிக்குக் கைலாகு கொடுத்து அழைத்துச் செல்வாய் மஞ்சனவறைக்கு.

பாமா.—ஆஹா. இதோ செல்கிறேன். ஸ்வாமி! கிருபை செய்யவேண்டும்.

குசேலர்.—(ஒன்றுக்கொன்றுநு கண்ணனையும் மற்று முள்ள பெண்ணரசிகளையும் பார்த்து விழிக்கிறார்.)

கண்ணன்.—பெருந்தவத்தீர்! ஏழைகள் விருப்பத்தைப் பூர்த்தி பண்ணவேண்டுமென்பது பெரியோர்க்குப் பெருமையான கொள்கையேயாகும். ஆகையால் தாமதிக்காமல் எழுந்திருங்கள். (என்றுத் தமது இருகரங்களாலும் பெரியவரது கைகளைப் பிடித்துத் தூக்கிவிட்டு அக்கைகளைப் பாமாவினிடம் ஒப்புவித்துவிட்டு, குசேலர் கொண்டுவந்திருந்த கந்தைத்துணிகளை மெதுவாகக் கழற்றிக்கொண்டார். அப்போது அதனுள் ஏதோ முடிந்திருந்ததையும் தெரிந்துகொண்டார்.)

பாமா.—ஸ்வாமி! இப்படி வாருங்கள். பார்த்து வரவேண்டும்.

கண்ணன்.—குசேலரே! ஏழை நானும் எனது இம்மனைவிகளும் ஏதாகிலும் குற்றம் செய்திருந்தாலும் மன்னித்து எங்களை யனுக்கிரகிக்கவேண்டும்.

குசேலர்.—(தமக்குள்) என்ன விந்தையிது! முற்றத் துறந்த முனிவர்களாலும் தரிசிக்கக்கிட்டாத இம் முழுமுதல்வன் நமக்கு இவ்வண்ணம் காட்சி கொடுத்தருளியதுமன்றி ஒவ்வாத காரியத்தையும் செய்கின்றாரே. அவர் செய்யும் காரியங்கட்குத் தோஷம் சொல்லக்கூடுமோ? அதுவும் கூடாதே. வேண்டாம் என்று மறுப்போமென்றால் நாவெழமாட்டேனென்கிறது. பயமாயிருக்கிறது. மனைவிகளை எவ்விதமாகப் பழக்கிவைத்

திருக்கிறார். என்ன சொல்லத் துணிந்தது என் மனம்! இப்பெண்தெய்வங்கட்கு இவை இயற்கைக் குணங்களல்லவோ? இந்தப் பெருங்காரியங்கள் பழக்கத்தினால் மாத்திரம் இப்படிப் பண்பாகத் தோன்று. இவை இவர்கட்கு இயற்கைக் குணங்களேயாகும். நாம் என்ன நினைந்துவந்தோம். இங்கு நடப்பவை என்ன! என்ன ஆச்சரியமிது!! கண்ணா! இதுவும் ஒரு லீலையா உனக்கு? இந்த உபசாரங்களை ஏற்கும் நானல்லவோ தோஷக்ரஸ்தனுகிறேன். ஆம், என்னசெய்யலாம்? மறுக்க முடியாவிடில், நாராயணன்பேரில் பாரத்தைப் போட்டுவிட்டுப் பொறுத்துக்கொண்டிருக்கவேண்டியதுதான்.

(மவுனத்தோடு செல்கின்றனர்.)

பாமா.—ஸ்வாமி! இதோ இவ்வாஸநத்தில் வீற்றிருங்கள் லக்ஷ்ணு! என்? உன் காரியம் ஆகலாமே.

லக்ஷ்மணை.—இதோ! எல்லாம் ஆயத்தந்தான். (தைல மிடுகிருள்) இப்படிக் கண்ணன் தாமுங்கூட இருந்து அவர்க்குத் தைலக்காப்பு இடுவித்து அனுஷ்டானத்தின்பின் போஜனமும் செய்வித்து, முன்போல் சத்தியபாமை கைலாகு கொடுக்க, அந்தப்புரத்துக்கழைத்துவந்து ஆஸநத்திருத்தி, திருவடி சேவை செய்துகொண்டிருக்கிறார். அப்போது மற்றுள்ள ஸ்திரீகள் ஆலவட்டம் பரிமாற

வும் விசிறி விசவும், ருக்மிணியும் பாமாதேவியும் அருகு நின்று அடைக்காய் மடித்துக்கொடுக்கிறார்கள். குசேலர் தாம் சேவை செய்யவந்த அற்புதத் திருமேனியை யிடைவிடாது தரிசித்துத் தரிசித்துத் தேனும் பாலும் செய்யுங்கன்னலமுது மொத்துக்கண்ணனிடத்துத் தம்மனத்தைக்கலக்கச்செய்து உலகவாழ்க்கையை மறந்து தம்மையும் மறந்திருந்தார்.

கண்ணன்.—(அவர் மெய்மறந்திருப்பதை யறிந்து சிறிதுநேரம்ஸல்லாபித்து அவர்க்கு உலகவாஸனையைத் திரும்பவும் நினைவுறுத்தவெண்ணிக் கீழிருந்து பாதசேவை செய்வதை விடுத்து, எழுந்து ஸமாஸநத்தில் உட்கார்ந்து) ஸ்வாமி, குசேலரே! நடந்துவந்தஇளைப்பினால் நித்திரைவருகின்றதோ? குசலங்கூட வினவாது இருக்கின்றேன். என்னைப்போல் அறிவிலியாருமில்லை. மன்னிக்கவேண்டும்.

குசேலர்.—பிரபு! தமது மனத்தை யறியாதார்க்குத்தான் இவ்வளவு உபசாரம் வேண்டும். அடியேனிடத்தில் இத்துணைச் சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டாமே. இப்பெரும் அபசாரத்தைத் தாங்க வகையுளேனல்லேன்.

கண்ணன்.—ஸ்வாமி! இதென்ன இப்படியுரைக்கின்றீர்கள்? நாங்கள் அன்புடன் செய்யும் உபசாரங்களை ஏற்றுக்கொள்ளாவிடின் தமக்குத் தோஷம் உண்

டாகுமேயன்றி, அதனையங்கீகரித்துக் கொண் டால் குற்றம் நிகழாது. இதில் கவலை வேண்டாம்.

குசேலர்.—தோஷமாவதென்ன? என் மனத்தில் தோன் றும் பயந்தான். தோஷம் வேறிருந்தாலும் அவற்றை நீக்கும் சக்தி இவ்விடத்தில் பூர்ணமா யிருக்கும்போது, அது இங்கு வந்தபின்னும் பிறக் குமோ? பயமும் அப்படியே ஆனால் எனக் குண்டான பயமோ தம்மிடத்தில் யான் வைத் திருக்கும் பக்தியால் தோன்றுவது.

கண்ணன்.—பெரியீர்! நட்பினரிடத்துத் தோன்றும் உபசாரங்களுக்கும் அபசாரங்களுக்கும் முறையே ஙபடமென்றும் தோஷமென்றும் வார்த்தைகள் நிகழக்கூடாது. எனெனில், ஆர்வமிகுதியால் அந் நட்பினர் தம்மை மறந்தே அவற்றைச் செய்வார். ஏ, மாதவ! இன்று தமது தரிசனத்தால் அடைந்த பேறு தேவருள்ளும் அரசருள்ளும் யாரடைந்தி ருக்கிறுர்கள்? தமது பால்யநேசத்தை இன்னும் மறந்திலன். தொன்மையான நட்பைககாட்டிலும் சிறந்தது வேறொன்றுண்டென்று நான் துணிய வில்லை. வேதம் முதலிய படித்து அதன்படி நடந்துவருபவராயினும் 'ஆத்மாநாத்ம விவேச னம்' அதாவது பகுத்தறிவு இல்லாதிருப்பரேல் அவர்களைத்தான் பேதையர் என்று உலகஞ் சொல்லும்.

குசேலர்.—ஆம். நட்பினிற் சிறந்ததொன்றில்லை. அந்நட்பும் பெரியாரிடத்தே சிறக்கும். என்னைப் போலுள்ளாரிடத்து அப்படியாகாது.

கண்ணன்.—பெரியார் என்ற பெயர் பணத்தாலும் உருவத்தாலும் அழகாலும் செல்வாக்காலும் வருவதன்று. குணத்தாலேயே மணம்பெறும். இந் நற்குணமில்லாதார் ஸன்யாஸியானாலும் வேஷதாரிகளேயாவர். பணமுடையாரெனினும் பிணம் போன்றவரேயாவர். உருவிருந்தும் மறுவுள்ளவரே. அழகிருந்தும் இல்லாதவரே.

குசேலர்—தாம் சொல்வது முற்றும் ஸம்மதமானதே.

கண்ணன்.—பெரியோரிடத்து நட்புக்கொண்டால்,

38. சமபம்வரி னிடித்துரைப்பார் நல்வழி செலச்செய்வா
ரிமையவர்த முலகுறவு மிருளுலகம் பகையுமா
யமைபவறி வுறுத்துவா ரந்தோறால் கற்றுணர்ந்த
கமையுடையார் நட்பெவர்க்குக் காண்கிடைத்த லரிதரிது.

சுவாமி! தேவரீரது தேவியர் நல்ல நீர்மையுடையவராயிற்றே; குடும்ப காலக்ஷேபங்கள் சரிவர நடந்தேறி வருகின்றதன்றோ? புத்திரர்களும் சௌக்கியந்தானே. ஒருவர்க்கு நல்ல மனைவி வாய்த்துவிடின் வறுமையென்பது ஒருகாலும் தோன்றாது. அம்மங்கையர்க்கரசியார் கணவர் சொற்படி நடப்பார். என்ன மிடிவரினும் எடுத்துரையார். சிறிதும் நாயகன்மீதுபழியுரைக்கார். இதனாலன்றோ,

39, இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதெ
னில்லவண் மாணாக் கடை.

40. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யுமழை.

என்ற பழமொழிகள் பெரியார் வாயில் நிலையுறுகின்றன. அதிதிபூஜைகளும், பகவத்யானமும், பெரியோர்சேவையும், உலகினர் வெறுப்பின்மையும், உற்றார் பொருமையின்மையும் நிகழவேண்டுமே, அவைகள் குறையிலாது நடக்கின்றனவன்றோ? பலபொருள்கள் தன்னைச் சூழவிருந்தாலும் சூரியகிரணத்தையே நோக்கியிருக்கும் நெருஞ்சிப்பூப்போல் எனக்கு இவ்வளவு போகங்கள் கிடைத்திருப்பினும் சிறுவயதில் உண்டான நட்பினால் தமது நினைவே எனக்கு எப்போதும். தம்மை என்றும் மனக்கண்ணால் தரிசித்துக் கொண்டே இருப்பேன். அந்நட்பின் பெருமையும், அதனால் நாம் அப்போது அநுபவித்த இன்பங்களும், பிரிந்த பின்னர்த் தாம் கற்பித்திருந்த புத்திமதிப்படி நான் நடந்துவந்ததனால் உண்டான பெருமையும், அதனால் தம்மைக் கணமேனும் மறக்காத தன்மையும், அதனால் எனக்குத் தோன்றும் தமது உருவெளித் தோற்றமும் இன்று நேரில் கண்டதுபோலவே இருந்தன. ஸ்வாமி! ஒருகால் நாம் சாந்திபினியாருடைய இல்லிற்காக விறகொடித்துவரச் சென்றிருந்தோமே,

நினைவிருக்கிறதா? என்ன அல்லல் அடைந்தோம்! அம்மழையிலும் குளிரிலும் காற்றிலும் அக்காட்டில் நிற்கவும் இடமில்லாமல் அன்றிரவெல்லாம் வருந்தினோமே! நினைவில் இருக்கிறதோ?

குசேலர்.—ஆஹா! அது மறக்குமா? மறுநாள் காலையில் நமது ஆசிரியருந் தேடிவந்து விட்டாரே. அவரைப்போல் பிரேமையும் நட்பும் பொருந்திய ஆசிரியர் உண்டோ? அடடா! நம்மை வீட்டுக்கழைத்துச் சென்று செய்த உபசாரங்கள் சொல்லில் அடங்குவனவா! எழுதித்தான் முடிவனவா! என்னபேரன்பு! பெருங்கருணை! அன்னவரை நினைக்கும்போதெல்லாம் என்னை மாணக்கனாகவே இன்றும் உணர்கிறேன்.

கண்ணன்.—அப்பெரியவருக்குத்தான் இணையேயில்லையென்று உலகத்தார் சொல்வரே. ஆனால், நான் அவர்க்கு மேலாகத்தான் தம்மைச் சொல்லிக்கொண்டிருப்பேன் எப்பொழுதும்.

குசேலர்.—அப்படிச் சொல்லலாகுமோ? அது அவரை நிந்தித்ததாகவன்றோ முடியும்?

கண்ணன்.—ஸ்வாமி! அஃதேன் அப்படிச்சொல்கிறீர்கள்? அது நிந்தையாகாது. சிறியதீபத்திலிருந்துதான்பெரிய திவர்த்திகள் பிறக்கின்றன. அதனால் தீபத்துக்கு இழிந்தபெயர் வராது. சிறந்த

பெயரே தோன்றும். தம்மைப்போல மாணவர் தமக்குக் கிடைத்திருந்ததைப்பற்றிப் பலமுறை அம்முனிவரே தமதுமனக்களிப்பை வெளியிட்ட துண்டன்றோ?

[என்று இப்படிப் பலபடப் பேசிக்கொண்டு வெகு நாழிகையானதால் அப்பெரியவரைச் சயனிக்கச் செய்து பின் இவரனைவரும் போஜனத்துக்குச் சென்றனர். குசேலரும் இந்திரபோகமாக மூன் றிரவு அங்கிருந்துவிட்டு நான்காம் நாளின் காலை யில் கண்ணனிடம் விடைபெற்றுக்கொண்டு பிரி வாற்றுமல் பிரிந்து ஊருக்குத் திரும்பினர். கண் ணனே வந்தவரைப் பலபட வுபசரித்தாரேயன்றி அவர் வேண்டிவந்த விஷயத்தைப்பற்றித் தாமும் கேட்காமல் அவரையும் சொல்லும்படி இடங் கொடாமல் மூன்றுநாளும் உபசரித்தே வீட்டுக்கு அனுப்பிவிட்டனர். குசேலர் இப்பெருஞ் ஸம்ப்ர மத்தால் தமது கந்தைகளையும் மறந்துவிட்டு உடுத் திருந்த நல்லுடைகளோடே திரும்பினர்.]



## ஐந்தாமங்கம்—இரண்டாங்காட்சி

காலம்—மாலை; இடம்—சத்தியபாமையின் அந்தப்புரம்.

(பெண்கள் கண்ணன் கபடத்தைச் சொல்லி ஏசிக் கொண்டிருக்கிறார்கள்.)

நீலவேணி.—ஏனடி? சித்திரலேகை! நமது கண்ண பிரான் செய்த பெருமோசத்தை யறிந்தாயா?

சித்திரலேகை.—என்ன அம்மா அடாத மோசத்தைச் செய்துவிட்டார்? நங்கண்ணன் யாரையும் எவ் விஷயத்திலும் மோசஞ் செய்யவேமாட்டார். வாயில் வந்தபடியெல்லாம் அறியாமல் பேசி விடாதே.

நீலவேணி.—மோசம் செய்யவா மாட்டாரென்கிறாய்? மோசமும் கபடமும் அவரிடத்தில் தானே தோன்றின. அவரைக் 'கபடநாடக சூத்ரதாரி' என்று அழைக்கிறார்களே உலகத்தார். அதனாலேயே யவரது இயற்கை வெளிப்படவில்லையா?

சித்திரலேகை.—அடி நீலா! சித்திரம் எழுதத்தெரிந் தால் பிம்பத்துக்குக் குறைவு தோன்றாமல் எழுது. சொல்லத்தெரிந்தால் அர்த்தம் தெரிந்து சொல்லு. வீணே வாய்மதங்கொண்டு வசையேற்றுக்கொள் ளாதே. கபடநாடக சூத்திரதாரி என்றால் கப டம் என்கிற மாயையை இவ்வுலகமாகிய சபையிலே

ஆடச் செய்கிறார் என்று பொருள் அவ்வாட்டத்தைப் பார்க்கிறவர் உலகினர் அவர் பெயராலேயே அவர் செய்வதெல்லாம் நாடகமேயொழிய உண்மையல்லவென்று நன்றாய் விளங்குகிறதே. ஏதோ சில காரணத்தால் விதிக்கு மாறாக அவர் செய்வாராகிலும் அதுமுடிவில் ஒரு நன்மையின் பொருட்டெனவேதோன்றும். அவர் யாருக்கும், அவருள்ளும் பெரும்பாலாகத் தம்மைநம்பினார்க்கு உதவியையே செய்வார். அப்படி உதவி செய்வதிலும்இரண்டு விதமுண்டு. ஒன்று, உதவியை வெளிப்படையாகச்செய்தல். மற்றொன்று, அபகாரம் செய்வதுபோல் உபகாரத்தைச்செய்தல் அவரது இந்த நல்ல இயற்கையை, அவருடைய கல்யாண குணங்களை நன்றாய் அனுபவித்தவர்கள் தாம் அறிவார்கள்.

நீலவேணி.—அஃதென்னவோ அம்மா! நேற்று வந்த பிராமணர், சிரிக்கச் சிரிக்கப் பேசிய இவர் சிங்காரப் பேச்சிலும். களிக்கக் களிக்கச் செய்த கபடச் செய்கையிலும் மயங்கி, வந்தகாரியமின்னதென்றுகூடச் சொல்லாமலே போய்விட்டாரே இப்படிப் போகவிடுத்தது இவர் பெருமைக்கு அழகாகுமோ?

சித்திரலேகை.—ஐயோ பைத்தியமே' இதற்காகவா இப்படி அவலாத்திட்டினை? வந்தவர் குசேலரல்லவா?

அவர் என்னவோ கேட்கவந்தார் என்கிறாயே. போடி போ! அவர் ஜிதேந்திரியர் அல்லரா? அவருக்கு ஒன்றில் விருப்பேது? மற்றொன்றில் வெறுப்பேது? எல்லாம் ஸமமே. அம்மஹான் ஸ்ரீ கண்ணபிரானைத் தரிசிக்கவந்தார். அது ஆகி விட்டது. சென்றுவிட்டார். அவருடையதேஜஸை நன்றாய்ப் பார்த்திருந்தாலே தெரிந்திருக்குமே. நன்றாய்ச் சொன்னாய் நாவடக்கமில்லாமல். இன்னொருதரம் இங்கிருந்துகொண்டு இப்படிச் சொல்லாதே. பாமாதேவிகாதில் விழுந்தால் கடுமையான தண்டனைக்கு ஆளாவாய்.

நீலவேணி.—உள்ளதைச் சொன்னால் யாவருக்குங் கோபந்தான் வரும். இச்சகவார்த்தை பேசிக் கொண்டிருக்க நான் உடன்பட்டவளல்லள் அம்மா.

சுவதனை.—என்னடி சித்திரலேகை! இத்தனைநேரம் அவளிடம் வாதிக்கிறாயே. அவள் கண்ணன்மேல் அபவாதஞ் சொல்வதற்கு அவ்விருவருக்கும் விரோதமா? நடந்ததைச் சொல்லுகிறாள். நீதான் ஆலோசித்துப்பார். ஒருவன் தனவானை நாடி வருவதெல்லாம் தனகுறை நீங்குமென்றேதான். சிலர் வாய்திறந்து கேட்பர். சிலமானிகள் அது செய்யார். தயாளரான செல்வவான் குறிப்பறிந்துதான் கொடுக்கவேண்டும். அப்படிக் குறிப்பறியுந்தன்மை நம்பிரானுக்கு இல்லையா?

செய்தவெல்லாம் வேஷந்தான் அம்மா. நீ என்ன வேண்டுமென்றாலுஞ் சொல்லிக்கொள்.

சுந்தரமுகி.—ஆமாம். அதிலென்ன பிழையிருக்கிறது? அன்று அரசர் எல்லாரும் காத்திருக்கச் செய்தேயும் அவர்களைப் பொருள் செய்யாமல் அந்தப் பிராமணர்க்குச் செய்த உபசாரத்தால் நாமே மயங்கினோமே·

41, தன்றிய வன்பிற் கட்டியணைந்தார் தொழுதிட்டார்
பொன்றிகழ் பள்ளி மீதமர் வித்தார் புகழ்ந்திட்டார்
ஒன்று மளித்திட் டாரலருதயத் தூன்றூர்க்குச்
சென்றிடு மென்றூர் நன்றிது வன்றோ சிற்றிடையே.

நீலவேணி.—ஆமாமடி. ஐயோ பாவம்! அந்த மாதவர் வசிப்பது அவந்தியாம். அவந்தியெங்கே துவாரகையெங்கே? இத்தனை தூரத்தையும் தமது மனத்திலிருந்த மிகுந்த ஆசையால் கடந்துவந்தவர்க்கு அவர் ஒன்றுமே வேண்டாதவராயினும் வந்த சிரமத்துக்காவது ஏதேனும் கொடுத்துதவ வேண்டாமா? அவர் திரும்பும்போது வழிக்கென்று வைத்திருந்த சிறு அவலையும் அபகரித்துத் தாமே புசித்துவிட்டாரே. இதுதான் பெருந்தன்மையோ?

சுவதனை.—பாவம்! பாவம்!! கண்ணனிடத்தில் சென்றிருக்கிறார் நமது கணவர்; வரும்போது தகுந்த செல்வத்துடன் வருவர் என்று மனைவியும், நல்ல

பரிசுகள் காணப்பெறுவோம் என்று மைந்தரும் மழைத்துளியை எதிர்பார்த்திருக்கும் சாதகப் பறவைபோலிருக்க, ஏழைபிராமணன் வெறுங் கையோடு தாமுடுத்த கந்தையையும் மறந்துபோய் என்ன பதில் உரைப்பரோ! அவர் மனைவியும் குழந்தைகளுங் கிருஷ்ணனை என்ன வசை கூறு வார்களோ?

சித்திரலேகை.—சுவதனு! வந்தவர் ஏழைதானென்று அவர் முகத்தாலும் உடுக்கையாலும் அறிந் தோமே நாமே; நமது பிரான் அறிந்திருக்கமாட் டாரா? நன்றாய் அறிந்திருப்பார். ஆனால் வந் தவர் என்ன எண்ணத்துடன்வந்தாரோ, அனுப்பி னவர் என்ன எண்ணி அனுப்பினரோ! உண்மை நன்றாய்த் தெரியாத நாம் வாயில் வந்தவற்றைப் பேசுவது உசிதமாகாது. பாமாதேவி வந்தவுடன் ஸந்தேஹம் தவிர்த்துக் கொள்ளலாம்; சற்றுப் பொறுங்கள்.

நீலவேணி.—தேவிவந்தவுடன்கேட்கத்தான்போகிறேன். எனக்கென்னவோ அம்மா அந்த வேதியரை அப் படி அனுப்பியது ஆற்றாமையாய்த்தான் இருக் கிறது.

சுந்தரமுகி.—என்ன ஸந்தேஹம் இதில் இருக்கிறது?

42. எத்துணைய செல்வமிகுத் திருந்தாலு மீந்துவந்த லிவர்பா லில்லை

மெத்தநய மொழிகளான் மயக்கியேயென்றும் வேளாராய்
விரைந்துபோனார்
பித்தருமா மறையவரு மிவருமகிழ்ந் தாறனுப்பிப்
பெயர்ந்து வந்தார்
கொத்தறமிக் கூட்டிருந்தென் னிராதொழிந்தா லென்
கூறுய் தோழி. (னென்று

சித்திரலேகை.—அந்தப் பிராமணர் ஒரு பொருளும் கேட்கவில்லையென்பது நமக்கு நன்றாய்த் தெரியும். என் அநுபவத்தால் 'கண்ணபிரான் தீனரக்ஷகர் என்றுதான் நான் துணிந்திருக்கிறேன். ஆனால் இவர் மாயம் வல்லவரம்மா! அம்மாயையையறிந்து சொல்லல் யோகிகளுக்கும் இயலாது; நாம் சொல் லுதல் சாத்தியமாகுமா?

(பாமாதேவி வருதல், யாவரும் எழுந்து வணங்கத் தனது ஆஸநத்தில் உட்கார்ந்து இவர்கள் குறிப்பறிந்து வினுதல்.)

பாமை.—சகிகாள்! சித்திரலேகா!! என்ன, யாருஞ் சிறுநகையோடிருக்கின்றீர்கள்? இங்கே நடந்த சம்பாஷணை என்ன? நான் அறியலாகுமோ?

சித்திரலேகை.—அம்மணி! தமக்கு அறிவிக்காத செய் தியும் எங்களிடத்திலுண்டோ? நடந்த ஸம்பா ஷணையைத் தங்கட்குத் தெரிவித்தேதான் எமது ஸந்தேஹங்களை நிவர்த்தி பண்ணிக் கொள்ளப் போகிறோம்.

சுவதனை.—தாயே! எல்லாம் நமது கண்ணபிரானைப் பற்றியதுதான்.

சத்தியபாமை.—அஃதென்ன? அவரைப்பற்றி நீங்கள் இப்போது பேசிக்கொண்டிருக்க என்ன ப்ரமேயம் வந்தது?

நீலவேணி.—நேற்று இரவு வரையிலும் இருந்துவிட்டு இன்று காலையில் ஊருக்குப் பயணப் பட்டாரே, அந்த வேதியரைப் பற்றித்தான் நடந்தது.

சுந்தரமுகி.—தாயே! அந்த ஏழைப் பிராமணர் எத்தனையோ நினைத்துவந்தும் ஒன்றும் கேளாதவராகச் சென்றனரே; அக்குறிப்பறிந்து நமது மஹாராஜரும் ஒன்றும் உதவவில்லையே யென்று தான் பேசிக்கொண்டிருந்தோம்.

பாமாதேவி.—நியாயந்தான். பார்ப்பவர்க்குக் கண்ணன் பிராமணர்க்கு ஒன்றும் உதவவில்லையே யென்று தான் தோற்றும். ஆனால், கண்ணபிரான் இயற்கை அதுவன்று. எச்செயலையும் பிறரறியா வண்ணம் நடத்தி முடிப்பதில் வல்லமையுடையவர் அக்குறிப்பு அவரிடம் நன்றாகப் பழகினவர்க்குத் தெரியும்.

நீலவேணி.—என்னம்மா! வந்தவர் குறிப்பறிந்துதான் ஒன்றும் கொடுக்கவில்லையே; அவர் வழிப்பசிக்கு என்று வைத்திருந்த அவலையுங்கூடவா,

43. பந்தனை யகன்றமேலோய் பற்பலநாட்குப்பின்பு
வந்தனை யெனக்கென் கொண்டு வந்தனை யதனையின்னே
தந்தனை யாகினன்று தருசுவைப் பக்கணத்தென்
சிந்தனை நின்றது.—

என்று சொல்லி வலுவிற் கேட்டு வாங்கித் தாமுண்டிடவேண்டும்?

பாமை.—(புன்னகையுடன்) அதில் தான் ஒரு மறைச்செய்தி நடந்திருக்கிறது. அந்தக் குறிப்பை நீங்கள் அறிந்தீர்களோ? அக்குறிப்பறியாத நீங்கள் அவரைக் குறிப்பறியாதவரென்று குறை கூறினீர்களே. இஃது அடாது.

சுவதனை.—அது பிழைதான். அந்த விப்பிரரிடத்தில் எங்களுக்கு இருக்கும் பக்தியால் ஏதேனும் உளறியிருக்கக் கூடும். அவற்றைப் பொறுக்க வேண்டும்.

பாமை.—அதைப்பற்றி எனக்கொரு கோபமாவது மனஸ்தாபமாவது இல்லை. இச்செய்தி எம்பிரானுக்குத் தெரியினும் புன்னகை கொள்வாரேயன்றி வேறில்லை.

சித்திரலேகை.—ஆயின், அந்த அவல் ஏற்றுக்கொண்ட போது தோன்றிய மறைச்செய்தி என்ன அம்மா? நாங்களறியலாகுமோ.

நீலவேணி.—நாம் அதனையறியாவிடின் நமது ஸந்தேஹம் ஒழிவது எப்படி?

சுந்தரமுகி.—நம்தேவி நமக்குத் தெரிவிக்காத விஷயங்களும் உண்டோ? பகருநிர்கள். எல்லாம் வெள்ளெனவிளங்கும்.

பாமை.—சித்திரலேகா! அன்று கண்ணன் அவல் உட்கொண்டபோது ருக்மிணி செய்ததென்ன? நீங்கவனித்திர்களோ?

சித்திரலேகை.—அதனையுட்கொள்ள வேண்டாமென்று தடுத்தார்கள!

பாமை.—அப்படித் தடுத்ததன் காரணம் என்ன? நீ சொல். சுந்திரமுகி!

சுந்தரமுகி.—அது ஒரு பாஷணமா? இதனைச் சாபபிட வேண்டாமென்பதுதான்.

பாமை.—சரியில்லை. நீலவேணி! அதன் கருத்து உனக்குத் தெரியுமா?

நீலவேணி.—சுந்தரமுகியைவிட நான்புத்திசாலிரியல்ல; ஆனாலும் எனது அபிப்பிராயத்தையும் தெரிவிக்கிறேன். அவர் வழிப்பசிக்கு வைத்திருந்ததைக் குறைக்கவேண்டாமென்பதாகவிருக்கும்.

பாமை.—இதுவும் சரியன்று; சுவதனா! உனக்குத் தெரியுமோ?

சுவதனை.—தாயே! அப்பண்டம் தேஹத்துக்கு ஒத்துக்கொள்ளாதென்று தடுத்திருக்கலாம்.

பாமை.—இதுவும் அல்ல, சித்திரலேகா! உன் அபிப் பிராயமென்ன?

சித்திரலேகை.—எனக்கு ஒன்றுந் தோன்றவில்லை. ஆயின், இதுவரை இவர்கள் சொல்லிவந்தவை யெல்லாம் சரியான அபிப்பிராயம் அல்ல என்று மாத்திரம் சொல்வேன். ஏனெனில், இவ்வற்ப மான அபிப்பிராயங்கள் அவ்விருவர் மனத்திலும் தோன்றக் கூடியவைகள் அல்ல, ஆனால்.——

பாமை.—ஆனால் என்ன?

சித்திரலேகை.—நங்கண்ணபிரான், இந்த அற்பமான ஆகாரத்தை ஏற்றுக் கொண்டாரென்றால், இதனைக் கொணர்ந்து தந்தவர்க்கு என்றுமில்லாத பெரும்பொருளும் உயர்பொருளும் அளிக்கத் தான் என்பது என் துணிவு; ஆயினும், அதன் விவரம் ஒன்றும் விளங்கவில்லை.

பாமை.—சகிகாள்! அதனைச்சொல்கிறேன் கேளுங்கள். (யாவரும் கவனமாகவிருக்கிறார்கள்.) நமது பிரா ணது கொள்கை, ஒருவர்க்கு ஒன்று உதவ இஷ்ட மிருப்பின், அவரிடத்திலிருந்து ஏதேனும் அற் பத்தைக்கிரஹிப்பதாகும். அஃது ஒருமுறையா னால் பூவுலகில் உயர்ந்தபதவியும் இருமுறையானால் தேவர்கள்பதவியும், மும்முறையானால் அழியாப் பதவியும் கிடைக்கும்.

சித்திரலேகை.—ஆயின், குசேலர் நற்பதவியையடையக் கூடாது என்பது ருகமிணியம்மாவின் அபிப்பி ராயமோ?

பாமை.—அதுவன்று அவளுடைய அபிப்பிராயம். அப் பதவிக்கு ஸுதாமர் (குசேலர்)ஏற்றவர்தாம். என் றாலும் இது ஸமயமில்லையென்றுதான் ஒரு தாத் தோடு நிறுத்திவிடும்படி ருக்மிணி தடுத்தாள்.

நீலவேணி.—இதனால் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. திண்ணைக்குத் தேள்கொட்ட மிடாவுக்கு விஷமே றுமோ?

பாமை.—மந்திரம்வல்லவன் ஸமர்த்தனுகியிருந்தால் அப் படியுந்தான் செய்வான். நங்கண்ணன் அறியாத மந்திரமும் உண்டோ? இவர் தாம் இச்சித்தபடி யெல்லாம் செய்து காட்ட வல்லவர். அப்படிச் செய்வதும் என்றும் அழியாது நிலைத்திருக்கும். இதைச் சில நாளில் நன்றும் அறிவீர்கள்.

சுவதனை.—நாங்கள் தவருகக் கொண்ட அபிப்பிராயங் கட்காகக் கோபியாமல் எம்மீது கருணை புரிய வேண்டும். கண்ணனிடத்தும் எங்களைப்பற்றி நல்ல அபிப்பிராயமாகவே சொல்லவேண்டும்.

(செல்கிறர்கள்)



## ஐந்தாமங்கம்—மூன்ருங்காட்சி.

காலம்—மாலை ; இடம்—குசேலர் மனை.

(பத்மவதி, சுசீலை, குசேலர், குணசீலன் முதலானோர்.)

குசேலர்.—குழந்தாய், பத்மா! தமயன் குணசீலனை யிங்கே அழைத்துவா. சில விஷயங்கள் பேச வேண்டுமவனிடத்தில்.

சுசீலை.—அவன் ஏதாவது காரியமாக இருக்கிருனே என்னவோ? அவனுக்கு இப்போது சிரமம் அதிகம்.

பத்மவதி.—என் அப்பா! இவ்விஷயம் இப்போது பேச வேண்டுவது அவசியந் தானே? அல்லது பின்னர் ஆகலாமோ?

குசேலர்.—அவசரமென்றுதானே அழைக்கச் சொல்லுகிறேன் எந்தக் காரியத்தை எப்போது நினைக்கிருேமோ, அதை அப்போதே நடத்திவிடுவது தான் அழகு.

பத்மவதி.—பிதா! குணசீலன் முதலானவருடைய குணங்கள் இப்போது எவ்வளவுபெருமையாகவும் புகழாகவும் பிரகாசிக்கின்றன பாருங்கள். ஒருவருடைய செயலையும் குணத்தையும் காணவேண்டுமானல் வேண்டியவற்றைக் குறைவறக் கொடுத்த பிறகு தான் பார்க்கவேண்டும்.

சுசீலை.—ஏன்! குணசீலன் குணாகரன் பிரதாபன் சுமதி இவர்கள் எப்போதுமே நல்ல குணமுடையவர்கள் தாம். குபோஜனன் முதலானவர்கள் குணங்கள் மாறி இவ்விதம் நல்ல வழிக்கு வந்தது மாத்திரம் ஆச்சரியப்படத் தக்கதுதான்.

குசேலர்.—ஒன்றும் இல்லாதவனுக்குப் பணத்தைக் கொடுத்த கண்ணன் மைந்தருக்குக் குணத்தையும் கொடுக்கத்தானே வேண்டும்.

பத்மவதி.—ஏன் அப்பா! முன் நாங்கள் கண்ணனிடத் திற்குப் போய்வரும்படி வேண்டிக் கொண்ட போது ஸம்மதமில்லாது பல ஸமாதானங்களைச் சொன்னீர்களே. இப்போது நாம் அடைந்திருக் கும் பெருமை யாரால் அளந்து சொல்லமுடியும்? பிள்ளைகட்குத் தக்க இடங்களில் விவாகமாகி அவ ரவர்கள் புத்திமான்களாகத் தங்கள் தங்களுக்கு ஒப்பித்திருக்கும் வேலைகளைத் தலைப்பொறுப்பாக வும் ஸாமர்த்தியமாகவும் நஷ்டமில்லாமலும் பார்த் துக்கொண்டு வருகிறார்கள். நீங்களும் இந்தக் குடும்பக் கவலையே யாதுமில்லாமல் ஸதா பகவத் த்யானபராகிக் க்ரந்தங்களை யாராய்ந்து கொண் டிருக்கலாம். தாயாரும் இதுவரையும் கஷ்டப் பட்டதுபோலில்லாமல், லக்ஷ்மியைப்போல் தமது மருமகளிர் வணக்கத்தோடு ஊழியஞ் செய்து கொண்டுவர ஸுகத்தோடிருக்கலாம். 'அப்பா'

ஒருகாரியம் பாருங்கள். நாம் ஏழைகளாகவிருந்த போது இந்தத் தெருவாரும் ஊராரும் இங்கு எட்டியாவது பார்த்தார்களா? இப்போதோ, அம்மானுக்கு ஓய்வு இல்லாமல் வருவார்க்கும் போவார்க்கும் தக்கஸமாதானம் சொல்லிக்கொண்டிருப்பதே காரியமாகவிருக்கிறது. பெண்களாகிய நாங்களும் பிழைத்திருந்து கல்யாணம் நடந்தபின் புக்ககம் போனால் யாதொரு ஊனமும் இல்லாமல் வாழ்வோம். இதனால்தான் கண்ணபிரானைப் பெரியோர் இஷ்டகாம்யார்த்ததாயகன் என்று சொல்லுகிறார்கள்.

குசேலர்.—குழந்தாய்! நீ மிகவும் புத்திஸாலினி. சமயம் பார்த்து எடுத்துச் சொல்லுகிறாய்.

சுசீலை.—(புன் சிரிப்புச் செய்கிறாள்.)

பத்மவதி.—ஏனப்பா! நான்சொன்னதில் ஒன்றும் குற்றமில்லையே.

சுசீலை.—குற்றமென்ன இருக்கிறது? ஸ்ரீ கண்ணபிரானுடைய அருள் பெற்றார்க்கு எதுதான் கிட்ட அரிதாகும்?

பத்மவதி.—அப்படி எல்லாருக்கும் கண்ணன் அருள் எளிதில் கிடைக்குமா? அப்படித்தான் கிடைத்தாலும் இப்போது நாம் அடைந்திருக்கும் இவ்வளவு பெருமை ஒருகாலும் கிடைக்காது.

சுசீலை.—ஆமாம் அப்படிக் கிடைக்குமென்று யார் சொல்கிறார்கள்? 'கண்ணனுக்குப்ரேமை இவரிடத்தில் மிகுதியாக உண்டு' என்று உலகத்தார் சொல்லிக் கொள்வதால்தானே நாம் வற்புறுத்தினோம்.

குசேலர்.—நீங்கள் சொல்வதெல்லாம் சரிதான். என்றாலும், எனக்கு முன்னிருந்ததுபோல் சுகம் இப்போது இல்லை. ஏனெனில், மனம் இப்போது மிகக்கவலைக்கு ஆட்பட்டிருக்கிறது. நிஷ்டையில் செல்லவில்லை. இன்னுஞ் சிலகாலம் இப்படியிருந்தால் தெய்வமேஇல்லையென்று சொல்வேன்போலு மிருக்கிறது. செல்வத்துக்கு அவ்வளவு ஸாமர்த்தியமுண்டு.

44. களியிற் றெய்வ சிந்தனையுங் கழிந்தே நிற்கு மதுகழிய
அளியிற் சிறந்த நல்லறமு மகன்றே நிற்கு மஃதகல (யும்
ஒளியற் றிடவந்திருளடைந்தாங் குடற்றும்பாவம் வந்தடை
விளியிற் கொடிய நிரயமெலாம் புகுந்துகிடக்கும்வேலை
(மிகும்.

ஆதலால் அதினின்றும் நான் தப்பிக்கவேண்டுவது அவசியமாகும். சிறிது காலம் ஒழிந்தவேளையில் நிஷ்டையில் உட்காருவோமென்றால், ஊரார், யாதும் என்னிடத்து விரும்பாதவராயினும், என் நேசம் பெறுதற்காக வேண்டி அடிக்கடி வந்து வீண் பேச்சுக்களைப் பேசிவிட்டுப் போகிறார்கள்.

45, ஒன்றும் பெறாக் கிலமெனினும்
உற்ற பெருஞ்செல் வத்தினர்பாற்
சென்று சொனுட் புடையரெனத்
தேயஞ் சொலற்கே சிலர்சூழ்வர்
மன்ற வென்று மிலுமோர்பயன்
வழங்க லாரு மெனவூடல்
துன்று நறுநெய்க் குடத்தெறும்பு
சூழ்தல் போலுஞ் சிலர்சூழ்வார்.

இப்படி என்மனம் கவலையடைந்துகொண்டு தபிக்கிறது. அதனால் இப்பெருஞ் செல்வபாரத்தைக் குணசிலனிடத்தில் ஒப்பித்துவிட்டு இருக்கலாமென்று எண்ணியே குணசிலனை அழைக்கிறேன்.

சுசீல.—உங்களுடைய அனுஷ்டானத்துக்கு என்ன தடை? குழந்தை குணசிலன் தக்கவன்தான். புத்திசாலி. அவனிடம் ஒப்பித்துவிட்டு நீங்கள் நிஷ்டையநுஷ்டானங்களைக் காலந்தவறாது செய்யலாம். வருவார் போவார் அவனைக் கண்டுகொள்கிறார்கள். இதற்காகத் தாங்கள் வீட்டைவிட்டுச் செல்லவேண்டுமென்பது இல்லையே.

பத்மவதி.—என் பிதா! நீங்களோ உறுதியான வைராக்கியமுடையவர்கள்; உங்களுக்கு இச்செல்வம் என்ன கேட்டைச் செய்யும்? மந்திர பலமுள்ளவரைப் பாம்பின்வாய்விஷம் என்னதான்செய்யும்? சூரியனை இருள் ஏதாகிலும் செய்கிறதா? பாரும்

ன். அன்றித் தங்களுக்கு இந்தச் செல்வத்தால் கேடுண்டாகுமாகுல் ஸ்ரீ கண்ணபிரான் இச்செல்வத்தைக் கொடுத்தருள்வாரா? ஜனகர் அரசாண்டு தானேயிருந்தார். அவரை யவ்வரசச் செல்வம் என்னசெய்தது? அவர் குருவாகிய ஸதாநந்தர் ஜனகமகாராஜனது மனக்காவலைத் தமது மற்ற மாணுக்கர்க்கும் வெளிப்படுத்திக் காண்பித்தார் என்று நீங்களே எனக்குச் சொல்லியிருக்கிறீர்களே. இப்படிச் செல்வத்தின் தன்மையையும் அதனையடைந்தார் மனவுறுதியோடு கேடடையாதிருத்தலையும் நன்குய்த் தெரிந்த தாங்கள், இச்செல்வத்தைக்கண்டால்பயமாகவிருக்கிறதேஎன்று சொல்வது, எங்களை ஜாக்கிரதையாகவிருக்கும்படிக் கற்பிப்பதற்கேயன்றி வேறில்லையென்று எண்ணுகிறேன். பணக்குவையில் படுத்திருக்கச் சொன்னாலும், பலபெண்களினிடை யிருத்தினுலும், பல தேசத்துக் காசராகத் தங்களை யிருத்தினாலும், தங்கள்மனம் ஆற்றில் கிடந்த கல்லாகுமேயன்றி பசை கொள்ளாது என்று நான் திரமாகச் சொல்வேன். நிஷ்காம பக்தியுடையார் எவ்விடத்திருந்தாலும் உத்தமர்கள் தாம்.

குசேலர்.—என் கண்மணியே! நீ இச்சிறுவயதில் இவ்வளவு விஷயங்களை நினைவில்வைத்திருந்து ஸமயம் வந்தபோது எடுத்துச் சொல்லுந்திறம் மிகவும் வியப்பாகவிருக்கிறது. எனக்குப் பிறந்திருக்கும்

எல்லாரும் பெண்களாகப் பிறந்திருந்து நீ ஒருத்தி மாத்திரம் ஆணாகப் பிறந்திருந்தால் எனக்கு மிகவும் ஸந்தோஷமாகவிருக்கும். அவ்வளவுக்குஈசுவர ஸங்கல்பம் எனக்கு உண்டாகவில்லை.

சுசீலை.—ஏன், பெண்ணாகவிருந்தால்தானென்ன? கார்க்கியும் மைத்திரேயியும் நல்ல புகழைப் பெறவில்லையோ? ஆனால் தக்கவரன் அகப்படவேண்டுமே, அஃது ஒன்றுதான் விசாரம். அந்தப் பொறுப்பும் ஈசுவரனது. நமக்குக் கஷ்டமில்லை. வரன்களும் மேலாடிக் கொண்டிருக்கின்றன.

குசேலர்.—மணத்துக்குப் பிள்ளைகள் மேலாடிவருவது உண்மைதான்; தக்கவரன் வேண்டாமோ?

சுசீலை.—தக்கவரன் இல்லாமலென்ன? நரவாஹனர் குமாரர் பத்மநாபற்கு என்ன? வயதிலாவது அழகிலாவது படிப்பிலாவது குணத்திலாவது நடத்தையிலாவது குறையுண்டோ? நன்றாய்ச் செய்துவிடலாம்.

குசேலர்.—அந்த வரனுக்கு நீ சொல்கிறபடி ஒன்றும் குறைவில்லைதான் நரவாஹனரும் மிகவும் நல்லவர். ஏழையாயிருந்தாலும் குற்றமில்லை குணசாலி. அவர் பத்தினி வாக்கில்கெட்டவளாயிற்றே என்று ஆலோசிக்கிறேன்.

சுசீலை.—அவள் எப்படி யிருந்தாலென்ன? அப்படித் தான் தாறுமாறாகப் பேசுவளென்றாலும் உங்கள் குமாரத்தியைத் தன் குமாரனுக்குக் கலியாணம் பண்ணும்படியான விஷயம் கேர்ந்ததானல் பெட்டிப்பாம்புபோல அடங்கியிருப்பள். எனக்கு இன்னொருவரிடம் த்வேஷம் தோன்றவே தோன்றாது.

குசேலர்.—எல்லாம் இருக்க அவளால் உனக்கு என்ன வருத்தமுண்டு? குழந்தைக்கு அல்லவா கஷ்டம்?

சுசீலை.—ஆமாம், அதற்கு ஆலோசிக்க வேண்டியதே தான்.

பத்மவதி.—ஆலோசனை என்ன வேண்டும்? புருஷ னுடைய வாக்கும் கையும் மனமும் நன்மையாக விருந்தால், இருந்தவள் அடங்கித்தானிருப்பள் மாமியார் நல்லவளாக இருக்க வேண்டுமேயென்று முழு மூடனுக்கும் குருபிக்கும் பெண்களை விவாஹம் செய்து கொடுக்கக் கூடாது பெற்றோர் கள். ஆனல் எல்லாவற்றிற்கும் ஈசுவர ஸங்கல்பமும் கர்மபரிபாகமுமல்லவோ குறுக்கிட்டுக் கொண்டிருக்கின்றன. இவற்றைக்கடைப்பிடித்தே நாமும் முயலவேண்டும்.

குசேலர்.—கண்ணே! உன்குணத்துக்கும் வார்த்தைக்கும் படிப்பிற்கும் உலகமேபணிதலையடையும். உன்னை எங்கு மணஞ்செய்து கொடுத்தாலும், அந்த வீடு,

குணம் குலம் பணம் பயன் இவற்றிற்கு ஆகரமாகி விளங்குறும் என்பதில் ஸந்தேஹமில்லே. உனக்காகவே எனது குடும்ப வைராக்கியமுமொழிந்து போயிற்றல்லவா, பார்.

சுசீலே.—சரி. அவளுக்கு அந்த வரனில் ஸம்மதந்தான். அவர்களும் நடையாக நடந்து கொண்டிருக்கிறார்கள்.

குசேலர்.—நல்லது அப்படியே நடத்திவிடுவோம். குணசீலனது ஸம்மதத்தை விசாரிக்கவேண்டாமா?

சுசீலே.—அவன் ஸம்மதத்திற்கு என்ன? பிதுர்வாக்குக்கு எதிர்வாக்கு அவனிடத்தில் இல்லே.

பத்மவதி.—என் அப்பா! அவர்களிருவரும் நல்ல சிநேகிதர்களாயிற்றே, ஸம்மதத்தில் குறைவென்ன இருக்கப்போகிறது?

குசேலர்.—குழந்தாய்! போய்த்தமயனேயிங்குவரச்செய்.

(பத்மவதிசெல்கிறாள்; குணசீலன்வந்து நமஸ்கரித்துநிற்கிறான்.)

அப்பா! குழந்தாய் உட்கார்.

குணசீலன்.—(வணக்கத்தோடு உட்காருகிறான்.)

குசேலர்.—குணசிலா! நமது நில வகைகளே நன்றாகக் கவனித்து வருவாயென்று எண்ணுகிறேன். நமது குருமூர்த்திக்கென்று விடபட்டிருந்த சாந்தீபினி என்னும் நிலத்தை வெகு கவனத்துடன் உழுது

பயிரிடச்செய்துக் கண்டுமுதலை நேரவே அவர்கள் ஆச்ரமத்துக்கு அனுப்பிவிடு. ஆராதனத்துக்கும் அதிதிகளுக்கும் என்றுவிடப்பட்டிருந்த நிலங்களையும் அப்படியே கவனித்து அவற்றினின்றும் ஒரு புல்கூட நமது குடும்பத்துக்குப் பிரயோஜனமாகாவண்ணம் பத்திரம் பண்ணவேண்டும். பெண்கள் ஒவ்வொருத்தி பெயராலும் விடப்பட்டிருக்கிற நிலங்களையும் அப்படியே கவனித்து, அவற்றின் பலன்களைப் பொன்னாக்கிச் சேர்த்து வைத்திருந்து, அவர்கள் விவாஹத்திற்குப் பின்னர் புக்ககத்துக்குப் போகும்போது ஸ்திரீதனப் பொருள்களுடன் அந்நிலங்களை அவருக்கே சொந்தப் படுத்திவிடவேண்டும். இவற்றைத்தான் நான் உனக்குச் சொல்ல வேண்டுமென்றிருந்தேன். நீங்கள், உடன் பிறந்தவர்கள், மிகவும் அந்யோந்யமாகவிருக்கவேண்டியது. அவர்களுக்குப் புத்தி கற்பிப்பதோ நல்வழிக்குத் திருப்புவதோ விவாஹம் நடத்திவைப்பதோ எல்லாம் உனது பாடுதான். நான் இங்கு இருந்தாலும் இவற்றைக் கவனிக்கும்படி வைத்துவிடாதே. ஏகவேளை போஜனத்தோடு நிஷ்டையிலிருப்பதுதான் எனது தேர்ந்த அபிப்பிராயம்.

சுசீலை.—அவனுக்கு ஒன்றும் சொல்லவேண்டுவதில்லை. நமது குழந்தைகளையிதுவரையில் குணப்படுத்திக்

கொண்டுவந்தவன் அவன்தானே. இன்னும் அப்படியே நடத்துவான். அவர்களும் இவனிடத்தில் மிகுந்த பக்தியோடு நடக்கிறார்கள். இனி, நமது குடும்பம் பெருமையிலும் ஸம்பத்திலும் குணத்திலும் விருத்தியாகியேவருமென்பதில் தடையில்லை. நீங்கள் அந்த விசாரத்தை விட்டுவிடுங்கள்.

குசேலர்.—நான் கவலையை ஒழித்துவிட்டேன் என்பதைச் சொல்வதற்கென்றுதான் குழந்தையையிங்கே.——

சுசீலை.—சரி, குழந்தையை அனுப்பலாமல்லவா? நாழிகையாயிற்று; யாராரோ காத்திருக்கிறார்கள்.

குசேலர்.—சரி, போய்வா அப்பா!

(குணசிலன் வணங்கிச் செல்கிறான்.)

சுசீலை.—ஸ்ரீ கண்ணபிரான் அருள் இருப்பார்க்கு எவ்விதத்திலும் குறைவுண்டாகாது என்பதற்கு நமது சரித்திரமே ஒரு தகுந்த திருஷ்டாந்தமாகும் என்பதில் தடையில்லை. நமக்கு நடந்த விஷயம் ஆச்சரியந்தான். சில வருஷங்களுக்கு முன் மிகுந்த தரித்திரத்துடன் கூடியிருந்த நமக்கு அஷ்டைச்வர்யமும் பொங்கிப் பூமகளும் தாண்டவமாடிக்கொண்டிருக்கிறாளே. நமக்குத் தனங்களையும் வீடுகளையும் பூமிகளையும் வலுவில் கொடுத்துப்போன இத்தனை அரசர்களில் எவரையாவது

நீங்கள் ஒரு முறையாவது போய்ப் பார்த்தது உண்டா? எல்லாம் ஸ்ரீகண்ணபிரானது கட்டளையாலேயே நடந்தேறின. அவரைப் பார்க்க நீங்கள் போனபோது இன்சுவையில் பக்குவமான பணியாரங்கள் செய்துகொண்டு போகவும் நம்மாலே இயலாமற் போய்விட்டது. ஏன் நாதா! நீங்கள் கொண்டுபோன அந்த அவலை எம்பிரானுக்குக் கொடுத்தீர்களோ?

(இதனைக் கேட்டுக்கொண்டே பத்மவதி வருகிறாள்.)

குசேலர்.—இப்போது தான் எனக்கு நினைவு வருகிறது. அந்தப் பிரபு செய்த ராஜோபசாரத்தினால் அதனைக்கொடுக்க நாணினேன். அவரும் வாய் திறந்துகேட்டார். நான் பதில் சொல்லவேயில்லை; அங்கு ஒன்றுந்தான் தோன்றவேயில்லையே. அவர் செய்தஉபசாரங்களுக்கு ஸ்தோத்ரம் செய்தேனோ அதுவும் இல்லையே; அல்லது, பிரதியாக உபசாரமாவது செய்தேனோ அதுவுங்கூட இல்லை. என்னவோ என்மனத்தில் இருந்த பக்தியை எடுத்துக் காண்பிக்க முடியவேயில்லை.

பத்மவதி.—கண்ணபிரானுக்கு ஒன்றும் எடுத்துக் காண்பிக்கவும் வேண்டாம்; எடுத்துச் சொல்லவும் வேண்டாம். இங்கிதத்தினால் அறிந்துகொள்ளக்கூடியவரல்லரா அவர்!

சுசீலை.—என் காதா! ஆனால், அந்த அவல் முடிந்த கந்தையை என்ன செய்தீர்கள்?

குசேலர்.—அதுவா!— ஓஹோஹோ!! தைலந் தேய்த்துக்கொள்ள எழுந்தபோது அவர்தாம் அந்தத் துணியை எடுத்துக் கொண்டார்.

பத்மவதி.—அவர் எடுத்துக் கொண்டாரல்லவா? அவர் அதை ருசி பார்த்திருப்பார். இல்லாவிடில் நமக்குச் சம்பத்து விளைந்திராது. என் பிதா! நீங்கள் தான் சொல்லியிருக்கிறீர்களே, 'பகவான் பக்தரிடத்தில் ஏதாகிலும் கிரஹித்துக் கொண்டுதான் பக்தரது இஷ்டகாம்யங்களைப் பூர்த்தி செய்வார்' என்று. அஃதேன் மறந்துவிடுகிறீர்கள்.

குசேலர்.—கவலைதான் அம்மா,

சுசீலை.—ஏன்? நாழிகையாயிற்றே! நிஷ்டாபங்கம் வேண்டாமே.

குசேலர்.—சரி, குழந்தாய்! போவோமா? அடடா ஒன்று மறந்துவிட்டேனே.

சுசீலை.—என்ன அது?

பத்மவதி.—என்னப்பா மறந்துவிட்டீர்கள்?

குசேலர்.—குழந்தை குணசீலனிடத்தில் பத்மவதியின் விவாக விஷயத்தைப் பற்றிச் சொல்ல மறந்து விட்டேன்.

சுசீலை.—நல்ல விசாரமிது பிறகு சொல்லிக் கொள்ளு கிறது தானே.

குசேலர்—சரி, அப்படியே செய்வோம்.

(பிறகு அப்படியே பத்மவதிக்கு உத்தேசித்த இடத்தில் கல்யாணம் செய்துகொடுத்து. மற்றப் பெண்கட்கும் தக்கவயதில் தக்க தக்க இடங்களில் விவாகம் செய்துகொடுத்து யாவரும் அவரவர் கிருஹங்களில் ஸௌக்யமாக வாழ்கிறார்கள்.)



## பின்னுரை.

---

(சூத்திரதாரரும் விதூஷகனும் பிரவேசிக்கிறார்கள்.)

விதூஷகன்.—வாருங்கள் நண்பரே! தாங்கள் ஆரம்பித்து நடத்திய இந்த நாடகத்தால் ஜனங்கள் மிகவும் களிப்படைந்திருக்கிறார்கள் என்று எண்ணுகிறேன்.

சூத்திரதாரர்—ஆம். கதாநாயகர், நிரசாக்தரான ஸுதாமர், ஆகையால் நல்லமனமுடையார்க்கு அவரது குணாதிசயங்களைக்‌ கேட்கவும், அது நடிக்கப்படப் பார்க்கவும் பிரியந்தானே. அதனால் களிப்புண்டானது ஆச்சரியமாகாது.

விதூஷகன்.—ஆமாம். இச்சரிதத்துள் அமைந்துகிடக்கும் நீதிகளெவை?

சூத்திரதாரர்.—"செல்வமென்பது சிந்தையின் நிறைவே" என்பதும், "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்பதும், "வாழ்க்கைத்துணையாகிய மனைவி மாண்புடையளாகில் எப்பேறும் பெறலாகும்" என்பதும், "யார்க்கும் அறிவு இயற்கையில் பொருந்தியுள்ளது, அது செயற்கையால் பண்படுத்தப்படின் எப்போதும் நல்ல பயனையே விளைக்கும்" என்பதும், "நல்ல மனமுடையார்

விரும்பின பொருள்களை அவர்களுக்கு ஈசுவரன், ஸ்ரீமான்கள் அரசர்கள் இவர்கள் தமைக்கொண்டு அளித்தருள்வன்'' என்பதும், "செல்வக்குவையில் இருப்பினும் நல்லவர் மனம் தாமரையிலை நீர்போல இருக்கும்'' என்பதும், "முன்னே கலங்காமல் துன்பம் அனுபவித்தவர், பின்னே விலங்காமல் வீறுபெறுவர்'' என்பதும் விளங்குகின்றனவல்லவா? இன்னவாய நீதிகளைக் கற்பிக்கும் சரிதங்களைக் கேட்பதினும் நடிக்கப் பார்ப்பதே உள்ளத்தைத்திருத்துவதில் உறுதி பெறும்.

விதூஷகன்.—ஆமாம். இந்தச் சரிதத்தில் கனகம் என்னும் பெண்ணொருத்தியும், துன்முகன் துந்திலன் என்னும் இரண்டு காவலரும் தோன்றிக் கதாநாயகரையும் கதாநாயகியையும் இகழ்ந்துரையாடினர்களே, அவை வேண்டுவனதாமோ?

சூத்திரதாரர்.—ஆம். அவைகள் இழிப்புச் சுவையையும் நகைச் சுவையையும் உணர்த்துகின்றன. இவை ஒரு நாடகத்தை உயர்த்துகின்றனவன்றோ?

விதூஷகன்.—கதாநாயகரான ஸுதாமருக்குக் குசேலர் என்னும் பெயர் வரக்காரணமென்ன?

சூத்திரதாரர்.—அன்னார் குற்சிதமான சேலையை அதாவது இழிந்து அழகு குறைந்த ஆடையை உடைய

ராகி இருந்தமையால், அப்பெயர் அவருக்குக் காரணப் பெயராயிற்று.

விதூஷகர்.—அவருக்கேற்பக் கதாநாயகியாகிய சுசீலை யும் மனமொத்த மாண்புடைப் பெண்டிராகி இருந்தமையானன்றோ, நல்லவரும் அல்லவரும் மதிக்குமிந் நல்வாழ்வு பெற்றனர்?

சூத்திரதாரர்.—ஆம்; அதிற்சந்தேகம் என்ன? கதா நாயகியாகிய சுசீலை மிக்கப் பொறுமையும் கற்பும் வாய்ந்திருந்தமையினாலேயே, தீரசாந்தரான கதா நாயகர்க்குச் சாந்தையான கதாநாயகியாகப் பொருந்தினள். அவள் வறுமையின் நிமித்தம் பசி பொறுத்தது உண்மையால் க்ஷுத்க்ஷாமா என்னும் காரணப் பெயரும் உடையாள்.

விதூஷகர்.—இக்கதையினைக் கண்டு களித்துள்ளவர் களாகிய இருபாலாரும், நமது ஸுதாமர் சுசீலை என்பார்போல இல்லறத்தைச் செவ்வனே நடாத்தி இன்புற்றுப் புத்திரப்பேறும் செல்வமும் பெற்று மகிழ்வர் என்று எண்ணுகிறேன்.

சூத்திரதாரர்.—ததாஸ்து. ஈசன் அருள்புரிக. இப்படிக் குடும்பம் உயரக் குலம் உயரும். குலமுயரக் கோல் உயரும். கோலுயரக் கோனுயரும். குடி கள் நற்றவராயின் கோனும் கொற்றவனாவான், அங்ஙனமே நங்கோமானாகிய,

அங்கில மன்னரா மைந்தாஞ் ஜார்ஜூம்,
வெங்கோலுடைய விரவலர்ச் செற்று,
பொங்கோதஞ்சூழ் புவியைப் புரந்து,
தங்குடைக் கீழே தாரணியோர் வாழ,
சங்கொடு சக்கரஞ் செங்கையிற் கொண்ட,
செங்கண் மாலெனச் சிறக்கவெத் திசையுமே.

ஸ்தோத்ரம்.

---

குடம்புரை செருத்தற் கோவு மந்தணரும்
குறைவறு சுபம்பெற வென்று
மிடங்கொள் பல்லுலகு மிகுசுக முறுக
வென்று மாரியரு மோனியருந்
திடம்பட வென்று மென்புரந் திடுக
திரைக்கடல் கிழியமத் தெறிந்து
மடப்படு மவுணர்ச் சவட்டியொள் ளமுதம்
வானவர்க் கூட்டிய முதலே.

---

மன்னு மாமறை வாழி மறையவர்
பன்னு மான்முகில் வாழிகற் பார்த்திவர்
மின்னு நீதியும் வாழி மிகுநல
மென்னு மிக்கதை யின்றமிழ் வாழியே.

(மறைகிறார்கள்.)

முற்றும்.

# பிழைதிருத்தம்.

| பக்கங்கள். | வரிகள். | பிழைகள். | திருத்தங்கள். |
|---|---|---|---|
| 1. 5. 7, | 7. 21. 4. | சுசிலாய்! | சுசிலா! |
| 17. | 8. | சிதாய்! | சிதா! |
| 4, 5. 19. | 22.13. 9. | | |
| 23. 25. | 24. 10. | | |
| 107. 119. | 22, 18 | அது | அஃது |
| 162. 165 | (7. 23.) | | |
| 169. 175. | 6. 12. | | |
| 74. 89. | 5. 5. | தனக்குள் | தமக்குள் |
| 132. | 10. | | |
| 66. | 14. | பெண் நாப் | பெண்புகாப் |
| 2. 7. 27. | 2.14.11. | | |
| 46. 64. | 16. 9. | | |
| 77. 93. | 6. 7. | இது | இஃது |
| 115.123. | 21. 2. | | |
| 161. | 23. | | |
| 2.94.168 | 22 4. 25. | அல்லவா? | அல்லரா? |
| 8. | 13. | நிஷ்டைக்கு | பூஜைக்கு |
| 13. | 14. | வருத்தப்படுவதி | வருத்தப்படுவதில் |
| 18. 20 | 1. 1. | காட்சி | மூன்றுங் |
| 22. 24. | 1. 1. | | |
| 19. 21. | 1. 1. | இரண்டாங் | காட்சி |
| 23. | 1. | மூன்றுங் | காட்சி |

| | | | |
|---|---|---|---|
| 29. | 8. | புனத்துழாய் கண்ணி | புனத்துழாய்க் கண்ணி |
| 30. | 3. | வினக்குகின்றன | விளங்குகின்றன |
| 33. | 12. | செல்லலாஞ் | சொல்லெலாஞ் |
| 36. | 7. | கவறையும் | கவற்றையும் |
| 44. | 26. | நன்று | நன்கு |
| 63. | 3. | யாவருக்கும் | யாருக்கும் |
| 71. | 24. | மாபெருங் | மாப்பெருங் |
| 73. | 7. | என்னமோ | என்னவோ |
| 77 | 5. | மற்றவர்களைப் பற்றி | மற்றவர்களை |
| 93. | 24. | பொழிந்திருந்த | பொழித்திருந்த |
| ,, | 19. | செய்வர் | செய்வார் |
| 94. | 2. | திருத்துவதாகவே | திருத்துவதற்காகவே |
| 96. | 18. | மஹானை | மஹான் |
| 88. | 8. | ஸுலமாக | ஸுலபமாக |
| 89. | 3. | மாலை | பிற்பகல் |
| 97. | 10 | கஷ்டத்தை | கஷ்டங்களை |
| ,, | 10. | அடக்கமுடியாது | எழுதிமுடியாது |
| 103. | 2. | சேர்க்கை | செயற்கை |
| 106, | 4. | இத்தனை துயரம் | இத்தனைத் துயரம் |
| 113. | 8. | தனக்கு | தமக்கு |
| 114. | 23. | இருக்கின்றது | இருக்கின்றன |
| 116. | 21. | சவேதா! | சுதேவா |
| 121. | 10. | அதனை | இதனை |
| ,, | 13. | உத்தமக்கவி | உத்தமகவி |
| 122. | 20. | கொண்டிருக்ககிறார்கள் | கொண்டிருக்கிறார்கள் |

| | | | |
|---|---|---|---|
| 124. | 22. | தெருக்சுவரில் | தெருச்சுவரில் |
| 136. | 4. | திங்கிக்கிட்டும் | திக்கட்டும் |
| 140. | 18. | மெய்ஞ்ஞானி | பொய்ஞ்ஞானி |
| 141. | 4. | நியமமமில்லை | நியமமில்லை |
| 161. | 10. | மெய்மறந்திருப்பதை | மெய்ம்மறந்திருப்பதை |
| 162. | 14. | நிகழக்கூடாது | நிகழக்கூடா |
| ,, | 16. | இன்று தமது | இன்றுத்தமது |
| 163. | 18. | தேவியர் | தேவியார் |
| 171. | 4. | ஏழைபிராமணர் | ஏழைப்பிராமணர் |
| 175. | 6. | நீங் | நீங்கள் |
| ,, | 11. | சுந்திரமுகி | சுந்தரமுகி |



*Copies are available at:—*

1. M. V. Govindaraja Ayyangar,

"Lokamitra" Vilas'

KARAIKUDI

*Ramnad District.*

2. The Manager,

Karpaka Vinayaka Kalanilai,

KONAPET

*Pudukkotta State.*

3. AR. RM. Subramanian Chettiar Avl.

Nattukkotti Bank,

*Syyaji Rao Road.*

MYSORE.

Wrapper bound Rs. 1-0-0

Calico bound ,, 1-4-0